விகடன் பிரசுரம்

# இந்திய வானம்



எஸ்.ராமகிருஷ்ணன்

## இந்திய வானம் - 1
### எஸ்.ராமகிருஷ்ணன், ஓவியங்கள்: ரமேஷ் ஆச்சார்யா

### மூன்றாவது சிறகு

சில ஆண்டுகளுக்கு முன்னர் அசாமில் உள்ள மாஜூலி தீவுக்குப் போவதற்காக, ஷோர்ஹாத்தின் நிமாடி காட் படகுத்துறையில் காத்திருந்தேன். பிரம்மபுத்திரா நதியை, படகில் கடந்து போக வேண்டும். கண் முன்னே பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருக்கிறது பிரம்மபுத்திரா. படகில் ஏறுகிறேன். வறண்டுபோய் புழுதி பறக்கும் எனது ஊரை நினைத்துக்கொள்கிறது மனம். தண்ணீருக்காக கோடையில் குடம் ஏந்தி வெயிலில் அலைந்த பெண்கள் நினைவுக்கு வருகிறார்கள். படித்த அரசுப் பள்ளி, நடந்து போன கரிசல் நிலம், கொதிக்கும் சூரியன், கருவேலமரங்கள், வேம்பம்பூக்கள் என நினைவு கிளைகள் விரிக்கிறது.

எனது ஊர், அசாமில் இருந்து எங்கோ வெகுதொலைவில் இருக்கிறது. ஆனால், எனது ஊருக்கும் இதே சூரியனும் ஆகாயமும்தான். இதே காற்றின் அடுத்த மடிப்பு, எனது ஊரில் வீசிக்கொண்டிருக்கும். படகு செல்லச் செல்ல புறக்காட்சிகளில் மனம் ஒன்றாமல், கடந்த காலத்துக்குள்ளே அமிழ்ந்து கிடக்கிறது. ஏதோ ஒரு சிறிய கிராமத்தில் விளையாட்டுச் சிறுவனாக அலைந்து திரிந்த நான்தான், இன்று இந்தியாவின் இன்னொரு கோடியில் படகில் போய்க்கொண்டிருக்கிறேன். நானும் ஒரு பறவையே!



பயணத்தின் வழியேதான் என் வாழ்வை மேம்படுத்திக்கொள்கிறேன். பயணம், கற்றுத்தருகிறது; பரஸ்பர அன்பையும் நட்பையும் உருவாக்குகிறது. பயணத்தில்தான் நம்மை நாமே அடையாளம் காணத்தொடங்குகிறோம்.

ஒரே வானம்தான் என்றாலும், ஒவ்வொரு பறவையும் ஓர் இலக்கை நோக்கிப் பயணிக்கிறது. சில பறவைகள் தனியே பறக்க விரும்புகின்றன. எனக்கு கழுகைப் பிடிக்கும். அது மிக உயரத்தில் பறக்க விரும்புகிறது. மொத்த வானமும் தன் ஒருவருக்கே என்பதுபோல தனியே அலைகிறது. கழுகு பயம் அற்றது. அதன் கூர்மையான கண்கள், இரையை எங்கு இருந்தாலும் கண்டுகொள்கின்றன. காத்திருந்து அடைகின்றன. கழுகின் ஆவேசம் என்னை எப்போதும் எழுச்சிகொள்ளச் செய்கிறது. அதே கழுகுதான் தனது குஞ்சுகளை மிகுந்த அக்கறையோடும் பாசத்தோடும் கவனித்துக்கொள்கிறது.

பறவைகள், சிறகுகளால் மட்டும் பறப்பது இல்லை; பறக்க வேண்டும் என்ற இடையறாத வேட்கையால், மனதால்தான் பறக்கின்றன. அதுதான் கண்ணுக்குத் தெரியாத மூன்றாவது சிறகு. நமக்குள்ளும் அந்த மூன்றாவது சிறகு இருக்கிறது. அதை விரித்துப் பறக்க, நாம் எத்தனிப்பது இல்லை.

வாழ்க்கை, பரமபதக் கட்டத்தைவிடவும் புதிரானது. எந்த ஏணி ஏற்றிவிடும், எந்தப் பாம்பு இறக்கிவிடும் எனத் தெரியாது. அதைவிடவும் எது பாம்பு, எது ஏணி எனக் கண்டுகொள்வதும் எளிதானது இல்லை. ஆனாலும் விளையாடிக்கொண்டே இருக்க வேண்டும்.

என்னோடு இருந்த பயணிகள், புகைப்படம் எடுத்துக்கொள்கிறார்கள்; சந்தோஷத்தில் கூச்சலிடுகிறார்கள். 'நான் ஏன் இதில் என்னைக் கரைத்துக்கொள்ளாமல் இப்படிக் கடந்த காலத்தின் நினைவுகளில் மிதக்கிறேன்?' என என்னை நானே கேட்டுக்கொண்டேன். இயல்பே அப்படித்தான். சொந்த ஊரில், விருப்பமான மனிதர்களுடன் வாழ்ந்துவிட முடியாது. அதுதான் இன்றைய உண்மை. ஒன்றை இழப்பதைக்கூட மனம் தாங்கிக்கொள்கிறது. ஆனால், அதுகுறித்த நினைவுகளைத் திரும்ப எழுப்பி அதைப் பற்றி ஏங்கவைக்கிறது.

ஒரு கல், கல்லாகவே இருக்க விரும்புகிறது; ஒரு மரம், மரமாகவே இருக்க ஆசைப்படுகிறது. ஆனால், உலகம் அப்படி எதையும் அதன் ஸ்திதியில் வாழ அனுமதிப்பது இல்லை. எல்லா பொருட்களும் தாமாகவே

இருக்கவேண்டியே முயற்சி செய்வதாகத் தத்துவவாதி ஸ்பினோஸா கூறுகிறார். உண்மைதான்.

'திரும்பிப் பார்' என உலகம் மனிதர் களுக்கு எப்போதுமே சொல்லிக்கொண்டிருக்கிறது. திரும்பிப் பார்ப்பது என்பது வெறும் தலை திருப்புதல் இல்லையே. நேற்றை, அதன் முந்தைய நாளை, கடந்த வருடங்களை, கடந்த நூற்றாண்டை, ஏன் இந்தப் புவியில் மனிதன் வாழத் தொடங்கிய காலம் முதல் இன்று வரை தொடரும் வாழ்வின் பக்கங்களை நினைவுகொள்ளுதல்தானே திரும்பிப் பார்த்தல். இதன் தீவிரமான, ஆதாரங்களுடன்கூடிய தொகுப்பே வரலாறு ஆகிறது.

குகை மனிதன் காலத்தில் இருந்து இன்று நாம் வந்து சேர்ந்திருப்பது மிக நீண்ட தூரம். மிகப் பெரிய வளர்ச்சி. ஒரு நூற்றாண்டு இன்னொரு நூற்றாண்டை வென்று கடக்கிறது. அதிலும் அறிவியலிலும் தொழில்நுட்பத்திலும் கடந்த *100* வருடங்களில் மனிதன் அடைந்துள்ள சாதனைகள் ஒட்டுமொத்த நாகரிக வளர்ச்சியில் அடைந்த வெற்றிகளைவிட அதிகம்.

நாம், அதிநவீன யுகத்தில் வாழ்கிறோம்; அதிநவீனக் கருவிகளை உபயோகிக்கிறோம். ஓர் இரவுக்குள் உலகில் ஒரு கோடியில் இருந்து மறுகோடிக்குப் போய்விடுகிறோம். பணமும் வசதியும் மனித வாழ்க்கையைப் பெரும் அளவு மாற்றியிருக்கின்றன. ஆனால், மனித சந்தோஷங்கள், துக்கங்கள், வெற்றி - தோல்விகள், இழப்புகள் அனைத்தும் காலம்காலமாக அப்படியே இருக்கின்றன. குற்றங்களையும் கலவரங்களையும் அதிகார வெறியாட்டங்களையும் காணும்போது, உலகம் பின்னால் போய்க்கொண்டிருப்பதுபோலவே இருக்கிறது.

'பாக் மில்கா பாக்' - ஓட்டப்பந்தய வீரர் மில்கா சிங் வாழ்க்கையை மையமாகக்கொண்ட இந்திப் படம். அதில் முக்கியமான ஒரு பந்தயத்தில் ஓடும் மில்கா சிங், எல்லையை நெருங்கியபோது தன்னை அறியாமல் பின்னால் ஓடி வருகிறவரைத் திரும்பிப் பார்க்கிறார். ஓட்டப்பந்தய வீரர்கள் ஒருபோதும் திரும்பிப் பார்க்க மாட்டார்கள். இலக்கு முன்னால் மட்டுமே என்பதே அவர்களுக்கான பாலபாடம். ஆனால், மில்கா சிங் பின்னால் திரும்பிப் பார்க்கிறார். அவரது கடந்தகால நினைவுகள் வந்துபோகின்றன. இந்தியப் பிரிவினையின்போது அவரைக் கொல்வதற்காக வாளோடு துரத்திய கும்பல் கண்ணில் தெரிகிறது.

கண் முன்னே இறந்துபோன தாயும் உறவினர்களும் நினைவுக்கு வருகிறார்கள். முரட்டுக் குதிரையில், உயர்த்திய வாளுடன் கொல்லத் துரத்தியவர்களிடம் இருந்து தப்பி ஓடியதுதான் அவரது முதல் ஓட்டம். அந்த வலி மனதில் மீண்டும் தோன்றுகிறது. அவரால் தொடர்ந்து ஓட முடியவில்லை. தோற்றுப்போகிறார். உலகமே அவரைக் குற்றம் சொல்கிறது. அதற்கு மில்கா சிங் பதில் சொல்கிறார். கடந்தகாலம் என் கால்களைக் கட்டிப்போடுகிறது. ஆனால், அதைத் தாண்டிச் செல்லவே போராடுகிறேன்.

படத்தின் முடிவில் அவர் அடையும் இமாலய வெற்றி என்பது, கடந்த காலத்தின் வலிகளை அவர் வென்றதன் அடையாளம்.

நம் ஒவ்வொருவரையும் கடந்த காலத்தின் ஒரு காட்சி இப்படித் துரத்திக்கொண்டுதான் இருக்கிறது. அதை நினைவுகொள்ளவே கூடாது என மூடி புதைத்து வைத்தாலும் நினைவுக்குடுவை தானே திறந்துவிடுகிறது. அதை வென்று கடக்கவே பலரும் விரும்புகிறார்கள். கடந்தகாலம் சிலருக்கு சந்தோஷமானது; பலருக்கோ அது ஒரு துர்கனவு. எதிர்காலம் குறித்து, எப்போதாவதுதான் யோசிக்கிறோம்; கனவு காண்கிறோம். ஆனால், கடந்தகாலம் குறித்தோ அடிக்கடி நினைத்துக்கொள்கிறோம். கடந்த காலத்துக்குள் செல்ல, நமக்கு கால இயந்திரம் தேவை இல்லை; ஒரு கறுப்பு - வெள்ளைப் புகைப்படம் போதும். அதுதான் உண்மையான கால இயந்திரம். அதிலும் குடும்பப் புகைப்படமாகவோ, காதலியின் புகைப்படமாகவோ இருந்துவிட்டால் போதும், நீங்கள் தானாகவே காலத்தின் பின்னே போய்விடுவீர்கள். புகைமூட்டமான அந்த இனிய தருணத்தில் மீண்டும் பிரவேசித்து, சந்தோஷம்கொள்வீர்கள்.

’டைட்டானிக்’ படத்தின் தொடக்கத்தில் ரோஸ், வயதான பாட்டியாக அறிமுகமாகிறாள். அப்போது அவள் களிமண்ணைக்கொண்டு பானை செய்துகொண்டிருக்கிறாள். அது ஒரு குறியீடு எனக் கொள்ளலாம். தற்செயலாக டி.வி-யில் வெளியாகும் செய்தியில், கடலில் கண்டெடுக்கப்பட்ட தனது ஓவியத்தைக் கண்டு ஆய்வுக் கப்பலைத் தொடர்புகொள்கிறாள். அங்கே செல்லும் ரோஸ், மூழ்கிப்போன ’டைட்டானிக்’ கப்பலில் கிடைத்த கண்ணாடி ஒன்றை எடுத்து முகம் பார்க்கிறாள்.



அது அவளது கண்ணாடி, எத்தனையோ ஆண்டுகளாகக் கடலில் மூழ்கிக்கிடந்திருக்கிறது. தற்போது அதில் அவள் முகத்தைக் காணும்போது கண்கள் கலங்குகின்றன. அந்தக் கண்ணாடி அவளது இளமையின் அடையாளம். ரோஸ் தனது கடந்தகாலத்தை நினைவுகொள்ளத் தொடங்குகிறாள். அவள் பேசுவது டைட்டானிக் கப்பலைப் பற்றி மட்டும் அல்ல... மூழ்கிப்போன தனது காதல் நினைவுகளையும்தானே! இந்தக் காட்சி இல்லாமல் நேரடியாக 'டைட்டானிக்' படம் தொடங்கியிருந்தால் இத்தனை மனபாதிப்பை ஏற்படுத்தியிருக்குமா என்பது சந்தேகமே. கடந்தகாலத்தின் சில வாசகங்கள் நிகழ்காலத்தின் வெளிச்சமாக மாறியிருக்கின்றன.

உலகெங்கும் சூழலியல் அறிஞர்கள், இயற்கை ஆர்வலர்கள் சிவப்பிந்திய தலைவர் சியாட்டில் ஆற்றிய உரையைக் கொண்டாடுகிறார்கள்.

சியாட்டில் - வாஷிங்டன் மாநிலத்தில் அமைந்துள்ள நகரம். சிவப்பிந்தியத் தலைவர் பெயர்தான் சியாட்டில்.

*1854*-ம் ஆண்டில் செவ்விந்தியர் வசம் இருந்த சுமார் இரண்டு மில்லியன் ஏக்கர் நிலத்தை, அமெரிக்க அரசாங்கம் விலைக்குக் கேட்டது. குடியரசுத் தலைவர் பிராங்க்ளின் பியர்ஸ் அதற்கான ஒப்பந்தம் செய்துகொள்வதற்காக கவர்னர் ஐசக் ஸ்டீவன்ஸனை அந்தப் பகுதிக்கு அனுப்பினார். நிலத்துக்கான விலையாக ஒரு லட்சத்து ஐம்பதாயிரம் டாலர் தர அரசாங்கம் முன்வந்தது. வாழ்நிலத்தைக் கையகப்படுத்த அரசு நினைக்கும்போது, அதை யார் தடுக்க முடியும்? சியாட்டில் தனது பூர்வகுடி மக்களின் நிலைப்பாட்டை ஓர் உரையின் வாயிலாக வெளிப்படுத்தினார். ஈடுஇணையற்ற உரை அது.

அந்த உரையை சியாட்டில் தனது சுகுவாமிஷ் மொழியில் நிகழ்த்தினார். டாக்டர் ஹென்றி ஸ்மித் என்பவர் அதை ஆங்கிலத்தில் படியெடுத்து வெளியிட்டார். 'சன்டே ஸ்டார்' பத்திரிகையில் சியாட்டிலின் உரை வெளியானது. பின்பு ஓர் ஆவணப்படத்துக்காக டெட்பெரி என்கிற பேராசிரியர், சியாட்டிலின் உரையைத் திருத்தங்கள் செய்து மாற்றினார். இப்போது நாம் படிப்பது டெட்பெரி எழுதிய வடிவமே.

சியாட்டிலின் உரையில் இருந்து இந்த வடிவம் மாறியிருக்கிறது என்கிறார்கள். எது மூலம் எனும் ஆராய்ச்சியை விடுத்து என்ன சொல்கிறது சியாட்டிலின் உரை என்பதையே நாம் கவனத்தில்கொள்ள வேண்டும். அந்த உரையின் சில பகுதிகளை வாசித்துப்பாருங்கள். சியாட்டில் சுட்டிக்காட்டும் உண்மை உங்களுக்கே புரியும்.

'வெள்ளையர்களால் எங்கள் வாழ்வுமுறையைப் புரிந்துகொள்ள முடியாது. பூமி மனிதனுக்கு உரிமையானது அல்ல; மனிதன்தான் பூமிக்கு உரிமையானவன். பூமிக்கு எது நேர்ந்தாலும் அது பூமியின் பிள்ளைகளுக்கும் நேரிடும். வானத்தையோ பூமியையோ விற்கவோ, வாங்கவோ எவ்வாறு இயலும்? அந்த எண்ணமே எங்களுக்குப் புதிரானது.

விலங்குகள் இல்லாமல் மனிதன் எப்படி வாழ்வான்? எல்லா விலங்குகளும் இந்தப் பூமியில் இருந்து மறைந்துபோய்விடுமானால், பிசாசுத் தனிமையில் மனிதன் இறந்துபோய் விடுவான்.

விலங்குகளுக்கு நேர்வது நாளை மனிதனுக்கும் நேரிடும். எல்லாம் ஒன்றுடன் ஒன்று தொடர்புகொண்டவையே.



சியாட்டில்

நீரின் முணுமுணுப்பு என் தந்தையின் தந்தையினுடைய குரல். எங்கள் காலடியில் உள்ள நிலம் எம் மூதாதையரின் சாம்பல். இதை நீங்கள் உங்கள் பிள்ளைகளுக்குக் கற்பிக்க வேண்டும். இந்தப் பூமி எங்களின் தாய் என நாங்கள் நம்புவதை, உங்கள் குழந்தைகளுக்குக் கற்றுக்கொடுங்கள்.

நதிகள் எங்கள் சகோதரர்கள். அவர்கள் எங்கள் தாகத்தைத் தீர்க்கிறார்கள். எங்கள் படகுகளைச் சுமக்கிறார்கள். எங்கள் குழந்தைகளின் பசியாற்றுகிறார்கள். நாங்கள் உங்களுக்கு எமது நிலத்தை விற்றால், நதிகள் எங்களுக்கும் உங்களுக்குமான சகோதரர்கள் என்பது உங்களுக்கு நினைவிருக்க வேண்டும். அதை உங்கள் குழந்தைகளுக்குச் சொல்லிக்கொடுக்கவும் வேண்டும். அது மட்டும் அல்லாமல், நீங்கள் எந்த ஒரு சகோதரனிடமும் காட்டும் கருணையை நதிகளிடமும் காட்ட வேண்டும்.




வெள்ளை மனிதன் உருவாக்கிய நகரங்களில் அமைதியே இல்லை. வசந்தகாலத்து இலைகள் உதிர்வதைக் கேட்கவோ, பூச்சிகள் தங்கள் சிறகுகளை உரசிக்கொள்ளும் ஓசையை அறியவோ சாத்தியம் இல்லை. நகரங்களின் குழப்பமான ஓசைகள் செவியை அவமதிப்பதாகத் தோன்றுகிறது.

சிவப்பு மனிதனுக்கு, காற்று மிகவும் மதிப்புடையது. ஏனென்றால், எல்லா உயிர்களும் பகிர்ந்துகொள்வது ஒரே சுவாசத்தைத்தான்; விலங்கும் மரமும்

மனிதனும் ஒரே சுவாசத்தைத்தான் சுவாசிக்கிறார்கள். வெள்ளை மனிதன், தான் சுவாசிக்கும் காற்றை அறிந்துகொண்டதாகத் தெரியவில்லை...'

இப்படி 160 ஆண்டுகளுக்கு முன்பாகச் சியாட்டில் என்ற சிவப்பிந்திய மனிதர் கேட்ட கேள்விகள், இன்றைக்கும் பொருத்தமானதாகவே தோன்றுகிறது. சிவப்பிந்தியர்களின் வாழ்நிலமாக இருந்த நிலம், இன்று அமெரிக்காவின் பெருநகரமாக உருக்கொண்டு நிற்கிறது. சிவப்பிந்தியர்களின் நினைவாக மிஞ்சியிருப்பது சில ஆவணங்களும் இதுபோன்ற உரைகளும் மட்டுமே.

அமெரிக்காவிலாவது சியாட்டிலின் உரை ஆவணப்படுத்தப்பட்டுள்ளது. ஆனால், இந்தியாவில்வாழ்வுரிமை பறிக்கப்பட்டு வனத்தில் இருந்து துரத்தப்பட்ட எந்த ஆதிவாசியின் குரல் பதிவுசெய்யப்பட்டிருக்கிறது? என்ன ஆவணம் இருக்கிறது? இன்றும் பேராசை கொண்டவர்களின் இரும்புக்கரம் காட்டில் இருந்து வனவாசிகளைத் துரத்திக்கொண்டேதான் இருக்கிறது. காட்டு விலங்குகளைப் புரிந்துகொண்டு நட்பாகப் பழகத் தெரிந்த வனவாசிகளுக்கு, தரையில் வாழும் மனிதர்களைத்தான் புரிந்துகொள்ள முடியவில்லை.

நிகழ்காலம் எனும் ஆற்றில் நகரும் வாழ்க்கைப் படகுக்கு இரண்டு துடுப்புகள் இருக்கின்றன. ஒன்று கடந்தகாலத்தை நோக்கி இயங்குகிறது. மற்றது எதிர்காலத்தை நோக்கி. இரண்டும் மாறிமாறி நகர்கின்றன. படகு முன் சென்றபடியே இருக்கிறது. நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் இந்தத் துடுப்புகள் இயங்கிக் கொண்டேதான் இருக்கும் போலும்.

பிரம்மபுத்திராவில் எனது படகு போய்க்கொண்டே இருந்தது.

''கடவுள் சந்தோஷமாகப் பகடை உருட்டி விளையாடும் இடம் மாஜுலி தீவு'' எனச் சொன்னார் படகோட்டி.

''எங்கே கடவுள்... புகைப்படம் எடுத்துக்கொள்ளலாமா?'' எனக் கேட்டாள் படகில் வந்த சிறுமி. பலரும் அதைக் கேட்டுச் சிரித்தார்கள். ஓடும் ஆற்று நீரைச் சுட்டிக்காட்டி ஒரு முதியவர் சொன்னார்...

''இதுதான் கடவுள், படம் எடுத்துக்கொள்.''

கடந்தகாலம் கற்றுத்தந்த பாடம்தான் அந்தக் குரல் என, எனக்கு நன்றாகப் புரிந்தது. இதே குரல்தானே சியாட்டிலிடமும் இருந்தது!

- சிறகடிக்கலாம்...

## இந்திய வானம் - 2
## எஸ்.ராமகிருஷ்ணன், ஓவியங்கள்: ரமேஷ் ஆச்சார்யா

### பட்டணத்துத் தனிமை

புதுமைப்பித்தன் 'செல்லம்மாள்' என ஒரு சிறுகதை எழுதியிருக்கிறார். அது ஓர் அற்புதமான காதல் கதை. தன் மனைவியின் இறந்த உடலை வைத்துக் கொண்டு, பிரம்மநாயகம் பிள்ளை தனது வாழ்க்கையைத் திரும்பிப் பார்க்கும் கதை.

அந்தக் கதையில் 'செல்லம்மாளுக்கு அப்போதுதான் மூச்சு ஒடுங்கியது. பட்டணத்துத் தனிமையிலே மாண்டு போனாள்' என ஒரு வரி இடம்பெற்றுள்ளது.

அது என்ன 'பட்டணத்துத் தனிமை'? மாநகரில் வாழும் மனிதர்கள் உணரும் தவிப்பு அது. பெருநகரில் வாழுகிற மனிதர்களுக்கு வாழ்க்கைத் தேவைக்கான எல்லாமும் கிடைத்தாலும், இந்த நகரம் தன்னுடையது இல்லை எனத் தனிமை உணர்வுகொள்கிறார்கள். ஒவ்வொரு மனிதனும் தன்னைச் சுற்றி ஒரு வட்டம் போட்டுக்கொள்கிறான். அவ்வளவுதான் அவனது உலகம்.

கிராமத்தில் அப்படி வாழ்ந்துவிட முடியாது. நல்லது, கெட்டது எது நடந்தாலும் ஊரே ஒன்று திரண்டுவிடும். நகரில், தெரிந்த மனிதர்கள் இருக்கிறார்கள்; பழகிய நண்பர்கள் இருக்கிறார்கள். ஆனால், தனித்திருக்கிறோம் என்ற உணர்வு இருக்கவே செய்கிறது.

'செல்லம்மாள்' சிறுகதையில் வரும் பிரம்மநாயகம் பிள்ளையும் மனைவியும் அடிக்கடி சொந்த ஊருக்குப் போய் வர வேண்டும் என்பதைப் பற்றிப் பேசிக்கொண்டே இருக்கிறார்கள்.

'ஊர்ப்பேச்சு, தற்சமயம் பிரச்னைகளை மறப்பதற்குச் சௌகரியமாக, போதை தரும் கஞ்சா மருந்தாகவே அந்தத் தம்பதிக்கு உபயோகப்பட்டு வந்தது' எனப் புதுமைப்பித்தன் சொல்கிறார். உண்மைதான் அது. ஊர்ப்பேச்சு என்பது ஒரு போதை. கடுக்காயை வாயில் ஒதுக்கிக்கொண்டால், அதில் ஒருவிதமான போதை வரும் என்பார்கள். அதுபோல சொந்த ஊரைப் பற்றி நினைத்துக்கொண்டு, பேசிக்கொண்டே இருப்பது ஒரு போதைதானோ. பெருநகரில் வாழ்பவர்களுக்கு அதுதான் மிச்சம்போலும்.



இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு காஞ்சி புரத்தில் இருந்து திரும்பி வரும் வழியில், பூந்தமல்லி சாலையோரம் ஒருவர் கம்பங்கூழ் விற்றுக்கொண்டிருந்தார். வெயிலோடு காரை நிறுத்தி இறங்கி, அவரிடம் கூழ் வாங்கிக் குடித்தேன். கம்பங்கூழுடன், தொட்டுக்கொள்ளக் கொத்தவரங்காய் வற்றலும் தந்தார். கூழின் குளிர்ச்சி, குடலைக் குளிரச்செய்தது.

''மிதுக்க வத்தல் இல்லையா?'' எனக் கேட்டேன்.

''இங்கே நல்ல மிதுக்க வத்தல் கிடைக்கிறது இல்லை. பாக்கெட்ல விக்கிற மிதுக்க வத்தல் சரியில்லை... கசக்குது'' என்றார்.

அவ்வளவு ருசியான கூழைக் குடித்ததே இல்லை. கரிசல்காட்டில் கிடைக்கும் கூழின் ருசிக்கு நிகராக, மாநகரில் ஒருபோதும் கிடைக்காது என நம்பியிருந்தேன். ஆனால், இந்தக் கூழில் அதே ருசி. ஒரு குவளை 10 ரூபாய்.

மனம் நிறையப் பாராட்டிய பிறகு 50 ரூபாய் கொடுத்து, ''வைத்துக்கொள்ளுங்கள்'' என்றேன்.

''நீங்க குடிச்சதுக்குப் பத்து ரூபாதான். அது போதும்'' என மீதம் சில்லறை கொடுத்தார்.

''உங்களுக்கு எந்தூருய்யா?'' எனக் கேட்டேன்.

''வதுவார்பட்டி'' என்றார்.

அருப்புக்கோட்டைக்கு அருகில் என்பதால், ''நானும் உங்க ஊருப் பக்கம்தான், மல்லாங்கிணர்'' என்றேன்.

விரிந்த கண்களுடன் கேட்டார்...

''நம்ம ஊரா... அதான் மிதுக்க வத்தல் கேக்கீங்க. மெட்ராஸுல யாரு மிதுக்க வத்தலைக் கண்டா? நம்ம ஊர்ப் பக்கம்தான் மிதுக்கம்பழம் ஜாஸ்தி'' என்றார்.

''மெட்ராஸுக்கு எப்போ வந்தீங்க?'' எனக் கேட்டேன்.

''எட்டு வருஷம் இருக்கும். ஊர்ல விவசாயம் பாக்க முடியலை. மகளை இங்கே திருத்தணியில் கட்டிக்குடுத்துருக்கேன். மகனுங்க ரெண்டு பேரு. மூத்தவன், கடலூர்ல இருக்கான். இளையவன், திருவான்மியூர்ல இருக்கான். நானும் சம்சாரமும் தனியா வீடு பாத்துக் குடியிருக்கோம். பிள்ளைகளோட ஒண்ணா இருக்க முடியல. மனஸ்தாபம் வந்துடுச்சு. ஒரு கம்பெனியில வாட்ச்மேனா வேலை பார்த்தேன். ஒழுங்கா சம்பளம் கொடுக்கலை... விட்டுட்டேன். அப்புறமா கம்பங்கூழ் விக்க ஆரம்பிச்சேன். ஒரு நாளைக்கு நூறு, இருநூறு ரூபாய்க்கு ஓடுது'' என்றார்.

''ஊருக்கே போயிரவேண்டியதுதானே?'' என்றேன்.

''போயி என்ன செய்யுறது... நாண்டுக்கிட்டு சாகுறதா? அதான் விவசாயம் எல்லாம் சோலி முடிஞ்சுபோச்சில்ல'' என்றார்.

அவரது பேச்சின் கொதிப்பைப் புரிந்துகொள்ள முடிந்தது. விவசாயிகள் பெரும் நம்பிக்கைகொண்டவர்கள். அவர்கள் எளிதில் நிலத்தைப் பிரிந்து போய்விட மாட்டார்கள். அந்த நம்பிக்கை கொஞ்சம்கொஞ்சமாகத் தகர்க்கப்பட்டுவிட்டது. 'இனி சொந்த ஊருக்கு எதற்குப் போவது?' என

விவசாயிகள் யோசிக்கும் நிலை உருவாகிவிட்டது. மனதில் இத்தனை கோபத்தை வைத்துக்கொண்டுதான், அடுத்தவர் பசி தீர்த்து வயிற்றைக் குளிரச்செய்கிறார் என்பது வேதனை அளித்தது.



அவராகத் தொடர்ந்து தனது ஆற்றாமையைப் பகிர்ந்துகொண்டார்.

''நம்ம பக்கத்து ஆட்கள் யாராவது இப்படிப் பேச்சுக் கொடுக்கும்போது ஊர் ஞாபகம் வருது. எல்லாம் நேத்து நடந்த மாதிரி இருக்கு. எம்புட்டு வெள்ளாமை; எம்புட்டு ஆளு பேரு ஓடியாடி வேலை பார்த்தோம். நல்ல நாள் பண்டிகைன்னா, ஊரே கூடிரும். எல்லாம் கண் முன்னாடியே மறைஞ்சுபோச்சு. என் வயசு ஆட்கள் எல்லாம் போய்ச்சேர்ந்துட்டாங்க. நானும் போயிருந்தா, இந்தக் காலக்கொடுமையை எல்லாம் பாக்க வேண்டி

வந்திருக்காது. இனிமே ஊருக்குப் போயி என்ன செய்றது? வெளியேறி வந்தாச்சு. இங்கயே செத்து மண்ணுக்குப் போக வேண்டியதுதான்.''

நாங்கள் பேசிக்கொண்டிருந்தபோது, ஒரு நகரப் பேருந்தைவிட்டு இறங்கி, பார்வையற்ற ஒருவரும் துணைக்கு ஒரு சிறுமியும் வந்துகொண்டிருந்தார்கள். அவர்களும் கூழ் குடிக்கத்தான் பசியோடு வருகிறார்கள் எனத் தெரிந்தது.

''என்ன இவ்வளவு நேரமாச்சு?'' எனக் கேட்டார் கூழ் விற்பவர்.

''ராயப்பேட்டையில இருந்து பஸ் பிடிச்சு வந்து சேர்றதுக்கு ரெண்டு மணி நேரத்துக்கு மேல ஆகிருது'' என்றார் பார்வையற்றவர்.

ஆளுக்கு ஒரு சொம்பு கூழ் வாங்கிக் குடித்தார்கள். சிறுமி வேகமாகக் கூழைக் குடித்து முடித்து சொம்பை நீட்டினாள். இன்னொரு சொம்பு கூழ் அவளுக்குத் தரப்பட்டது. அவர்கள் கூழ் குடித்து முடித்த பிறகு, பார்வையற்றவர் தனது பையில் இருந்து ஒரு ஜோடி செருப்பை எடுத்து அவர் முன்பு நீட்டினார்.

''இது எதுக்கு?'' எனக் கூச்சத்துடன் கேட்டார் பெரியவர்.

''போட்டுங்கோங்க, எத்தனை நாளு செருப்பு இல்லாம நீங்களும் திரிவீங்க... ரோடு அனலா இருக்கு. பாண்டிபஜார் பக்கம் போயிருந்தப்ப வாங்கினேன். அளவு சரியா இருக்கானு போட்டுப்பாருங்க.''

பெரியவர் தயக்கத்துடன் செருப்பைப் போட்டுப்பார்த்தார். சரியாகப் பொருந்தியது.

''எத்தனை ரூவா?'' எனக் கேட்டார்.

''அது கிடக்கட்டும் விடுங்க. தினம் நாங்க குடிக்கிற கூழுக்கு நீங்க காசு வாங்குறது இல்லை, என்னாலே முடிஞ்சது செருப்பு வாங்கித் தந்துருக்கேன். இன்னைக்கு வியாபாரம் எப்படி?'' என இயல்பாகப் பேசத் தொடங்கினார்.




''சாரு... நம்ம ஊருப் பக்கம். ஊர்க் கதை பேசிக்கிட்டிருக்கோம்'' என்றார் பெரியவர்.

பார்வையற்றவர் தன்னோடு உள்ள சிறுமியை ''ரோஸி'' என அழைத்து, ''சாருக்கு குட்மார்னிங் சொல்லு'' என்றார்.

3 மணி வெயிலில், அந்தச் சிறுமி கையை உயர்த்தி வணங்கி குட்மார்னிங் சொன்னாள்.

''சார், நானும் இவரும் ஃப்ரெண்ட்ஸ். நான் வீட்லயே கேண்டில் செஞ்சி விக்கிறேன். தினம் சிட்டிக்குள்ளே போய் கேண்டில் சப்ளை பண்ணிட்டு வருவேன். மதியம் இவர்கிட்டதான் கூழ். அவருக்கு ஏதாச்சும் பொருள் சிட்டியில வேணும்னா, நம்ம கையில சொல்லிடுவாரு. வாங்கியாந்து தருவேன். அப்படி ஃப்ரெண்ட் ஆகிட்டாரு.''

எனக்கு அவர்களின் நட்பைக் காண சந்தோஷமாக இருந்தது. ரோஸி என்ற அந்தச் சிறுமி கூழ் விற்பவரிடம் கேட்டாள்...

''தாத்தா, புதுச் செருப்பு போட்டுக்கிட்டு நடந்துகாட்டு.''

வெட்கத்துடன் தாத்தா நடந்துகாட்டினார்.

''ரோஸிதாம்பா நீங்க செருப்பே போடுறது இல்லைனு சொல்லுச்சு. அதான் வாங்கியாந்தேன்'' என்றார் பார்வையற்றவர்.

இல்லாத மனிதர்கள், ஒருவரையொருவர் சந்தோஷப்படுத்திக்கொள்கிறார்கள்; பகிர்ந்து வாழ்கிறார்கள். ஆனால், வசதியும் வாய்ப்பும் இருப்பவர்களில் எத்தனை பேருக்கு இந்த மனது இருக்கிறது?

நான் காரில் ஏறும்போது பெரியவர் சொன்னார்...

''அடுத்த தடவை வரும்போது மிதுக்க வத்தல் வறுத்து வெச்சிருப்பேன். மறக்காம கூழு குடிச்சுட்டுப் போங்க தம்பி...'' அவரது சொல்லிலும் குளிர்ச்சி இருந்தது.

சமீபத்தில் அவரைத் தேடி கூழ் குடிக்கப் போனபோது அந்த இடத்தில் அவரைக் காணவில்லை. தர்பூசணி விற்கும் கடை போட்டிருந்தார்கள்.

கூழ் விற்கும் பெரியவரைப் பற்றி விசாரித்தபோது, ''அவர் ஆறேழு மாசத்துக்கு முன்னாடியே செத்துட்டாரே சார்...'' என்றார்கள். அந்தக் கூழின் ருசியும் குளிர்ச்சியும் மனதில் அப்படியே இருந்தன.

'பட்டணத்துத் தனிமை', புதுமைப்பித்தனின் செல்லம்மாளை மட்டும் அல்ல... கூழ் விற்கும் முதியவரையும்தான் காவு வாங்கியிருக்கிறது.

ஆதித் தனிமை என ஒரு சொல் இருக்கிறது. அது மனிதன் பூமியில் தோன்றிய காலத்தில் ஏற்பட்ட உணர்வு என்கிறார்கள். அந்தத் தனிமையின் மிச்சம் இன்றும் இருக்கவே செய்கிறது.

கலை விமர்சகர் ஒகுமுரா, 'எட்டு வகையான தனிமை இருக்கிறது' என்கிறார். ஒன்று, துறவியின் தனிமை... அதாவது, உலகில் இருந்து விரும்பி தன்னைத் துண்டித்துக்கொண்டு இச்சைகளைத் துறந்து வாழும் தனிமை. இரண்டாவது, நோயாளியின் தனிமை. உடல் நலிவுற்று நடமாட முடியாத நிலையில் உருவாகும் தனிமை. ஏக்கமும் நிராகரிப்பும்கொண்ட தனிமை அது.

மூன்றாவது தனிமை, காதலின் தனிமை. தனித்திருக்கும் காதலனோ காதலியோ அடையும் தனிமை அது. கற்பனையில் சஞ்சரிப்பதும் கனவு காண்பதும் தனிமையை வெறுப்பதும் இதன் இயல்பு.

அடுத்தது போர் வீரனின் தனிமை. யுத்தக் களத்தில் அல்லது எல்லையில் ஒற்றை மனிதனாகச் சமரை எதிர்நோக்கிக் காத்திருக்கும் தனிமை. என்ன நடக்கப்போகிறது எனத் தெரியாத பதைபதைப்பு. தன்னை முழுமையாக ஒப்படைத்துக்கொண்ட மனதின் தனிமை அது.

இன்னொரு தனிமை, முதியவரின் தனிமை. இது வாழ்வின் ஒரு நிலை. வாழ்வியல் கடமைகளைச் செய்து முடித்த பிறகு உருவாகும் தனிமை அது. வேறு ஒரு தனிமை இருக்கிறது. அது கவிஞனின் தனிமை. இயற்கையை

நாடுவதும், கலைகளைத் தேடிச் செல்வதும், அதில் தன்னைக் கரைத்துக்கொள்வதுமான தனிமை.

ஏழாவது அரசனின் தனிமை. எப்போதும் தன்னைச் சுற்றி ஆள்கூட்டம். தனக்கு என

ஓர் உலகம் கிடையாதா என ஏங்கி உருவாக்கிக்கொள்ளும் பிரபலங்களின் தனிமை.

அடுத்தது, கைதியின் தனிமை. அது ஒரு தண்டனை. ஞாபகங்கள் மட்டுமே துணை. அதுவும் தூக்குக் கைதியாக இருந்துவிட்டால், சாவை எதிர்நோக்கிக் காத்திருக்கும் வலியுடன் கூடிய தனிமை அது. இப்படி எட்டு வகையான தனிமை இருக்கிறது எனச் சொல்கிறார் ஒகுமுரா.



இதற்கு மேல் ஒரு தனிமையைப் புதுமைப்பித்தன் சொல்கிறார். அதுதான்... 'பட்டணத்துத் தனிமை'. இந்தத் தனிமை தனிநபரின் தனிமை அல்ல. ஊரின் சுபாவம் என எடுத்துக்கொள்ளலாம்.

'தனிமையைக் கண்டு ஏன் பயப்படுகிறீர்கள்? தனிமையின் சுகத்தை நீங்கள் அனுபவிப்பதும், அதை வளர்த்துக்கொள்வதும் அவசியம்' என சீனாவைச் சேர்ந்த ஜியாங் யுங் தனிமை உணர்வு குறித்தே ஆறு உரைகள்

நிகழ்த்தியிருக்கிறார். அது தனி நூலாகவும் வந்துள்ளது. நாம் ஒருவருக்கொருவர் நிறையப் பேசிக்கொள்கிறோம். தொலைக்காட்சி, ரேடியோ என ஊடகங்கள் பேசிக்கொண்டே இருக்கின்றன. ஆனால், இந்தக் காலத்தில்தான் நாம் அதிகம் தனிமை உணர்வை அடைகிறோம். தொழில்நுட்பம் உருவாக்கிய தனிமை அது.

நம் மூதாதையர் காலத்தில் அவர்கள் ஆள் அரவமற்ற காட்டில், தனி இடத்தில் வாழ்ந்தார்கள். அவர்களிடம் வெறுக்கத்தக்கத் தனிமை உணர்வு உருவாகவில்லை. 'காதல், மொழி, புரட்சி, வன்முறை, சிந்தனை, அறவழி என ஆறு தளங்களில் தனிமை உணர்வு குறித்து நான் உரையாற்றியுள்ளேன்' என்கிறார் ஜியாங் யுங்.

நான்கு ஆஸ்கர் விருதுகளைப் பெற்ற

'தி கிராண்ட் புடாபெஸ்ட் ஹோட்டல்', தனிமையின் இழைகளால் பின்னப்பட்ட திரைப்படம். ஆஸ்திரியாவைச் சேர்ந்த புகழ்பெற்ற எழுத்தாளர் ஸ்டீபன் ஸ்வேக்கின் கதையை மையமாகக்கொண்டு எடுக்கப்பட்ட படம் அது.

நாஜி ராணுவத்தால் தான் கைதுசெய்யப்பட்டு, வதை முகாமுக்கு அனுப்பட்டுவிடுவோம் எனப் பயந்து மனைவியோடு தற்கொலை செய்துகொண்டவர் ஸ்டீபன் ஸ்வேக். 1968-ம் ஆண்டு தனிமையை நாடி பனிமலைக்குச் சென்ற ஸ்வேக், 'தி கிராண்ட் புடாபெஸ்ட்' என்ற ஹோட்டலில் தங்குகிறார். ஒருகாலத்தில் மிகவும் புகழ்பெற்று இருந்த அந்த விடுதி, தற்போது கைவிடப்பட்ட நிலையில் உள்ளது.

கடந்த காலங்களில் அங்கு வந்து தங்கி மகிழ்ந்த சில முதியவர்கள், அதே நினைவுகளுடன் திரும்பத் தங்க வந்திருப்பதைத் தவிர, புதியவர்கள் எவரும் அங்கே காணப்படவில்லை.

மர்ம மாளிகைபோல இருந்த அந்த விடுதியில் தங்கியிருக்கும் ஸ்வேக், தற்செயலாக ஹோட்டலின் உரிமையாளர் ஜீரோ முஸ்தபாவைச் சந்திக்கிறார். அப்போது ஜீரோ இந்த ஹோட்டலுக்கு, தான் எப்படி உரிமையாளர் ஆனார் என்ற கதையை விவரிக்கத் தொடங்குகிறார்.

கிராண்ட் புடாபெஸ்டின் முதலாளி யார் என எவருக்கும் தெரியாது. குஸ்தாவ் அதன் பொறுப்பாளர். அவரது வாழ்க்கையும், அங்கே லாபி பாயாக

வேலைக்கு வரும் 'ஜீரோ' என்கிற பதின்வயதுப் பையனின் அனுபவமும் விவரிக்கப்படுகின்றன. பல்வேறு நிகழ்வுகளின் முடிவில் ஒரு எடுபிடிப் பையனாக வேலைக்கு வந்த ஜீரோ, ஹோட்டலின் உரிமையாளர் ஆகிறார். இன்றும் ஆள் வராத நிலையிலும் அதைக் காப்பாற்றி வரக் காரணம், அது தனது காதலின் அடையாளம். அந்த ஹோட்டலை தனது காதலின் நினைவுச்சின்னமாகக் கருதுவதாக ஜீரோ கூறுகிறார்.

மனிதர்கள் மட்டும் அல்ல... புகழ்பெற்ற இடங்களும் கைவிடப்பட்ட நிலையில் தனிமையில், நினைவுகளுடன் எஞ்சி நிற்கின்றன. அதுதான் வாழ்க்கை. யாராலும் எதையும் எல்லா காலத்திலும் காப்பாற்றிவிட முடியாது. வளர்ச்சியைப்போலவே வீழ்ச்சியும் வாழ்வின் அங்கமே. 'கிராண்ட் புடாபெஸ்ட் ஹோட்டல்' என்பது யூதர்களின் பெருமைக்குரிய கடந்த காலம் என்பதன் குறியீடுபோலவும் படத்தில் அடையாளப்படுத்தப்படுகிறது.

'தனிமை கண்டதுண்டு. அதிலே சாரம் இருக்குதம்மா...' என்றான் பாரதி.

அதை நீங்களும் அனுபவித்துப்பாருங்களேன்!

- சிறகடிக்கலாம்...

## இந்திய வானம் - 3
### எஸ்.ராமகிருஷ்ணன், ஓவியங்கள்: ரமேஷ் ஆச்சார்யா

### புத்தன் இல்லாத இடம் இல்லை

நான் பார்த்த புத்தர் சிலைகளிலேயே மறக்க முடியாதது, ஹிரோஜிமா மியூசியத்தில் அணுகுண்டு வீச்சால் உடல் சிதைந்து உருகிப்போய், பாதி முகத்துடன் காணப்படும் புத்தர்.

தன் தலை மீது ஓர் அணுகுண்டு வந்து விழும் என புத்தன் நினைத்திருக்க மாட்டான். லட்சக்கணக்கான மனிதர்களையும், மகா மௌனத்தில் உறைந்திருந்த புத்தனையும் அணுவின் கதிர்வீச்சு சிதைத்திருக்கிறது. பாதி சிதைந்துபோன அந்தப் புத்தனின் முகம், நம் காலத்தின் அடையாளம்.

நான் பார்க்க விரும்பும் புத்தர் சிற்பம் ஒன்று இருக்கிறது. அது பாகிஸ்தானின் லாகூர் மியூசியத்தில் உள்ள 'ஃபாஸ்ட்டிங் புத்தா' என அழைக்கப்படும் சிற்பம். எலும்புகள் புடைத்து நிற்க, ஒட்டிய வயிற்றுடன் குழி விழுந்த கண்களுடன், பசியை வென்ற புத்தர் சிற்பம். அதிலும் கோடுபோல புன்னகை ஒளிரவே செய்கிறது.

நின்ற, சயனக் கோலத்தில் அழகும் சாந்தமும் நளினமும்கொண்ட புத்தரைத்தானே நாம் பார்த்திருக்கிறோம். ஆனால், இந்தப் புத்தர் அப்படி அல்ல. உடலை ஒடுக்கிக்கொண்ட உக்கிரமும், ஆன்ம வேகம் பீறிடும் உடலும் கொண்ட புத்தர். குஷாணர் காலத்துச் சிலை அது. இரண்டு அல்லது மூன்றாம் நூற்றாண்டில் செய்யப்பட்டிருக்கலாம். இந்தச் சிலையின் நகல் வடிவங்களை நான் கண்டிருக்கிறேன். ஆனால், மூலத்தை நேரில் பார்க்க வேண்டும் என்பது என் நெடுநாள் ஆசை.

காஷ்மீர் தொடங்கி கன்னியாகுமரி வரை புத்தர் இல்லாத இடமே இல்லை. இன்று புத்தர் ஒரு விற்பனைப் பொருள். விதவிதமான வடிவங்களில், உயரங்களில், பிரமாண்டமான சிலைகளாகச் செய்யப்பட்டு விற்கப்படுகிறார். வரவேற்பறை அழகுப்பொருட்களில் ஒன்றாக, புத்தர் உருமாறிப்போவதை என்னால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை.



என் எழுதும் மேஜையில் ஒரு புத்தர் சிலை இருக்கிறது. சாரநாத்தில் இருந்து வாங்கிவந்த கற்சிலை. 25 ஆண்டுகளாக தினமும் காலையில் அதைத் துடைத்து சுத்தம்செய்து, ஒரு மலரை அதன் முன்பாக வைக்கிறேன். புத்தரின் புன்னகைதான் எனது எழுத்துத் துணை.

மனம் சோர்ந்த தருணங்களில் அந்தப் புத்தரைப் பார்த்துக்கொண்டே இருப்பேன். ஊதுவத்தியில் இருந்து நறுமணப் புகை வருவதுபோல, அந்தச் சிலையில் இருந்து சாந்தம் மெள்ளப் பரவி என்னைப் பற்றுவதை உணர்ந்திருக்கிறேன். உலகின் புத்தருக்கு 2,500 வயதாகிவிட்டது. ஆனால், எனது மேஜையில் இருக்கும் புத்தருக்கு 25 வயதுதான்.

கருணை ததும்பும் முகம், சற்றே பெரிய கீழ் உதடு, நீண்டு தொங்கும் காதுகள், பத்மாசனக் கோலத்தில் தியானத்தில் அமர்ந்த நிலை. எனது பயணத்தில் இந்தியாவில் எத்தனையோ விதமான புத்தர் சிலைகளைக் கண்டிருக்கிறேன். சிறியதோ, பெரியதோ எல்லா புத்தர்களும் பேரழகுடன் உருவாக்கப்பட்டிருக்கிறார்கள். யானையை எப்படிப் பார்த்தாலும், அதன் கம்பீரமும் அழகும் குறைவது இல்லைதானே? புத்தனும் அப்படித்தான் இருக்கிறான்.

உலகின் மிகப் பெரிய புத்தர் சிலைகளில் ஒன்றான, டோக்கியோவில் உள்ள காமகுரா புத்தர் சிலையைக் காண்பதற்காகச் சென்றிருந்தேன். டோக்கியோவில் இருந்து ஒரு மணி நேரப் பயண தூரத்தில் உள்ளது காமகுரா. அங்கே பிரமாண்டமான புத்தர் சிலை வெட்டவெளியில் அமைக்கப்பட்டிருக்கிறது. *13.35* மீட்டர் உயரம் உள்ள வெண்கலப் புத்தர் சிலை அது. *1252*-ம் ஆண்டு அதைச் செய்திருக்கிறார்கள்.

இதை ஜப்பானில் உள்ள இரண்டாவது பெரிய புத்தர் சிலை என்கிறார்கள்; முதல் சிலை நாராவில் உள்ளது. காமகுரா புத்தர் சிலை முதலில் மரத்தில் செய்யப்பட்டிருந்தது. பின்னர் அது சிதைந்துவிடவே, வெண்கலத்தில் புதிய சிலை செய்யப்பட்டிருக்கிறது. வெட்டவெளியில் அப்படி ஒரு மகா புத்தனைக் காண்பது பெரும் பரவசம் தரக்கூடியது.

பிரமாண்டமான அந்தப் புத்தர் சிலையின் உட்பகுதியைக் காண்பதற்கும் வழி அமைத்திருக்கிறார்கள். உள்ளுக்குள் வெற்றிடம். அதன் வழியே புத்தரைக் கண்டபோது, ’உருவம் இல்லாத இருப்பே புத்தர்’ என்ற அனுபவத்தை அடைந்தேன். அது ஓர் உணர்ச்சிபூர்வ நிலை; நமக்குள் இருக்கும் புத்தனை நாம் அடையாளம் கண்டுகொள்ளும் வழி. சிலையைவிட்டு அகல மனமே வரவில்லை. இளவெயில் ஒளிரத் தொடங்கியது. அந்த இளஞ்சூரிய வெளிச்சத்தில் புத்தரைக் காண்பது பேரனுபவம்.



புத்தர் ஏன் நமக்குத் தேவையாக இருக்கிறார்? இதற்கு நிறையப் பதில்கள் இருக்கின்றன. எனது பதிலுக்கு முன்பாக 'யெஸ் மேன்' என்ற திரைப்படத்தை நினைவூட்ட விரும்புகிறேன்.

இது ஜிம்கேரி நடித்த ஆங்கிலப் படம். இதில் அவர் ஒரு வங்கி ஊழியர்; மனைவியை விவாகரத்துசெய்தவர். எந்த வேலையில் ஈடுபட்டாலும் அவருக்கு எதிர்மறையான எண்ணங்களே தோன்றிக்கொண்டிருக்கும். இதனால் பலவிதமான சிரமங்களை அடைவார். எந்தச் செயலையும் அவரால் தைரியமாகச் செய்ய முடியாது. அப்போது அவர் ஓர் ஆலோசனை வகுப்பில், 'உங்கள் எதிர்மறை எண்ணங்களை மாற்ற எந்தச் சந்தர்ப்பமாவது கிடைத்தால், 'சரி செய்கிறேன்' எனக் குதித்துவிடுங்கள். 'யெஸ்' என்ற சொல் உங்களை மாற்றிவிடும்' என்ற ஆலோசனையைப் பெறுகிறார். தனது வாழ்வில் அதை அவர் செயல்படுத்தவும் தொடங்குகிறார்.

அவர் நினைத்தே பார்க்காத மாற்றங்கள் எல்லாம் உருவாவதுடன், புதிய நட்பும், பதவி உயர்வும், பெண் துணையும், புதிய அனுபவங்களும் அவருக்குக் கிடைக்க ஆரம்பிக்கின்றன. அதன் பின்னர் எதிர்மறை எண்ணங்களை விலக்கி, யெஸ் மேனாக வாழ ஆரம்பிக்கிறார். நெருக்கடியான சூழலில்கூட அவர் மனம், எதிர்மறை எண்ணங்களை வரவிடாமல் தடுப்பதுடன், நேர்மறை எண்ணங்களை உருவாக்கித் தைரியமாக வெற்றிபெறச் செய்கிறது.

'யெஸ்' என்ற ஒரு வார்த்தை, ஒரு மனிதனை இப்படிப் புரட்டிப்போட்டுவிடும் என்றால், நிகரற்ற அறநெறிகளின் தொகுப்பாக அமைந்த பௌத்தம், அதன் உயர்வான எண்ணங்கள் நம்மை எந்த அளவுக்கு மேம்படுத்தும்!

ஆம் நண்பர்களே... நமது மனம்தான் நம்மை வழிநடத்தும் கருவி. அதை ஆராயவும், சரிசெய்யவும், தூய்மைப்படுத்தவும், நல்ல சிந்தனைகளை, செயல்களை, நல்ல அறத்தைக் கைக்கொள்ளவும் புத்தரே நமக்கான ஞான குரு.

அகத்தை நெறிப்படுத்த மட்டும் புத்தர் நமக்கு வழிகாட்டவில்லை; சாதி, இன பேதம் இல்லாத, சமூக நீதியை முன்னிறுத்திய வாழ்க்கைமுறையை உயர்த்திப்பிடித்தவர் புத்தர். அக விடுதலையை முதன்மைப்படுத்திய புத்தர்தான், சாக்கியர்களுக்கும் கோலியர்களுக்குமான தண்ணீர்ப்

பிரச்னையைத் தீர்த்துக்கொள்ள முன்வந்து வழிகாட்டியவர். மன்னராக வாழ்ந்த காலத்தில் பல்லக்கிலும் குதிரையிலும் பவனி வந்த புத்தர், துறவியான பின்பு நடந்தே அலைந்தார். இந்தியாவில் புத்தர் அளவுக்கு நடந்த இன்னொரு மனிதர் இருக்க முடியுமா என்பது சந்தேகமே.




புத்தர் தனது முதல் சொற்பொழிவை, வாரணாசியை ஒட்டிய சாரநாத்தில் நிகழ்த்தினார். மான்பூங்கா என அழைக்கப்பட்ட இடத்தில் அந்த உரை நிகழ்த்தப்பட்டது. அதை 'தர்மச் சக்கரம் சுழல்வது' எனக் கூறுகிறார்கள். புத்தரின் முதல் உரை, பாலி மொழியில் நிகழ்த்தப்பட்டது. இன்று, அந்த மொழி பேச்சுவழக்கில் இல்லை. பாலி மொழிக்கு 'மாகதி' எனவும் வேறு பெயர் உண்டு. மகத நாட்டில் வழங்கப்பட்டதால் அது 'மாகதி' என அழைக்கப்பட்டது.

தமிழ்நாட்டில் இருந்த பௌத்தர்கள் ஒருபோதும் பாலி மொழி பேசியது இல்லை. ஆனால், பௌத்த சமய தேரர்கள் பாலி மொழியில் இயற்றப்பட்ட அறநூல்களைப் படித்துவந்தார்கள். தமிழ்நாட்டில் காஞ்சிபுரம், காவிரிப்பூம்பட்டினம் (புகார்), நாகப்பட்டினம், உறையூர், பூதமங்கலம், மதுரை, மானாவூர், துடிதபுரம், பாடலிபுரம், சாத்தமங்கை, போதிமங்கை, சங்கமங்கை, அரிட்டாபட்டி, பௌத்தபுரம் முதலான ஊர்களில், பாலி மொழியை நன்கு அறிந்திருந்த பௌத்த ஆசிரியர்கள் பண்டையக் காலத்தில் இருந்தார்கள்.

சாரநாத்தில் புத்தரின் அறவுரையைக் கேட்டவர்கள் கொண்டஞ்ஞர், பத்தியர், வப்பர், அஸ்ஸஜி மற்றும் மகாநாமர் ஆகிய ஐந்தே பேர்தான். அவர்களும் துறவிகளே. ஆடி மாதப் பௌர்ணமி அன்று இந்த உரை நிகழ்த்தப்பட்டது. அதனால்தான் இன்றும் ஆடி மாதப் பௌர்ணமியை 'குரு பூர்ணிமா' என அழைக்கிறார்கள்.

புத்தருடைய காலத்தில் இல்லற வாழ்க்கையை விட்டு விலகி, காட்டுக்குள் சென்று, பல ஆண்டுகள் தவம்செய்து மட்டுமே ஞானம் பெற முடியும் என நம்பியிருந்தார்கள். புத்தரும் அப்படித்தான் ஆறு ஆண்டுகள் கடும் தவம் செய்திருந்தார். அதன் பின்னர் தன்னை வருத்திக்கொள்வதால் மட்டும் பயன் இல்லை என உணர்ந்து, அவர் மத்தியப் பாதை ஒன்றை உருவாக்கினார்.

சாரநாத்தில் புத்தரின் முதல் உரை, அவரது ஞானத்தை வெளிப்படுத்தும்விதமாக அமைந்திருந்தது. அன்று அதைக் கேட்ட ஐந்து பேருக்குப் பிறகு, ஆறாவது மனிதராக இன்று வரை அந்த உரையை நாம் படித்தும் கேட்டும் வருகிறோம்.

'தோற்றத்துக்கு உட்பட்டது எதுவானாலும், அது அழிவுக்கும் உட்பட்டதே என்பதைப் புரிந்து விழிப்புஉணர்வுடன் செயல்படுங்கள்.

சரியான புரிதல், சரியான எண்ணங்கள், சரியான சொல், சரியான செயல், சரியான வாழ்வாதாரம், சரியான முயற்சி, சரியான விழிப்புஉணர்வு, சரியான மனக்குவிப்பு... ஒவ்வொரு மனிதனுக்கும் இன்றியமையாதவை' என புத்தர் விளக்கினார்.

நேரியப் பேச்சு என்றால் என்ன? பிறருக்குத் தீங்கு இழைக்காத, கடும்சொல் எதுவும் கூறாத, அடுத்தவரின் அமைதியையும் இசைவையும் கெடுக்காத பேச்சே நேரியப் பேச்சு.

நாம் நேரியப் பேச்சைப் பயில வேண்டும். அன்றாடம், நான் நேரியப் பேச்சைக் கொண்டிருக்கிறேனா என, தன்னைத்தானே ஆராய்ந்துகொண்டே இருக்க வேண்டும்.

இதுபோலவே நேரிய செய்கை. ஒவ்வொரு செயலும் மனதிலேயே முதலில் தோன்றுகிறது. பின்பு அது பேச்சின் மூலம் வெளிவருகிறது; அடுத்து உடம்பால் செய்யும் செயலாக வெளிப்படுகிறது. இந்தச் செய்கை நேரியதாக, சரியானதாக, கச்சிதமானதாக இருக்க வேண்டும்.

கொல்லுதல், திருடுதல், தவறான பாலியல் இன்பம், போதையூட்டும் பொருட்களை உட்கொள்ளுதல் ஆகியவற்றைத் தவிர்த்து, நேரிய செய்கையை ஒருவர் தம் வாழ்வின் ஒரு பகுதியாக்கிக்கொள்ள வேண்டும்.

இதுபோலவே நேரிய வாழ்வாதாரம் அடுத்த அறம் ஆகும். நாம் வாழ்வதற்கு பணம் தேவை. ஆனால், அது எப்படிச் சம்பாதிக்கப்படுகிறது, ஏதாவது தவறான வழியில், எவரையாவது ஏமாற்றிப் பெறப்பட்டதா என ஆராய வேண்டும்.

இந்தப் போதனையில் துன்பம் பற்றிய பேருண்மை, துன்பக் காரணம் பற்றிய பேருண்மை, துன்ப நீக்கத்துக்கான பேருண்மை, துன்ப நீக்கத்துக்குக் கொண்டுசெல்லும் நெறி பற்றிய பேருண்மை ஆகிய நான்கு பேருண்மைகளை எடுத்துச் சொன்னார் புத்தர். அத்துடன் மூன்று வழிகளில் பேருண்மைகளை உணர்ந்திருப்பதாகவும் அவர் விளக்கினார்.

பேருரையின் முடிவில் கொண்டஞ்ஞர், 'தோற்றத்துக்கு உட்பட்டது எதுவானாலும் அது அழிவுக்கும் உட்பட்டதே' என்பதை முழுமையாக உணர்ந்தார். புத்த நெறியை ஏற்றுக்கொண்ட முதல் சீடர் அவரே. இந்த உரையின் மூலம் உலகில் தர்மச் சக்கரம் சுழலத் தொடங்கியது. புத்தருடைய ஞானத்தையும் தெள்ளிய அறிவையும் நாம் முழுமையாக உள்வாங்க புத்த ஞானத்தைப் பயில வேண்டும்.

ஞானத்தில் எவ்வாறு நிலைபெறுவது என்றும், புத்தர் தனது ஐந்து சகாக்களுக்கும் கற்பித்தார். ஐவரும் ஞானத்தில் நிலைபெற்று 'அரஹந்தர்கள்' ஆனார்கள் எனக் குறிப்பு உள்ளது. வலுவான இரும்புத் தூண், புயல் காற்றில்கூட அசையாமல் இருப்பதைப்போல, இந்த உண்மைகள் அவர்களின் மனதில் அசையாத நெறியை உருவாக்கின.

புத்தர், ராஜகிரியில் இருந்து நாளந்தா வரை சில பிக்குகளுடன் சென்றுகொண்டிருந்தார். அந்தச் சமயம் ஒருவர் புத்தரை மிக மோசமான வசைகளால் திட்டி, பேசத் தொடங்கினார். அதைக் கேட்ட சீடர்கள் ஆத்திரம் அடைந்தனர். ஆனால், புத்தரிடம் சலனமே இல்லை.

'யுத்தக் களத்தில் செல்லும் யானை, எல்லா திசைகளில் இருந்து வரும் அம்புகளைப் பொறுத்துக்கொண்டு, தன் இலக்கை நோக்கி நடந்துபோவதுபோலத்தான் நான் செயல்படுவேன். புகழ்ச்சியும் இகழ்ச்சியும் எனக்கு ஒன்றே. இந்த இரு சூழ்நிலைகளிலும் சமநிலையுடன் இருப்பதே உண்மையான தம்மம் ஆகும்' என புத்தர் விளக்கினார்.

புத்தரின் தோழமை நமக்குத் தேவையாக இருக்கிறது. மனிதர்களுக்கு அவர்களின் மனமே ஒளி தரும் கருவி என்கிறார். புத்தர் எப்போதும் இனிமையான சொற்களையே பேசினார். சொல்லாலும் செயலாலும் எந்த மனிதனையும் காயப்படுத்திவிடக் கூடாது என்பது அவரது நெறி. அறிவுக்குப் பொருந்தாத எதன் மீதும் அவர் நம்பிக்கை வைக்கவில்லை. எளிய மக்களுக்காகவே அவர் பேசினார்.

அவர் பேசிய மொழி, பாலி. அது மகத நாட்டு மக்கள் பேசி வந்த மொழி. அதற்கு எழுத்துக்கள் இல்லை. அது மட்டும் அல்ல. அவர் காலத்தில் பாலி, பிராகிருதம், சம்ஸ்கிருதம் போன்ற எந்த மொழியும் எழுத்துமொழியாக இல்லை. எல்லாம் பேச்சுமொழிகளே. புத்தர் தன் காலத்தில் எதையும் எழுதவில்லை.

புத்தர் இறந்த பிறகு அவரது சீடர்கள் ஒன்றுகூடி ஆலோசனை செய்தார்கள். அதில் புத்தரின் அறவுரைகளையும் செயல்பாடுகளையும் தொகுத்துவைப்பது என முடிவுசெய்தார்கள். வாழ்நாள் முழுவதும் புத்தரின் நிழல்போல் இருந்த ஆனந்தனிடம் 'சுத்த பிடகம்', 'அபிதம்மப் பிடகம்' இரண்டையும் தொகுக்கச் சொன்னார்கள். உபாலியிடம் 'விநய பிடகம்' தொகுக்கச் சொன்னார்கள். பின்னர் ராஜகிருகத்தில் 500 பிட்சுக்கள் ஒன்றுகூடினார்கள். அதுதான் முதல் பௌத்த மாநாடு. அதில் இந்தத் தொகுப்புகள் முன்வைக்கப்பட்டு, திருத்தங்கள் மேற்கொள்ளப்பட்டு அங்கீகரிக்கப்பட்டன.

மன்னர் அசோகன் பௌத்த ஞானத்தை ஏற்றுக்கொண்டு, கபிலவஸ்து, புத்தகயா, சாரநாத், ராஜகிருகம், குசிநரா போன்ற புத்தரின் வாழ்வோடு தொடர்புடைய முக்கியமான இடங்களில் எல்லாம் ஸ்தூபிகள் அமைத்தார். அவரின் ஞானமொழிகளை கல்வெட்டில் பொறித்துவைத்தார்.

கோபம், மோகம் அல்லது பயத்தை மனம் எதிர்கொண்டு எதிர்வினை புரியும்போது, மனம் நெருக்கடிகளுக்கு உள்ளாகும்; அதனால் மிகவும் பதற்றப்படும்; அதன் காரணமாக உடலில் நடுக்கம், பீதி உண்டாகும். இதனால் மனக் குழப்பம் அதிகமாகும்; நிம்மதி போய்விடும். மனதைத் தூய்மைப்படுத்த, நெறிப்படுத்த புத்த விபஸ்ஸனா வழிகாட்டுகிறது.

பிறப்பில் இருந்து இறப்பு வரை, நமது மூச்சு உள்ளே வருவதும் வெளியே செல்வதுமாகவே இருந்துவருகிறது. இந்த மூச்சுதான் நமது மன ஒருமைக்கு உரிய பொருள். ஒருவர் மூச்சை உற்றுநோக்கி விழிப்புஉணர்வு பெறுவதே விபஸ்ஸனா. தூய்மையான உற்றுநோக்கலே அந்தப் பயிற்சி. கரையில் அமர்ந்திருப்பவர் ஆற்றோட்டத்தைக் கவனிப்பது போன்ற செயல் அது. இப்படி ஒருமைகொள்ள மனம் எளிதில் வசப்படாது. கடினமாகவே இருக்கும். இதற்காகவே ஒரு வழிகாட்டி, ஆசான் தேவை.

புத்தரைப் பின்தொடர்வது என்பது ஒரு நீண்ட பாதை; வாழ்நாள் முழுவதும் தொடரும் பணி. அதன் முதற்படியாக, சொல்லாலோ அல்லது உடலாலோ மற்றவர்களின் அமைதிக்கும் இசைவுக்கும் பாதிப்பு வரக்கூடிய எந்த ஒரு செயலையும் செய்யாமல் இருத்தலே, புத்தர் காட்டும் எளிய வழி.

அலங்காரப் பொருளாக புத்தனை வீட்டில் வைத்திருப்பதைவிடவும் அவரது அறங்களில் ஒன்றைக் கைக்கொள்வதுதான் புத்தரைப் பின்தொடரும் உண்மையான வழி!

- சிறகடிக்கலாம்...

## இந்திய வானம் - 4
## எஸ்.ராமகிருஷ்ணன், ஓவியங்கள்: ரமேஷ் ஆச்சார்யா

### குற்றம் புரிந்தவர்

சென்னையில் குளிர்சாதன வசதி செய்யப்பட்ட பழக்கடை ஒன்றில் பழங்களை வாங்கிக்கொண்டிருந்தேன். என்னைக் கடந்துபோய் ஒரு முதியவர் ஆரஞ்சுப்பழங்களை எடுத்து முகர்ந்துபார்த்தார். *70* வயது இருக்கும். ஒடிசலாக, உயரமாக இருந்தார். கறுப்பு பேன்ட்டும் இளநீல வண்ண அரைக்கைச் சட்டையும் அணிந்திருந்தார். கையில் ஒரு மஞ்சள் பை இருந்தது. ஆரஞ்சுப்பழத்தை அதே இடத்தில் திரும்பப் போட்டுவிட்டு எதுவும் வாங்க விருப்பம் இல்லை என்பதுபோல, கடையின் வாசலை நோக்கி வெளியே நடந்தார்.

கண்ணாடிக் கதவைத் தள்ளி வெளியேறும்போது கடையின் மேலாளர் அவரை நோக்கி ''ஒரு நிமிஷம் நில்லுங்க!'' என்றார். அவர் தயக்கத்துடன் நின்று திரும்பிப் பார்த்தபோது, கையில் உள்ள பையைத் தரும்படி கேட்டார்.

முதியவர் ஒரு நிமிடத் தயக்கத்துக்குப் பிறகு பையை நீட்டினார். மேலாளர் அந்தப் பையினுள் கையைவிட்டு சிறிய அன்னாசிப் பழம் ஒன்றை வெளியே எடுத்தார். கடையில் வேலைசெய்யும் இளம்பெண்களில் ஒருத்தி சத்தமாகச் சொன்னாள்...

''பதினஞ்சு நாளா பாத்துக்கிட்டே இருக்கேன். தினமும் இப்படி ஒரு பழத்தைத் திருடிக்கிட்டிருக்கார். அதான், இன்னைக்கு மேனேஜர்கிட்ட சொல்லி, பிடிச்சுக் கொடுத்துட்டேன்.''

கடை மேலாளர் மிக ஆபாசமான வார்த்தைகளால் அந்த முதியவரைத் திட்டினார். பழம் வாங்க வந்தவர்கள் அவரை வெறித்துப் பார்த்தபடியே இருந்தார்கள். வியாபாரத்துக்கு இந்த நிகழ்வு இடையூறாக இருக்கிறது என உணர்ந்தவர்போல மேலாளர், ''ஓரமா வந்து நில்லுய்யா'' என முதியவரின் கையைப் பிடித்து இழுத்து பில் கவுன்ட்டரை ஒட்டி நிறுத்தினார்.



முதியவர், மேலாளரை ஏறிட்டுப் பார்க்கவில்லை. அடுக்கிவைக்கப்பட்டிருந்த ஆப்பிள் பழங்களை வெறித்துப் பார்த்தார். அதைக் கவனித்த மேலாளர் குரலை உயர்த்தாமலேயே சொன்னார்...

''எதுக்குடா திருடித் திங்கிறே? அறிவு இல்லை, வயசாகிருச்சேனு பார்க்கிறேன்... இல்லைனா கையை உடைச்சுருவேன்.''

முதியவரிடம் சலனமே இல்லை.

அவரிடம் இருந்து பிடுங்கிய அன்னாசிப்பழத்தை அடுக்கில் கொண்டுபோய் வைத்தாள் இன்னோர் இளம்பெண். அந்த முதியவர் தயக்கமான குரலில் கேட்டார்...

''நான் கிளம்பலாமா?''

ஏதோ அலுவலகம் முடிந்து கிளம்பும்போது கேட்பதுபோல அத்தனை இயல்பாக முதியவர் கேட்டது, மேலாளருக்கு ஆத்திரத்தை உண்டு பண்ணியிருக்கவேண்டும்.

''இனிமே உன்னை கடைப் பக்கம் பார்த்தேன்... காலை உடைச்சுருவேன், போய்யா'' எனத் திட்டினார்.

அந்த முதியவர் கண்ணாடிக் கதவைத் தள்ளி, திறந்து வெளியே நடந்தார். அந்த நடையில் குற்றவுணர்ச்சி இல்லை. அவரது தலை குனியவில்லை. அவசரம் இல்லாமல் மெதுவாக, மேற்கு நோக்கி அவர் நடந்துபோவதைப் பார்த்துக்கொண்டிருந்தேன்.

அந்த முதியவர் ஏன் தினம் ஒரேயொரு பழத்தைத் திருடினார்? வறுமையினாலா அல்லது திருடுவது அவரது பழக்கமா? அவரது தோற்றத்தைப் பார்த்தால், ஓய்வுபெற்ற மனிதர் போல் இருக்கிறார். ஒருவேளை வீட்டைவிட்டு துரத்தப்பட்டுவிட்டவரா? ஏன் இப்படி நடந்துகொள்கிறார்? பிடிபட்டபோதும் ஏன் அவரிடம் குற்றவுணர்வு இல்லை? இதுபோல ஒரு சம்பவம் மதுரையில் நடந்திருந்தால், ஒருவேளை அவரை அடித்திருப்பார்கள். அல்லது அவருக்கே அந்தப் பழத்தைக் கொடுத்து விரட்டியிருப்பார்கள். ஆனால், இங்கே கடை மேலாளர் நடந்துகொண்ட விதம், வியாபாரம் இந்த நிகழ்வால் பாதிக்கப்பட்டுவிடக் கூடாது என்பதில்தான் கவனமாக இருந்தது.

*10* நிமிடங்களில் கடை இயல்புக்கு வந்தபோது பில் போடுவதற்காக நின்றேன். முதியவரைக் காட்டிக்கொடுத்த பெண்ணை மற்றவர்கள் முறைத்துக்கொண்டிருந்தார்கள். ஒரு பெண், 'கடையில இவங்க அடிக்கிற கொள்ளைக்கு ஒரு பழத்தைத் திருடிக்கிட்டுப் போனா என்ன தப்பு?' என முணுமுணுப்பது கேட்டது.

முதியவரைக் காட்டிக்கொடுத்த பெண் குற்றவுணர்வோடு நின்றிருந்தாள். அடுக்கில் வைக்கப்பட்ட, திருடப்பட்ட அன்னாசிப்பழத்தை, நடந்த எதுவும் தெரியாமல் ஓர் ஆள் கையில் எடுத்து பில் போடுவதற்காக முன்னால் வந்துகொண்டிருந்தார்.

அவருக்குத் தெரியுமா, தான் கையில் வைத்திருக்கும் அன்னாசிப்பழத்தின் பின்னே ஒரு கதை இருக்கிறது என; அது திருடப்பட்ட பழம் என.



வீடு வந்து சேரும் வரை அந்த முதியவரும் இந்த நிகழ்வும் மனதை உறுத்திக்கொண்டே இருந்தார்கள். இதில் எது சரி, எது தவறு?

விவசாயியிடம் இருந்து மலிவு விலைக்குப் பழங்களை வாங்கி, அதைக் கொள்ளை விலைக்கு விற்பது தவறு இல்லையா? அந்தக் குற்றம் ஏன் கண்டுகொள்ளப்படுவது இல்லை?

ஆனால், பழம் திருடிய குற்றம் பெரிதாகப் பேசப்படுகிறது. இன்னொரு பக்கம் இதே கடையில் போலீஸ்காரர்கள் சில நேரங்களில், தங்களுக்குத் தேவையான பழங்களை பணம் கொடுக்காமல் எடுத்துப்போவதைப் பார்த்திருக்கிறேன். அது அனுமதிக்கப்பட்ட தவறா?

கடையில் வேலைசெய்யும் இளம் பெண்கள் மிகக் குறைவான சம்பளத்தில் நாள் முழுக்க, கால் கடுக்க நின்றுகொண்டிருக்கிறார்கள். அவர்களும் ஏமாற்றப்படுகிறார்கள்தானே?

இதே பழத்தை கூடையில் சுமந்து வீடுவீடாக விற்கும் கிழவிகள், வாழைப்பழத்துக்கு 50 காசுகள் அதிகம் சொன்னால் வாக்குவாதம் செய்யும் நாம், எந்தக் கேள்வியும் இல்லாமல் ஸ்டிக்கர் ஒட்டப்பட்ட பழங்களை ஏன் வாங்கிக்கொண்டு போகிறோம்?

எழுத்தாளர் அ.முத்துகிருஷ்ணன் சத்தீஷ்கரில் பயணம்செய்தபோது நடந்த ஒரு சம்பவத்தை என்னிடம் நினைவுகூர்ந்தார். அந்த நிகழ்வு பசுமையாக நினைவில் இருக்கிறது.

பழங்குடி மக்கள் வசிக்கும் மலைக்கிராமம் ஒன்றுக்குப் போயிருந்தபோது, அவர்கள் தோட்டத்தில் இருந்து ஒரு மாம்பழம் வேண்டும் எனக் கேட்டிருக்கிறார். இரண்டு, மூன்று மாமரங்களைத் தாண்டி ஒரு மரத்தில் இருந்து பழம் பறித்துத் தந்திருக்கிறார்கள். 'இந்த மரங்களில் பழங்கள் இருக்கின்றனவே... ஏன் பறிக்கவில்லை?' எனக் கேட்டதற்கு, 'இந்த மூன்று மரங்களும் பறவைகளுக்கும் அணில்களுக்குமானவை. அவை சாப்பிட்டதுபோக, மீதமான பழங்கள் உதிர்ந்துபோனால் சிறுவர்கள் எடுத்துச் சாப்பிடுவார்கள். ஆனால், நாங்கள் மரத்தில் இருந்து ஒரு பழத்தைக்கூட பறித்து விற்க மாட்டோம். மாமரங்கள் மனிதர்களுக்கு மட்டுமானது இல்லை' எனப் பதில் சொல்லியிருக்கிறார்கள்.

மாமரங்களை அணில்களுக்காகவும் பறவைகளுக்காகவும் விட்டுக்கொடுக்கும் மனிதர்கள் ஒரு பக்கம். ஒரேயொரு பழத்தைத் திருடியதால் பிடிபட்டுத் துரத்தப்பட்ட முதியவர் மறுபக்கம். இரண்டும் ஒரே இந்தியாவுக்குள்தான் நடந்தேறுகின்றன.

'மாங்கோ டிப்ளமசி' என்ற ஒரு சம்பிரதாயம் ஆண்டுதோறும் இந்தியா - பாகிஸ்தானுக்கு இடையில் நடைபெறுகிறது. ஒவ்வோர் ஆண்டு ஈத் பெருநாளின்போதும் பாகிஸ்தானில் இருந்து இந்தியாவுக்கு கூடையில் மாம்பழங்களைப் பரிசாக அனுப்பி வைப்பது வழக்கம்.

இந்த ஆண்டும் பாகிஸ்தான் பிரதமர், இந்திய பிரதமருக்கு 10 கிலோ மாம்பழங்களை அனுப்பிவைத்திருக்கிறார்; அதுபோலவே இந்திய ஜனாதிபதிக்கு 15 கிலோ மாம்பழங்கள். பதிலுக்கு இந்தியா, இதுபோல மாம்பழங்களைப் பரிசாக அனுப்புவது இல்லை. இந்தியா - பாகிஸ்தான் உறவு சீர்கெட்டிருந்த சூழலில்கூட பல ஆண்டுகளாக மாம்பழங்கள் பரிசாக அனுப்பப்படுவது தொடர்ந்து நடக்கிறது.

’ஏன் இந்தியா, பாகிஸ்தானுக்கு மாம்பழங்களை மறுபரிசாக அனுப்பிவைப்பது இல்லை?’ என்ற கேள்விக்கு, பாகிஸ்தான் மாம்பழங்களுடன் நாம் போட்டிபோட முடியாது என்ற ஒரு பதிலே கிடைத்திருக்கிறது.

மாம்பழங்களை இப்படிப் பரிசாக அனுப்பிவைக்கும் பழக்கம் மொகலாயர் காலத்தில் இருந்தே நடைமுறையில் இருந்திருக்கிறது. அக்பருக்கு இப்படி வகைவகையான மாம்பழங்கள் வந்து சேர்ந்தன என்கிறது வரலாற்றுக் குறிப்பு.

பழங்கள், காய்கறிகள், தானியங்கள், மருந்துப் பொருட்கள் உள்ளிட்ட அத்தனையும் கள்ளச்சந்தைக்கு உரிய பொருட்களாகிவிட்டன. எந்தப் பொருளை, எவ்வளவு விலைக்கு விற்பது என்பதற்கு ஒரு கட்டுப்பாடும் கிடையாது. தர நிர்ணயம், பரிசோதனை, கட்டுப்பாடு எதுவும் நடைமுறையில் இல்லை. உணவுப் பொருட்களில் நடைபெறும் கொள்ளை, சாமானிய மனிதர்களை அன்றாடம் வதைக்கிறது. காய்கறிக் கடையில், பழக்கடையில், உணவகத்தில் தனக்குத்தானே புலம்பிக்கொள்வதைத் தவிர, வேறு எதையும் மக்களால் செய்ய முடிவது இல்லை.

தடுக்கவும் கண்டிக்கவும் வேண்டிய அரசாங்கம் வேடிக்கை பார்க்கிறது. ’மக்களால், மக்களுக்காக நடக்கும் மக்களாட்சி’ என ஜனநாயகம் பேசிக்கொண்டிருக்கிறோமே அன்றி, சாமானிய மக்களின் பிரச்னைகளை, விலைவாசி உயர்வை, விவசாயிகளின் நெருக்கடியை, பண்பாட்டுச் சீரழிவுகளை யாரும் கண்டுகொள்வதே இல்லை.

இந்தச் சூழலில், இந்திய அளவில் இன்று யார் நமக்கு நம்பிக்கை தரும் மனிதர், எவரது எண்ணங்களை, செயல்களை, சிந்தனைகளை நாம் பின்பற்றுவது? ஊடகங்கள் உருவாக்கித்தந்த பிம்பங்களால் உருவாக்கப்பட்ட மனிதர்களே நம் முன்னர் நிற்கிறார்கள். அவர்களைத் தாண்டி, எளிமையும் தூய்மையும் நேரடியான களச் செயல்பாடும் கொண்ட எளிய மனிதர்கள், நிழல்களைப்போல எங்கோ தங்களின் இடையறாத பணியைச் செய்துகொண்டிருக்கிறார்கள்.

’மக்களால், மக்களுக்காக நடக்கும் மக்களாட்சி’ என்பது எத்தனை மகத்தான சொற்றொடர். 20 ஆண்டுகளுக்கு முன்பு வரை இதை மேடைப் பேச்சில் கேட்காத நாள் இல்லை. ஆனால், இன்று இதை இன்றைய தலைமுறை அறிந்திருக்குமா என்பது சந்தேகமே.



'மக்களால், மக்களுக்காக நடக்கும் மக்களாட்சி' என்ற சொற்றொடர் ஆபிரகாம் லிங்கன் பேசிய கெட்டிஸ்பர்க் உரையில் இடம்பெற்றது.

உலகின் தலைசிறந்த சொற்பொழிவுகளில் முக்கியமானது கெட்டிஸ்பர்க் உரை. அமெரிக்கக் குடியரசுத் தலைவர் ஆபிரகாம் லிங்கன் *1863*-ம் ஆண்டு, நவம்பர் மாதம் *19*-ம் தேதி, இந்த உரையை கெட்டிஸ்பர்க் போர்க்கள நினைவிடத்தில் நிகழ்த்தினார். *15,000* பேர் திரண்டிருந்த அந்தக் கூட்டத்தில் லிங்கன் பேசியது மூன்றே மூன்று நிமிடங்கள்தான். ஆனால், *272* சொற்கள் மட்டுமே அடங்கிய அந்தப் பேச்சு வரலாற்றில் இடம்பெற்றுவிட்டது.

அமெரிக்காவுக்கு ஆப்பிரிக்கக் கறுப்பின மக்கள் அடிமைகளாக, கப்பலில் அழைத்து வரப்பட்டனர். பண்ணைகளில் அடிமைகளாக விற்கப்பட்டு விலங்குகளைவிடவும் மோசமாக நடத்தப்பட்டனர். அடிமைகளுக்கு உடம்பில் அடையாளப் பச்சை குத்தப்பட்டது. கறுப்பின அடிமைப் பெண்கள் பாலியல் கொடுமைகளுக்கு உள்ளாக்கப்பட்டனர். ஆயிரக்கணக்கான அடிமைகள் சித்ரவதையால் உயிர் இழந்தார்கள்.

அடிமைகளை விற்பனைசெய்வது, பணயமாக வைத்துச் சூதாடுவது, அடமானம் வைப்பது, ஏலம்விடுவது நடந்தேறியது. அடிமைகளுக்கு எந்தவிதச் சட்டப் பாதுகாப்பும் கிடையாது. திருமணம் செய்துகொள்ளக்கூட உரிமை இல்லை. ஒரு வேளை உணவு மட்டுமே வழங்கப்பட்டது. அதுவும் கிடைக்காமல் பலர் பட்டினிக் கொடுமைக்கு உள்ளாக்கப்பட்டனர்.

'மனிதர்கள் அனைவரும் பிறப்பால் சமம். ஒரு மனிதனை இன்னொரு மனிதன் அடிமையாக்குவது தார்மீக உரிமைக்குப் புறம்பானது' என எதிர்ப்புக் குரல் கொடுத்தார் லிங்கன்.

அமெரிக்காவின் தென்மாநிலங்கள் கறுப்பர்களை அடிமைகளாகவே வைத்திருக்க வேண்டும் என்பதில் பிடிவாதம் காட்டின. அதை எதிர்த்து அமெரிக்க அரசும் வட மாநிலங்களும் போராடின. *1861*-ம் ஆண்டு முதல் *1865*-ம் ஆண்டு வரை இருதரப்புக்கும் நடந்த யுத்தமே, அமெரிக்க உள்நாட்டுப் போர்.

வட மாநிலங்கள் தரப்பில் *23,000* வீரர்கள் உயிர் நீத்தனர். அந்த வீரர்களின் நினைவிடத்தில் ஆபிரகாம் லிங்கன் செலுத்திய அஞ்சலிதான் கெட்டிஸ்பர்க் உரை.

'எல்லா மனிதர்களும் சுதந்திரமானவர்களாக உருவாக்கப் பட்டிருக்கிறார்கள். நாம் இன்று பெரியதோர் உள்நாட்டுப் போரில் ஈடுபட்டிருக்கிறோம். போர்க்களத்தில் நாம் கூடியிருக்கிறோம். நமது நாடு உயர்வடைய வேண்டும் என்பதற்காக, பலர் தங்கள் உயிரைத் தியாகம் செய்துள்ளனர். இங்கு போரிட்டு இறந்தவர்கள் செய்துமுடிக்காமல் விட்டுப்போன பணியைச் செய்துமுடிக்க, உயிரோடு இருக்கும் நாம் நம்மை முழுமையாக அர்ப்பணித்துக்கொள்ள வேண்டும். எந்த லட்சியத்தை அடைவதற்காக அவர்கள் தங்கள் உயிரை இழந்தார்களோ, அந்த லட்சியத்தை நாம் விசுவாசத்துடன் நிறைவேற்றுவோம். அவர்களின் தியாகம் வீண் போகாது. மக்களால், மக்களுக்காக உருவாக்கப்பட்ட மக்களின் அரசாங்கத்தை உலகத்தில் இருந்து யாராலும் அழிக்க முடியாது.'

மிகச் சுருக்கமான இந்த 'கெட்டிஸ்பர்க் சொற்பொழிவு' வரலாற்றில் இன்றும் போற்றப்படுகிறது. காரணம், இது உண்மையின் குரலாக ஒலித்ததே!

அடிமை முறை உலகில் இருந்து முற்றிலும் ஒழிந்துவிட்டது எனக் கூற முடியாது. அடிமை முறை உருமாற்றம்கொண்டிருக்கிறது. இன்றும் உலகின் பல்வேறு நாடுகளில், சுரங்கத் தொழில் தொடங்கி தொழிற்சாலை வரை கொத்தடிமைகள் போல மனிதர்கள் நடத்தப்படுகிறார்கள்.




படித்த, நாகரிகமான மனிதர்களின் வேலை எனப்படும் மென்பொருள் துறையிலும், நவீன கொத்தடிமைமுறை நடைமுறைப் படுத்தப்படுகிறது. அடிப்படை உரிமைகள் பறிக்கப்படுகின்றன. தற்கொலைகளும் மனச்சிதைவும் பெருகிவருகின்றன.

நாம் ஒவ்வொருவரும் வாழ்வில் அமைதியையும் நல்லிணக்கத்தையும் விரும்புகிறோம். ஆனால், வன்முறையையும் சுயநலத்தையும் மோசமான பண்பாட்டு சீரழிவுகளையும் வளர்த்துவருகிறோம். இந்த முரண்தான் உண்மையின் குரலை அடையாளம் காண முடியாதபடி தடுக்கிறது.

அரூபமான ஆடை அணிந்திருக்கிறேன் என, நிர்வாணமாக வீதியில் பவனிவந்த அரசனைக் கண்டு ஊரார் பலரும் உண்மையைச் சொல்லத் தயங்கியபோதும், வேடிக்கை பார்த்த குழந்தை ஒன்று, அரசர் ஆடை அணியவில்லை என உண்மையை உரத்துச் சொன்னதாக ஒரு கதை படித்திருக்கிறேன். அந்தக் குழந்தை நம் காலத்தில் காணாமல்போய்விட்டது. அல்லது அது உண்மையைச் சொல்வதை நிறுத்திக் கொண்டுவிட்டது. அந்தக் குழந்தையை மீட்பதும், உண்மையின் குரலை உலகு அறியச் செய்வதும் அனைவரின் வேலை. இன்றைய இந்தியா அதற்காகத்தான் காத்துக்கொண்டிருக்கிறது.

- சிறகடிக்கலாம்...

## இந்திய வானம் - 5
## எஸ்.ராமகிருஷ்ணன், ஓவியங்கள்: ரமேஷ் ஆச்சார்யா

### மூன்று தேவதைகள்

ஆந்திராவின் மதனபள்ளியில் உள்ள ரிஷிவேலி பள்ளிக்கு, சில ஆண்டுகளுக்கு முன்னர் சென்றிருந்தேன். ஜே.கிருஷ்ணமூர்த்தி உருவாக்கிய பெருமைக்குரிய உறைவிடப் பள்ளி. இந்தியா முழுவதும் இருந்து மாணவர்கள் வந்து தங்கிப் படிக்கிறார்கள். 'இந்தப் பள்ளியின் சிறப்பாக எதைக் கூறுவீர்கள்?' என அழைத்துச் சென்ற நண்பரைக் கேட்டபோது, அவர் சொன்னார்...

'இங்கே ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் உள்ள தோழமை உணர்வும், மாணவர்கள் ஒரு கம்யூனிட்டி போல ஒன்றாக இணைந்து கற்பதும், சேர்ந்து வாழ்வதுமே இதன் சிறப்பு. படிக்கும் ஒவ்வொரு மாணவன் மீதும் ஆசிரியர் தனி அக்கறை செலுத்து கிறார். வகுப்பறை ஜனநாயகபூர்வமானது. மாணவர்கள் வெளிப்படையாகக் கேட்கலாம்; உரையாடலாம்; விவாதிக்கலாம்.

ஆசிரியர்கள் மட்டும் அல்லாமல் எழுத்தாளர்கள், ஓவியர்கள், பல்துறை ஆளுமைகள் இங்கே வந்து சிறப்பு ஆசிரியர்களாக வகுப்பு எடுக்கிறார்கள். தனித்திறன்களை ஊக்கப்படுத்துகிறோம். உடலும் மனமும் இணைந்து வளர்ச்சியடையச் செய்கிறோம்.'

அந்த வளாகத்தில் கண்ட காட்சிகள், அவர் சொன்னவை முற்றிலும் உண்மை என்பதை அறியச் செய்தன. ஆசிரியர்களுடன் பேசிக்கொண்டிருந்தபோது, சிலர் அமெரிக்காவில் இருந்த நல்ல வேலையை விட்டுவிட்டு இங்கே ஆசிரியர்களாக விருப்பத்துடன் பணியாற்றுவதாகச் சொன்னார்கள். காரணம், ஆசிரியர் பணி என்பது, வேலை அல்ல; பொறுப்பு உணர்வுமிக்க சேவை.

இந்தப் பள்ளியை, அதன் கல்விமுறையை, ஆசிரியர்களை... காணும்போது, தமிழ்நாட்டில் நான் அறிந்த ஒரு பள்ளியும், அதில் பணியாற்றிய மூன்று ஆசிரியர்களும் நினைவுக்கு வந்தார்கள்.

*1989-ம் ஆண்டில் அந்த மூன்று ஆசிரியர்களும் ஒன்றாக தனியார் பள்ளியில் வேலைக்குச் சேர்ந்தார்கள். ஒருவர் ஆங்கில ஆசிரியர்; மற்றவர் கணிதம்; மூன்றாமவர் அறிவியல். மூவருக்கும் அப்போது திருமணம் ஆகவில்லை. வானில் இருந்து பூமிக்கு, பாடம் எடுப்பதற்காகவே வந்துவிட்ட தேவதைகளோ எனும்படியாக அவர்கள் இருந்தார்கள்.*



*அழகான தோற்றம், நேர்த்தியான உடை, இனிமையான பேச்சு, தேடித்தேடி புத்தகங்கள் படிப்பது, மாணவர்களோடு தோழமையுடன் பேசுவது, சக ஆசிரியர்களுடன் நட்பாக நடந்துகொள்வது, கொண்டுவந்த சாப்பாட்டை ஒன்றாகப் பகிர்ந்து சாப்பிடுவது என, அவர்கள் அந்தப் பள்ளியில் புதிய நட்பு வட்டத்தை உருவாக்கினார்கள்,*

*ஆங்கில ஆசிரியருக்கு கீட்ஸின் கவிதைகள் பிடிக்கும். அதை தமிழில் எடுத்துச் சொல்வார். அறிவியல் ஆசிரியருக்கு எஸ்.ஜானகி பாடல்கள் என்றால் உயிர்; தானும் கூடவே பாடுவார். கணித ஆசிரியருக்கு சமூக விஷயங்களில்தான் ஆர்வம். இலங்கை தொடங்கி ஈராக் வரை பேசுவார்.*

*இவர்களின் நட்பு ஒருவிதத்தில் மற்ற ஆசிரியர்களுக்குப் பொறாமையை, வெறுப்பை ஏற்படுத்தியது. சிலர் வெளிப்படையாகவே அவர்களைக்*

கேலிசெய்தார்கள். அந்த மூன்று ஆசிரியர்களும், மாணவர்களை 100 சதவிகிதத் தேர்ச்சி பெறவைத்து அவர்கள் வாயை அடைத்தார்கள்.

மூவரில் இங்கிலீஷ் டீச்சருக்குத்தான் முதலில் கல்யாணம் நடந்தது. அவரது கணவர் ஒரு கல்லூரிப் பேராசிரியர். அதற்குப் பிறகு சில மாதங்களிலேயே இரண்டு டீச்சர்களுக்கும் கல்யாணம் நடந்தது.

முதன்முதலாக தன் கணவர் சரியில்லை. குடிக்கிறார்; அடிக்கிறார் என அழுதார் இங்கிலீஷ் டீச்சர். மற்ற இரண்டு டீச்சர்களும் அவருக்குச் சமாதானம் சொன்னார்கள். ஆனால், அவர்கள் வீட்டிலும் இதே கதிதான் என்பதை வெளியே சொல்லிக்கொள்ளாமல்.

மூவரில் இருவருக்கு சிசேரியன் மூலம் குழந்தை பிறந்தது. ஆகவே, வீட்டில் இருந்து குழந்தையைக் கவனிக்க இரண்டு மாதங்கள் லீவு போட்டார்கள். பிறகு, குழந்தையைக் கவனித்துக்கொள்ள ஊரில் இருந்து வந்த மாமியார், தன்னைத் திட்டுவதைப் பற்றி, உணவு இடைவேளையில் புலம்பித் தீர்த்தார்கள். அடிக்கடி விடுப்பு எடுத்துக்கொண்டார்கள்.

அப்போதும் அவர்கள் வகுப்பைத் திறமையாகவே கையாண்டார்கள்; போட்டி போட்டுக்கொண்டு மாணவர்களை மதிப்பெண் பெறச் செய்தார்கள். அவர்களுக்குள் நட்பு இருந்தபோதும் உள்ளே பொறாமையும் வெறுப்பும் எரிச்சலும் கலந்தே இருந்தன. பள்ளியைப் பொறுத்தவரை அந்த நட்பு ஒரு பாதுகாப்பு வளையம் என்பதால், மூன்று பேரும் ஒன்றாகப் பழகிவந்தார்கள்.

ஒருமுறை 10-ம் வகுப்பு கணிதப் பாடத்தில் ஆறு மாணவர்கள் தோற்றுப்போனதற்கு, கணித ஆசிரியர் சரியாகப் பாடம் எடுக்காததே காரணம் எனச் சொன்னார் ஆங்கில ஆசிரியர். இதைக் கேட்டு கணித ஆசிரியர் கண்ணீர்விட்டு அழுதார். இவ்வளவுக்கும் அந்த ஆண்டு அறிவியலில் ஐந்து மாணவர்கள் தேர்ச்சிபெறவில்லை. இந்தப் பிரச்னை உருவான சில நாட்களில் சைக்கிளில் ஒன்றாக வருவது பிடிக்காமல், கணித ஆசிரியர் ஸ்கூட்டி வாங்கினார்.

'ஏன் எங்களால் வாங்க முடியாதா?' என மற்ற இரண்டு டீச்சர்களும் புது ஸ்கூட்டி வாங்கி, அதில் வரத் தொடங்கினார்கள்.

ஒருநாள் சம்பத் சார், தனது புது வீட்டு கிரகப்பிரவேசப் பத்திரிகை தந்தபோது, மூவரும் ஒன்றுகூடி தாங்களும் சொந்த வீடு கட்ட வேண்டும் என்பதைப் பற்றி பேச ஆரம்பித்தார்கள். தங்கள் கணவர் இதில் அக்கறை காட்டுவது இல்லை எனக் குறைபட்டுக்கொண்டார்கள். வீட்டு லோன் பற்றியும் ரியல் எஸ்டேட் சார்ந்தும் நிறையப் பேசிக்கொண்டார்கள்; பலரிடமும் ஆலோசனை கேட்டார்கள். மறந்தும் அவர்கள் புத்தகம், படிப்பு, இசை, சமூக விஷயங்கள் எதையும் பகிர்ந்துகொள்ளவில்லை.

சில மாதங்களின் முடிவில் கணவரை வற்புறுத்தி, புறநகரில் நிலம் வாங்கினார் ஆங்கில ஆசிரியர். உடனே மற்ற இரண்டு டீச்சர்களும் நகரின் வெவ்வேறு பகுதிகளில் போட்டிபோட்டுக்கொண்டு நிலம் வாங்கினார்கள். மூன்று டீச்சர்களும் ஆளுக்கு ஒரு வங்கியில் கடன் வாங்கி, வீடும் கட்டிக்கொண்டார்கள். அதற்கு, பள்ளியின் அத்தனை ஆசிரியர் - மாணவர்களையும் அழைத்து சாப்பாடு போட்டார்கள்.



வீடு கட்டும்போது தாங்கள் ஏமாற்றப்பட்ட விஷயங்களை, புதிய வீட்டின் வசதிகளைப் பற்றி அவ்வப்போது பேசிக்கொண்டார்கள். கட்டிய சில மாதங்களிலேயே மூவருக்கும் தங்களது வீடு பிடிக்காமல் போய்விட்டது. அதைப் பற்றி குறைசொல்லிப் புலம்பத் தொடங்கினார்கள். வங்கியின் வட்டி விகிதம் பற்றி கவலைப்பட்டார்கள். தங்கள் பிள்ளைகளை வேறு பள்ளிகளில் படிக்கவைத்தார்கள்.

புதிதாக வந்த கம்ப்யூட்டர் டீச்சர் மினுக்குவதாக வம்பு பேசினார்கள். புதிய நகை வாங்கியதைப் பற்றி பெருமை பேசினார்கள். பள்ளியில் சக ஆசிரியருக்குப் பிரச்னை உண்டானபோது, அவர்கள் ஒன்றுசேரவில்லை. தங்கள் உரிமைகளுக்குக்கூட அவர்கள் குரல் எழுப்பவே இல்லை. மெள்ள அவர்களுக்குள் பேச்சு சுருங்கிப்போனது. பரஸ்பரம் வணக்கம் சொல்லிக்கொள்வதே போதுமானதாக இருந்தது.

மூவரில் ஆங்கில ஆசிரியருக்குத் திடீரென சிறுநீரகப் பிரச்னை ஏற்பட்டது. காரணம், அவர் தினம் பள்ளிக்கு வந்தது முதல் தண்ணீரே குடிக்க மாட்டார். வீட்டில் இருந்து கொண்டுவந்த தண்ணீர் பாட்டிலை அப்படியே திரும்பக் கொண்டுபோவார். கணித ஆசிரியருக்கு ரத்தக்கொதிப்பு உருவானது. வகுப்பில் அதிகம் கோபப்பட்டார்; மாணவர்களைத் திட்டினார். சில வேளைகளில் 'தலைவலி' என வாய்விட்டு அழுதார். அறிவியல் ஆசிரியருக்கு கர்ப்பப்பையில் பிரச்னை. மருத்துவமனையில் அறுவைசிகிச்சை செய்துகொண்டார்.

10 வருடங்களுக்குள் மூவரும் உருமாறி இருந்தார்கள். உடலும் மாறியிருந்தது. அவர்களின் பேச்சில் இனிமை இல்லை; வம்பும் வெறுப்பும் எரிச்சலும் மட்டுமே மிச்சம் இருந்தன.

'இப்போது எல்லாம் மாணவர்கள் ஒழுங்காகப் படிப்பது இல்லை' என மூவரும் அலுத்துக்கொண்டார்கள். 'ஏன் இப்படி ஒரு வேலைக்கு வந்தோம்?' என சலித்துப்போனார்கள். உடல்நலம் குறித்து அலுத்துக்கொண்டார்கள். நியூஸ் பேப்பர் படிக்கக்கூட அவர்களுக்கு நேரம் இல்லாதுபோனது.

இன்னொரு பக்கம், பள்ளியில் 100 சதவிகிதத் தேர்ச்சிக்காகக் கடுமையாக வேலை வாங்கினார்கள். இதனால் வீட்டில் வளரும் பிள்ளைகளைக் கவனிக்க முடியவில்லை; கணவருடன் சண்டை. வீட்டுக்குப் போனாலும் தேர்வுத்தாள்கள் திருத்தவேண்டிய நிலை. அவர்களின் இயல்பு

முற்றிலும் மாறியது; எரிந்து விழுந்தார்கள்; சிறிய விஷயங்களுக்குக்கூட அழுது கண்ணீர்விட்டார்கள். சினிமாவுக்குப் போவதுகூட எரிச்சலாகவே இருந்தது. வகுப்பறையைச் சமாளிக்க, ஒரே பாடத்தை பல வருஷங்கள் நடத்திய அனுபவம் மட்டுமே அவர்களுக்குத் துணைசெய்தது.

மற்ற துறைகளைப்போல நமக்கு புரமோஷன் கிடையாது; வேறு பள்ளிக்கு மாறவும் முடியாது; புதிய நிர்வாகம் தங்களைப் போன்ற சீனியர்களைக் கண்டுகொள்வது இல்லை என புகார் சொன்னார்கள். வீட்டில் தனியே டியூஷன் எடுத்துச் சம்பாதிக்க ஆரம்பித்தார்கள். பணம், பணம், பணம்... இது மட்டுமே அவர்கள் வாழ்வின் முதன்மையானது.

எப்போது பள்ளிக்கு விடுமுறை விடுவார்கள் என அவர்களும் ஏங்க ஆரம்பித்தார்கள். உடல்நலம் இல்லை என காரணம் காட்டி தேர்தல் பணிகளில் இருந்து, ஒதுங்கிக்கொண் டார்கள். மூன்று டீச்சர்களும் ஒரே ஃபைனான்ஸ் கம்பெனியில் சீட்டு கட்டி ஏமாந்தார்கள். அதை மூவரும் வெளிக்காட்டிக்கொள்ளவும் இல்லை.




அவர்கள் வேலைக்குச் சேர்ந்து 25 ஆண்டுகள் ஆனதைக் கௌரவப்படுத்தும்விதமாக பள்ளி ஆளுக்கு ஒரு தங்க நாணயம் வழங்கியது. அந்த நிகழ்ச்சியில் மூவரது கணவர்களும் கலந்துகொள்ளவில்லை. மூவருக்கும் படிக்கிற பழக்கம் முற்றிலும் நின்றுபோனது. டி.வி மட்டுமே துணை. அதிலும் சினிமா, சீரியல் மட்டுமே. கோயிலுக்குப் போவதைக்கூட சிரமமாக நினைத்தார்கள்.

ஒவ்வோர் ஆண்டும் புதிதாக மாணவர்கள் வந்துசேரும்போதும், இந்தச் சுமையை எப்படித் தாங்குவது என உள்ளூர வெறுப்பு அடைந் தார்கள். ஆனாலும், அவர்கள் கற்றுத்தருவதில் குறைவைக்கவில்லை. ஒரே வேறுபாடு... அவர்களிடம் இருந்த அக்கறையும் இனிமையும் கூடுதல் ஆர்வமும் மறைந்துபோயிருந்தன. அவர்களை மாணவர்களுக்குப் பிடிக்கவில்லை. நிர்வாகமும் கடிந்துகொண்டே இருந்தது.

மூவரில் ஆங்கில ஆசிரியர், ஒருநாள் மாரடைப்பில் திடீரென இறந்துபோனார். காரணம், அவர் கடந்த 25 வருடங்களில் ஒரு நாள்கூட

உடற்பயிற்சியில் ஈடுபட்டதோ, வாக்கிங் சென்றதோ கிடையாது. எப்போதும் பதற்றம், மனநெருக்கடி, குடும்பப் பிரச்னை, வேளைக்கு உணவு சாப்பிடாத நிலை, பிள்ளைகளின் எதிர்காலம் குறித்த கவலை... இப்படி அவராகச் சேர்த்துக்கொண்ட *100* விஷயங்கள், அவரது வாழ்க்கைக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டது.

இதைக் கண்ட மற்ற இரண்டு டீச்சர்களும் அலுத்துக்கொண்டார்கள். ஆசிரியர் உத்தியோகமே இப்படி டென்ஷன்தான். 'ஸ்டூடன்ட்ஸ் நம்மைப் புரிஞ்சிக்கிட மாட்டாங்க; வீட்டுலயும் நம்மைப் புரிஞ்சிக்கிட மாட்டாங்க; நிர்வாகமும் நம்மைப் புரிஞ்சிக்கிடாது. பேசிப் பேசி தொண்டை வறண்டு, நோயாளியாகிச் செத்துப்போறதுதான் மிச்சம்.'

வானில் இருந்து இறங்கிய தேவதைகள் போலத்தானே இவர்கள் பள்ளிக்கு அறிமுகம் ஆனார்கள்... ஏன் இந்த நிலை உருவானது? ஏன் அவர்கள் வாழ்க்கை வட்டத்தைச் சிறியதாக்கிக்கொண்டே வந்து, முடிவில் நத்தை தன் ஓட்டை முதுகில் சுமப்பதுபோல தன் வீடு, தன் குடும்பம் எனச் சுருங்கிப்போனார்கள்.

புரையோடிப்போன சமூக நோய்கள் அத்தனையும் ஆசிரியர்களையும் பற்றிக்கொண்டுவிட்டன. ஆண் - பெண் என்ற பேதம் இல்லை. மற்ற துறைகளில் தவறுகளே இல்லையா எனக் கேள்விகள் எழக்கூடும். கல்வி கூடுதல் பொறுப்பும் அக்கறையும்கொண்ட துறை அல்லவா? ஆயிரம் மாணவர்களுக்குப் பாடம் நடத்தும் அவர்களுக்கு, யார் பாடம் நடத்துவது?

'விளையாடு... விளையாடு...' என மாணவர்களைச் சொல்லும் எத்தனை ஆசிரியர்கள் விளையாடுகிறார்கள்? சரிவிகித உணவு பற்றி போதிக்கும் எத்தனை பேர் சரிவிகித உணவை எடுத்துக்கொள்கிறார்கள்? எத்தனை ஆசிரியர்கள் வீட்டில் புத்தக அலமாரி உள்ளது?

ஆசிரியர்கள், வட்டிக்குவிட்டு பணம் சம்பாதிக்கிறார்கள்; மாணவிகளுக்கு பாலியல் தொல்லை தருகிறார்கள்; குடித்துவிட்டு வகுப்புக்கு வருகிறார்கள்; பள்ளியே கேள்வித்தாளை நகல் எடுத்துத் தந்து, காப்பி அடிக்கவிடுகிறார்கள் என்பன போன்ற செய்திகளை நாளிதழ்களில் வாசிக்கும் ஒவ்வொரு பெற்றோரும், கல்வி குறித்து பயம் கொள்ளவே செய்கிறார்கள்.

ஜே.கிருஷ்ணமூர்த்தி, சிறந்த சிந்தனையாளர் மட்டும் அல்ல... தேர்ந்த கல்வியாளரும்கூட. மாற்றுக்கல்வி குறித்த முக்கிய விஷயங்களை ஜே.கிருஷ்ணமூர்த்தி தனது உரையில் பகிர்ந்துகொள்கிறார்.

'நீங்கள் ஏன் கல்வி கற்கிறீர்கள்... பெற்றோர்கள் பள்ளிக்கு அனுப்பிவைக்கிறார்கள் என்பதால் மட்டும்தானா..! எதற்காக இந்தப் பட்டம், வேலைக்குப் போய் பணம் சம்பாதிக்க மட்டும் தானா?! வரலாறு, கணிதம், அறிவியல், மொழிப்பாடம்... என மாணவன் மண்டைக்குள் தகவல்களைத் திணித்து நிரப்புவதுதான் ஆசிரியர் வேலையா என்ன?

உலகம், பல்வேறுவிதமான மனிதர்கள், சூழ்நிலைகள், நெருக்கடிகள், ஏற்றத்தாழ்வுகளைக் கொண்டது. அவற்றைப் புரிந்துகொள்ளவும், கடந்துசெல்லவும் வென்று சாதிக்கவும் கல்வி அவசியம்தானே!

மாற்றங்களை உருவாக்குவதே கல்வியின் முதல் வேலை. குரங்கை இன்னோர் உயிரினமாக நாம் மாற்ற முடியாது. ஆனால், நமக்குள் உள்ள பொறாமை உணர்வை, வெறுப்பை, தீமையை நாம் மாற்றிக்கொள்ள முடியும்தானே! மனிதகுல நாகரிகத்தில் கல்வியே மிகப் பெரிய மாற்றங்களுக்குக் காரணம்.

ஒருவனை சமூக மனிதனாக மாற்றுவதற்கு கல்வியே துணை செய்கிறது. கல்வி என்பது, பாடம் படிப்பது, மதிப்பெண்கள் வாங்குவது மட்டும் அல்ல... உலகோடு உறவாடுவதற்கும் நம்மையும் நமது சமூகத்தையும் புரிந்துகொள்வதற்கும், பேதங்களைக் கடந்து மனிதர்களை நேசிப்பதற்கும் சேவை செய்வதற்குமே கல்வி தேவைப்படுகிறது.

பணம், பெயர், புகழ் எனத் தேடும் வாழ்க்கை மட்டுமே நமக்கு அறிமுகமாகி இருக்கிறது. அது நிறைவான வாழ்க்கை அல்ல. அந்த வாழ்க்கை வெறுப்பு, கோபம், குரோதம், வன்முறை, ஏமாற்றம் இவற்றையே பரிசாக அளிக்கிறது. சந்தோஷமும் சுதந்திரமும் குழப்பமும் இல்லாத வாழ்க்கையே அர்த்தப்பூர்வமானது. அதற்குச் சரியான கல்வியால் மட்டுமே வழிகாட்ட முடியும்' என்கிறார் ஜே.கே.

ஒரு பெற்றோராக இன்றைய கல்வி நிலை மிகுந்த கவலை அளிக்கிறது. தாத்தா, சித்தி, பெரியம்மா, பெரியப்பா, தங்கை... என குடும்பத்தில் பலரும்

ஆசிரியர்கள் என்பதால், அவர்களின் நெருக்கடியையும் அக்கறையையும் உணரவும் முடிகிறது!

பிராய்லர் கோழிகளை உருவாக்குவதுபோல, செயற்கையாக நம் பிள்ளைகளை ஒரு பள்ளி மதிப்பெண்கள் அடிப்படையில் அறிவாளியாக்க வேண்டுமா என்ற முடிவு நம் கையில்தான் இருக்கிறது. அப்படி பிள்ளைகள் முதல் இடம் பெற வேண்டாம் என்பதில் நான் உறுதியாக இருக்கிறேன். உங்கள் முடிவை நீங்கள்தான் எடுக்க வேண்டும்!

- சிறகடிக்கலாம்...

## இந்திய வானம் - 6

## எஸ்.ராமகிருஷ்ணன், ஓவியங்கள்: ரமேஷ் ஆச்சார்யா

### நன்மையின் குரல்

மகத மன்னன் பிம்பிசாரன், புத்தருக்குத் தானமாகத் தந்த வேணுவனத்தைக் காண்ப தற்காக பீகாரில் உள்ள ராஜ்கிர் சென்றி ருந்தேன். புராதனச் சின்னங்கள் அதிகம் உள்ள மாநிலம் பீகார். வரலாற்றுச் சிறப்புமிக்க 'பாடலிபுத்திரம்'தான் இன்றுள்ள பாட்னா. பௌத்த நினைவிடங்களான கயா, வைசாலி, நாளந்தா செல்லும் சாலைகளை ஷப்பான் அரசு உதவிசெய்து மேம்படுத்தியிருக்கிறது. பீகார் ஒரு நூற்றாண்டுக்குப் பின்னால் வாழ்ந்துகொண்டிருக்கிறதோ என எண்ணும் படியாகவே அதன் கிராமப்புறங்களும் அங்கு நிலவும் சாதியக் கொடுமைகளும் உள்ளன.

'ராஜ்கிர்' என அழைக்கப்படும் ராஷகிரஹம், பாட்னாவின் தென்கிழக்கே உள்ள மலைசூழ் அடிவார ஊர். வெப்ப நீரூற்றுகள் உள்ள இந்த இடம், இந்து பௌத்தம் சமணம் மதங் களுக்கான முக்கியமான புனித ஸ்தலமாகக் கருதப்படுகிறது. ராஷகிரஹம் ஒருகாலத்தில் இரட்டை நகரமாக இருந்துள்ளது. அதற்கு

32 பெரிய நுழைவாயில்கள் இருந்திருக்கின்றன. இன்று இருப்பது மலையை ஒட்டிய சிறிய ஊர் மட்டுமே. பாஹியான், யுவான் சுவாங் போன்ற பயணிகள் இந்த நகரைப் பற்றி எழுதியிருக்கிறார்கள்.

ராஜ்கிரின் சிறப்பு, புத்தர் தனது சீடர்களுடன் இங்கு வருகைதந்து மழைக் காலத்தைக் கழித்தார் என்பதே. அந்த நாட்களில்தான், மன்னன் பிம்பிசாரன் அவரை வரவேற்று, உணவு அளித்து, அவருக்குத் தானமாக 'வேணுவனம்' என்ற மூங்கில் வனத்தைத் தந்திருக்கிறான். பின்பு அந்த இடம் பௌத்தத் துறவிகளுக்கான வாழ்விடமாக உருவாகியிருக்கிறது. தற்போதைய வேணுவனம் அதன் நினைவில் உருவாக்கப்பட்டுள்ளது. எண்ணிக்கையற்ற அணில்கள் ஓடிவிளையாடும் குளிர்ந்த, அமைதியான வேணு வனமாக இன்று அது இல்லை... ஒரு குளமும் புத்தரின் சிலையும் அதையொட்டிய மூங்கில் தோட்டமும் தியான மண்டபமுமே காணப்படுகின்றன. புத்தரின் காலடிப்பட்ட இடம் என்பதே இதன் தனிச்சிறப்பு.



பீகார் மாநிலம் எங்கும் பெருவாரியான மக்கள், புகையிலை கலந்த பாக்கை மென்றுகொண்டே இருக்கிறார்கள். தேநீர்க் கடைகளில் டீ குடிப்பதற்கு முன்பாக இனிப்பு சாப்பிடுகிறார்கள். பீகார் கிராமப்புறங்களையும் அங்கே செல்லும் பேருந்துகளையும் காணும் போது நாம் இன்னோர் இந்தியாவுக்குள் இருப்பதுபோலவே தோன்றுகிறது.

பண்டைய பீகார், கல்வியில் மிகவும் சிறந்து விளங்கியது. அங்கேதான் 'நாளந்தா', 'விக்கிரமசீலா' போன்ற பௌத்தப் பல்கலைக் கழகங்கள் இருந்தன. ஆனால் இன்று, கல்வியில் பீகார் மிகவும் பின்தங்கியிருக் கிறது. வேலை கிடைக்காமல் பிழைப்பு தேடி, மாநிலம்விட்டு மாநிலம் அலையும் பீகாரிகளை எல்லா ரயில் நிலையங்களிலும் காண முடிகிறது. பீகாரிகளின் வாழ்க்கை அவலத்தை, சாதியக் கொடுமைகளைக் காண முடிகிறது. பௌத்த சமயம் வேர் ஊன்றிய பீகாரில் ஏன் இன்றும் சாதிப் பிரச்னை அப்படியே இருக்கிறது? காரணம், நிலப்பிரபுத்துவம் அப்படியே இருக்கிறது. விவசாயக் கிராமங்களில் இன்றும் உயர்சாதியினரே தலைவர்களாக இருக்கிறார்கள். சாதிய ஒடுக்குமுறை வெளிப்படையாகவே நடைபெறுகிறது. பாட்னாவில் உள்ள விந்து வங்கிகளில் சாதிவாரியாக விந்து சேகரித்து வைக்கப்பட்டுள்ளது. 'செயற்கைக் கருத்தரிப்பில்கூட சாதிக் கலப்பு வந்துவிடக் கூடாது என்பதில்

கவனமாக இருக்கிறார்கள்' என்கிறார் மருத்துவர் சின்ஹா. இதை உறுதிப்படுத்துவதுபோல ஒரு சம்பவம் கயா மாவட்டத்தில் நடைபெற்றுள்ளது.

செயற்கைக் கருத்தரிப்பு செய்து, கர்ப்பம் தரித்த மாலா என்கிற இளம்பெண் பிரசவத் துக்காக அனுமதிக்கப்பட்டபோது, அவளது கர்ப்பத்துக்குக் காரணமாக அமைந்த விந்து, தாழ்த்தப்பட்ட சாதியைச் சேர்ந்தவருடையது எனச் சந்தேகித்த கணவன், குழந்தை பிறந்தவுடனேயே கொன்று, சாக்கடையில் எறிந்துவிட்டான். அத்துடன் தாழ்ந்த சாதிக் கருவைச் சுமந்தாள் என்பதற்காக மனைவியையும் விலக்கிவைத்துவிட்டான். இப்படி பீகாரில் புரையோடிப்போன நோயாக சாதி வளர்ந்திருக்கிறது. ஆனால், இதே பீகாரில் தூரத்து நட்சத்திரங்களைப்போல ஒளிரும் சில அபூர்வமான நிகழ்வுகளும் அதற்குக் காரணமான மனிதர்களும் இருக்கவே செய்கிறார்கள்.

பாகல்பூர் அருகில் உள்ள தார்ஹரா கிராமத்தில் ஒரு பழக்கம் இருக்கிறது. அந்த ஊரில் யார் வீட்டில் ஒரு பெண் குழந்தை பிறந்தாலும் 10 மரங்களை நட்டுவைக்கிறார்கள்; அதுவும் மாமரத்தையே விரும்பி நடுகிறார்கள். லட்சுமியின் அவதாரமாகவே பெண் பூமியில் பிறக்கிறாள். அதைக் கொண்டாடும்விதமாகவே தாங்கள் மரக்கன்றுகளை நடுவதாகக் கூறுகிறார்கள். கங்கைக் கரையோரக் கிராமம் என்பதால் செழித்துக் காணப்படும் இந்த ஊரில், தற்போது 20 ஆயிரம் மாமரங்கள் இருக்கின்றன. இந்த மாமரங்கள் அந்தப் பெண்களுக்குச் சொந்தமானவை. அவற்றில் இருந்து கிடைக்கும் பழங்களை விற்றுவரும் பணம் அவர்களுக்கு உரியதே. 'ஒருசிலர் தனது மகள் பிறந்த சந்தோஷத்தைக் கொண்டாட 30, 40 மரங்கள் வரை நடுவதுகூட இந்த ஊரில் சகஜம்' எனச் சொல்கிறார்கள். மகள் வளர்ந்து, படித்து, சம்பாதிக்க ஆரம்பிப்பதற்கு முன்பு மாமரங்கள் பழம் கொடுக்கத் தொடங்கிவிடும். தான் பிறந்தபோது வைத்த மாமரத்தின் பழங்களை அந்தப் பெண் ருசிப்பதோடு, அதன் வருவாயைக்கொண்டு படிப்புச் செலவையும் சமாளித்துக்கொள்கிறாள். பெண்சிசுக் கொலை, கருக்கலைப்பு, வரதட்சணைக் கொடுமை என பெண்களுக்கு எதிரான வன்முறைகள் இந்தியாவில் தீவிரமாக வளர்ந்துள்ள சூழலில், இப்படி ஒரு பசுமைக் கிராமம் இருப்பது நிச்சயம் பாராட்டுக்கு உரியது. இந்த ஊரின் தனித்துவம் பற்றி அறிந்த பீகார் முதலமைச்சர் நிதிஷ்குமார், தார்ஹராவுக்கு வருகைதந்து மரம் நடும் மரபைப் பாராட்டியதோடு, அங்கே பெண்கள் பள்ளி ஒன்று அமைக்கவும் உத்தரவு போட்டிருக்கிறார்.





துரைப்பாண்டி

இதே பீகாரில், மின்சார வசதிகூட இல்லாத தனது சொந்த கிராமத்துக்கு அரிசி உமியில் இருந்து மின்சாரம் தயாரிக்கும் தொழிற்சாலை ஒன்றை உருவாக்கியிருக்கிறார் கியானேஷ் பாண்டே. பனாரஸ் பல்கலைக்கழகத்தில் எலெக்ட்ரிக்கல் இன்ஜினீயரிங் படித்து முடித்த இவர், அமெரிக்காவில் உள்ள புகழ்பெற்ற நிறுவனம் ஒன்றில் வேலையில் இருந்தார். தனது சொந்த ஊருக்கு ஏதாவது செய்யவேண்டும் என விரும்பி வேலையைத் துறந்துவிட்டு, மாற்று மின்சார உற்பத்தியில் கவனம் செலுத்தினார். இவரைப் போலவே மாற்று மின்சாரத் திட்டத்தில் ஈடுபாடுகொண்ட மூன்று நண்பர்களைத் துணைக்குச் சேர்த்துக்கொண்டு அரிசி உமியில் இருந்து அவர் மின்சாரம் தயாரிக்க ஆரம்பித்தார்.

'இது பைத்தியக்காரத்தனமான முயற்சி, நிச்சயம் வெற்றி பெறாது' எனப் பலரும் கேலி செய்தார்கள். ஆனால், கியானேஷ் பாண்டே நம்பிக்கையுடன் தனது கைப்பணம் முழுவதையும் செலவுசெய்து மாற்று மின்சார முறையைப் பரிசோதனை செய்தார். அதில் வெற்றி கிட்டவே, தனது கிராமத்துக்கும் அதை ஒட்டிய ஊர்களுக்கும் மின்சாரம் விநியோகம் செய்ய ஆரம்பித்தார். அரிசி உமியில் இருந்து உற்பத்தியாகும் மின்சாரம், இன்று 25 ஆயிரம் வீடுகளுக்கு விநியோகம் செய்யப்படுகிறது. இதன் மூலம் ஒன்றரை லட்சம் மக்களுக்கும் மேற்பட்டோர் பயன்பெறுகிறார்கள். பல ஆண்டுகளாக மின்சாரம் இல்லாத கிராமங்கள் இன்று ஒளிர்கின்றன.

இவரது அரிய சேவையைப் பாராட்டி, கியானேஷ் பாண்டேவுக்கு 'ரியல் ஹீரோ விருது' மும்பையில் வழங்கப்பட்டிருக்கிறது. அந்தப் பணத்தில், தனது கிராமத்தில் உள்ள பள்ளியில் நூலகம் ஒன்றை அமைத்துக் கொடுத்திருக்கிறார். தன்னைப்போல அறிவியல் ஆர்வம்கொண்ட இன்னொரு மாணவன் உருவாக வேண்டும் என்பதே தனது கனவு எனச் சொல்கிறார் பாண்டே. எல்லோருக்கும் வாழ்வின் லட்சியமாக பணம் மட்டும் இருப்பது இல்லை; அதைத் தாண்டி

மக்களுக்காகத் தங்கள் வாழ்க்கையை அர்ப்பணித்துக்கொள்பவர்கள் இருக்கத்தானே செய்கிறார்கள்!

பீகாரில் மட்டும் அல்ல; தமிழ்நாட்டிலும் தனக்கான அறத்துடன் வாழும் எளிய மனிதர்கள் நிறையவே இருக்கிறார்கள். அவர்கள் தங்களை வெளிச்சம்போட்டுக் காட்டிக்கொள்வது இல்லை. சுயநலத்துக்குள் தன்னை ஒடுக்கிக்கொண்டு வாழும் உலகில், யாரோ முகம் அறியாத மனிதனின் மரணத்துக்கு முதல் மாலை தரும் பூ வியாபாரி துரைப்பாண்டியைப் பற்றி இணையத்தில் பகிர்ந்துகொள்ளப்பட்ட செய்தி இதை உறுதிசெய்கிறது.

விருதுநகர் பழைய பஸ் ஸ்டாண்டு அருகே பூக்கடை நடத்திவரும் துரைப்பாண்டி, தினமும் வியாபாரம் முடிந்து, இரவு கடையைப் பூட்டிவிட்டுச் செல்லும்போது மறக்காமல் கடைக்கு வெளியே நான்கு மாலைகளைக் கட்டி, தொங்கவிட்டுச் செல்கிறார். காரணம், இரவில் யாராவது இறந்துவிட்டால் பூமாலை கிடைப்பது சிரமம். காலை வரை காத்திருக்க வேண்டும். அப்படி மாலை கிடைக்காமல் திண்டாடுபவர்களுக்காகவே பூ மாலைகளைத் தொங்கவிட்டுப் போகிறார். தேவைப்படுகிறவர்கள் இந்தப்

பூ மாலைகளை எடுத்துப் பயன்படுத்திக்கொள்கிறார்கள். சிலர் மறுநாள் தேடி வந்து காசு கொடுத்தால், அதை துரைப்பாண்டி ஏற்றுக்கொள்வது இல்லை.



இப்படி முகம் அறியாத மனிதர்களின் சாவுக்கு முதல் மாலை தருவதை ஓர் அறமாக, 15 ஆண்டுகளுக்கும் மேல் செய்துவருகிறார் துரைப்பாண்டி. ஒரு மாலையின் விலை 100 முதல் 200 ரூபாய் வரை ஆகிறது. ஆனால், தனது ஆத்ம திருப்திக்காக ஒவ்வொரு நாளும் நான்கு மாலைகளை இலவசமாகப் பகிர்ந்துகொள்கிறார்.

1,000 கோடி ரூபாய் சம்பாதிப்பவர்களிடம் இல்லாத அறம், இந்த எளிய பூ வியாபாரியிடம் இருக்கிறது. இவரைப்போல எத்தனையோ சாமானிய மனிதர்கள் தங்கள் வரம்புக்கு உட்பட்டு, அறம் செய்துகொண்டுதான் இருக்கிறார்கள். அதை விளம்பரம் செய்துகொள்வதோ, வெளிச்சம்போட்டுக் காட்டிக்கொள்வதோ கிடையாது. வாழ்வின் மீது நம்பிக்கைகொள்ளச் செய்வது இதுபோன்ற எளிய செயல்களே.

'21-ம் நூற்றாண்டு இந்தியா என்பது, அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சியில் மேம்பட்ட தேசம்' என ஒரு பக்கம் பறைசாற்றிக்கொண்டிருக்கிறோம். இன்னொரு பக்கம் சாதியக் கொடுமைகள், வன்முறை, தரம்தாழ்ந்துபோன கல்வி, அரசியல் அதிகார மோசடி... எனப் பல நூற்றாண்டுகளுக்குப் பின்னே போய்விட்டோமோ எனும்படியான நிலையே இருக்கிறது.

உலக அமைதிக்காக உரையாற்றும்போது தலாய்லாமா சொன்னதுதான் நினைவுக்கு வருகிறது.

'ஒவ்வொரு நாளும் நாம் காலையில் எழுந்தவுடன் படிக்கும் செய்தித்தாள்களிலும் தொலைக்காட்சிச் செய்திகளிலும் வன்முறை, கொலை, கொள்ளை, விபத்து, போர் என மோசமான செய்திகளையே அதிகம் அறிந்துகொள்கிறோம். இதுபோன்ற வேதனைச் செய்திகள் இல்லாத நாளே இல்லை. மனித உயிருக்கு மதிப்பு இல்லாமல்போய்விட்டது.

முந்தைய தலைமுறையில் எவரும் ஒரு நாளில் இத்தனை மோசமான செய்திகளைக் கேட்டிருப்பார்களா என்பது சந்தேகமே. நவீன உலகின் வளர்ச்சி என்பது இதுதானா?

அறிவியலும் தொழில்நுட்பமும் மனித நாகரிக வளர்ச்சிக்குப் பெரிய அளவில் துணை செய்திருக்கின்றன; தொழில்யுகத்தை உருவாக்கித் தந்திருக்கின்றன. ஆனால், மனித உறவுகள் சார்ந்த பிரச்னைகள்,

அடிப்படைத் தேவைகள் இன்றும் தீர்க்கப்படவே இல்லை. எல்லோருக்கும் கல்வி கிடைக்கவில்லை; பிளாட்பாரங்களில் மக்கள் குடியிருக்கிறார்கள்; முறையான மருத்துவ வசதிகள் கிடைப்பது இல்லை. நகரம், கிராமம் எனப் பேதம் இல்லாமல் பணம் சேர்ப்பதில் மட்டும்தான் மக்கள் அதிக ஆர்வம் காட்டுகிறார்கள். அதற்காக சந்தோஷத்தையும் நிம்மதியையும் இழக்கிறார்கள். இதுதான் நாகரிக வளர்ச்சியா?




உண்மையில், நமது வளர்ச்சியின் திசை தடுமாறியதாக உள்ளது. இந்த வளர்ச்சி சரியானதாக இல்லை. இப்போதே இதை மறுபரிசீலனை செய்து மாற்றிக்கொள்ளவிட்டால், எதிர்காலம் இதற்கு பெரிய விலை கொடுக்கவேண்டிவரும். இன்று உலகில் எங்கே, எது நடந்தாலும் அது நம்மைப் பாதிக்கிறது. பெர்லின் சுவர் இடிக்கப்பட்டுப் பிரிந்துகிடந்த மக்கள் ஒன்றுசேர்ந்தால், நாம் சந்தோஷம் கொள்கிறோம். ஆப்பிரிக்காவில் குழந்தைகள் பட்டினி கிடப்பதை அறியும்போது, நாம் துயரம் கொள்கிறோம். உலகமே ஒரு வீடாக உருமாறி இருக்கிறது.

இந்தச் சின்னஞ்சிறிய பிரபஞ்சம் நம் அனைவருக்குமானது. இதில் அமைதியும் இணக்கமும் அன்புமான வாழ்க்கையை உருவாக்கவேண்டியது நம் அனைவரின் கடமை. நாம் இயற்கையைச் சார்ந்து வாழ வேண்டியவர்கள். இயற்கையையும் உயிரினங்களையும் காக்கவேண்டியது நமது பொறுப்பு. அரசோ, அதிகாரத்தில் இருப்பவர் களோதான் மாற்றங்களைச் செய்ய முடியும் என்பது இல்லை. அமைதியையும் இணக்கத்தையும் உருவாக்கவேண்டிய பொறுப்பு நம் அனைவருக்குமே உள்ளது.

இரண்டுவிதமான சந்தோஷங்கள், துயரங்கள் நமக்கு உள்ளன. ஒன்று, உடல் சார்ந்தது; மற்றொன்று, மனம் சார்ந்தது. மனம் சார்ந்த சந்தோஷமோ, துயரமோதான் நம்மை அதிகம் பாதிக்கின்றன. ஆகவே, மனம் குறித்து நாம் கூடுதல் விழிப்புஉணர்வுகொள்ள வேண்டும். சந்தோஷத்தை உண்டாக்கிக்கொள்வதற்காக எவ்வளவு மோசமான வழிகளைக் கையாள்கிறோம் என்பது குறித்து நாம் யோசிக்க வேண்டும். சகிப்புத்தன்மையும் அன்புமே சமாதானத்தை உருவாக்கும். அதையே எல்லா சமயங்களும் வலியுறுத்துகின்றன!' என்கிறார் தலாய் லாமா.

தீமையின் குரல் உலகம் முழுக்க ஒலித்துக்கொண்டிருக்கும்போது, நன்மைக்காகக் குரல் தருவதற்கு கியானேஷ் பாண்டேயும் துரைப்பாண்டியும் நமக்குத் தேவைப்படுகிறார்கள். அந்தக் குரல்களை உள்வாங்கிக்கொள்வதும் உடன் இணைந்து ஒலிக்கவேண்டியதுமே நம் அனைவரின் கடமை!

- சிறகடிக்கலாம்...

## இந்திய வானம் - 7
## எஸ்.ராமகிருஷ்ணன், ஓவியங்கள்: ரமேஷ் ஆச்சார்யா

### நம்பிக்கையின் நான்கு கால்கள்

இரண்டாம் உலகப் போரின்போது யூதர்கள், படுகொலையில் இருந்து தப்பிக்க, அகதிகளாக வெளியேறி பல்வேறு நாடுகளுக்கும் போனார்கள். அப்படி அமெரிக்கா போன 'டோரன்' என்கிற யூதர், என்ன வேலைசெய்து பிழைப்பது எனத் தெரியாமல் பாஸ்டனில் சுற்றி அலைந்துகொண்டிருந்தார்.

நண்பரின் உதவியால் அவருக்கு ஒரே ஒரு மரமேஜை, இலவசமாகக் கிடைத்தது. அந்த மேஜை துறைமுக சரக்கு ஏஜென்ட் ஒருவரின் அலுவலகத்தில் பயன்படுத்தப்பட்டது. ஏஜென்ட் தனது அலுவலகத்தைக் காலிசெய்தபோது தேவையற்றது என, அந்த மேஜையைத் தூக்கி எறிந்துவிட்டார்.

அந்த மேஜையை என்ன செய்வது எனத் தெரியாமல் ஏற்றுக்கொண்டார் டோரன். முதலீடு செய்து தொழில் தொடங்க அவரிடம் பணம் இல்லை. இந்த மேஜையை என்ன செய்வது என யோசித்துக்கொண்டே இருந்தார். திடீரென ஒரு யோசனை உருவானது. அதன்படி அப்போது நகரில் இருந்த தொழிற்சாலை ஒன்றின் நுழைவாயிலில், அந்த மேஜையைப் போட்டு செய்தித்தாள் விற்கத் தொடங்கினார். அது சொற்ப வருமானத்தைத் தருவதாக அமைந்தது.

மாலை நேரங்களில் அதே மேஜை மீது பூங்கொத்துகளை அடுக்கி விற்க ஆரம்பித்தார். பின்னர் டைப் ரைட்டிங் மெஷின் ஒன்றை வாங்கி, மேஜையில் வைத்து டைப் அடித்துத் தரத் தொடங்கினார். மெழுகுவத்திகள் வாங்கிவந்து அடுக்கி விற்றார். இப்படி அவரது ஓயாத உழைப்பைக் கண்ட வில்லியம்ஸ் என்ற நண்பர், நொடித்துப்போன தனது ரெஸ்டாரன்ட் ஒன்றை அவரிடம் ஒப்படைத்தார். தனது முழுக் கவனத்தையும் உணவகத்தை மேம்படுத்து வதில் டோரன் செலவழித்தார். அங்கே முதலாளி அமர்ந்து கணக்குப் பார்க்கும் மேஜையாக அது உருமாறியது.

அடுத்த 10 ஆண்டுகளில் அந்த உணவகத்தில் இருந்து வளர்ந்து, பல்வேறு புதிய தொழில்களைத் தொடங்கினார் டோரன். பணமும் வசதியும் வந்து சேர்ந்தன. ஆனால், அவரது மேஜை மாறவே இல்லை. 25

ஆண்டுகளுக்குப் பிறகு அவர் தனது வருவாயின் ஒரு பகுதியை, மேஜையை தனக்கு இலவசமாகத் தந்தவருக்குக் கொண்டுபோய் கொடுத்து நன்றி செலுத்தினார்.



'ஒரு மேஜையின் மதிப்பு இத்தனை லட்சம் டாலரா?!' என வியந்து கேட்டார் ஏஜென்ட். அதற்கு டோரன் சொன்னார்... 'அது, வெறும் மர மேஜை அல்ல. நம்பிக்கையின் நான்கு கால்கள்.' ஒரு மர மேஜை டோரனின் வாழ்க்கையை உருமாற்றிவிட்டது. பொருட்கள், விலைமதிப்பு இல்லாத இடத்தை அடைவது இதுபோன்ற அனுபவத்தின் வழியேதான்.

நம் ஒவ்வொருவரிடமும் இதுபோல ஏதோ ஒரு பொருள் உள்ளது. அது உலகின் கண்களுக்குச் சாதாரணமானது. நமக்கு மட்டும்தான் அதன் முக்கியத்துவம் தெரியும்.

'பத்து ரூபாயின் மதிப்பு எவ்வளவு?' என வழக்குரைஞரான என் நண்பரின் அம்மா ஒருமுறை என்னிடம் கேட்டார்.

'இது என்ன கேள்வி... பத்து ரூபாய்தான்' என்றேன்.

’இல்லை... காலம் சில பொருட்களின் மதிப்பை அதிகப்படுத்திவிடுகிறது. நான் முப்பது வருடங்களாக பத்து ரூபாய் நோட்டு ஒன்றை வைத்திருந்தேன். என் வரையில் அதன் மதிப்பு பல லட்சங்களுக்கும் மேல். அந்தப் பத்து ரூபாய் தந்த நம்பிக்கையை எதனாலும் தந்திருக்க முடியாது’ என்றார்.

’எப்படி?’ எனக் கேட்டேன். அவர் சிரித்தபடியே சொன்னார்...

’ரூபாய் நோட்டு என்பது செலவு செய்ய மட்டும் அல்ல. நம்பிக்கையை உருவாக்குவதற்கும் தைரியம் கொள்வதற்கும் தேவைப்படுகிறது. முப்பது வருடங்களுக்கு முன்பு எனக்குக் கல்யாணமானபோது விவரம் தெரியாத கிராமத்துப் பெண். கணவர் குடும்பம் மிகப் பெரியது. கூட்டுக் குடும்பம். அந்த வீடும் அவர்களின் பழக்கவழக்கங்களும் கோபமும் ஏச்சும்-பேச்சும் பயமுறுத்துவதாக இருந்தன.

கல்யாணமாகி வந்த ஒரு மாதத்தில், எனக்கு மூச்சு முட்டிப்போனது. நான் எது செய்தாலும் யாராவது திட்டினார்கள். சினிமாவுக்குப் போவது என்றால் பத்து தடவை சொல்ல வேண்டும். ஹோட்டலுக்குப் போய்ச் சாப்பிடலாம் என்றால் திட்டுவார்கள். பூ வாங்கக்கூட என்னிடம் காசு கிடையாது. என் கணவர் வீட்டுச் செலவுக்கான பணத்தை அவரது அம்மாவிடம்தான் தருவார். நானாக காசு கேட்டாலும், ’உனக்கு எதுக்கு காசு? வேணும்னா அம்மாகிட்ட கேட்டு வாங்கிக்கோ’ என்பார். மாமியாரிடம் போய் எப்படி காசு கேட்பது என ஒடுங்கிப்போயிருந்தேன்.

ஆனால், நாளுக்குநாள் இந்த நெருக்கடி அதிகமாகவே என் அப்பாவை வரச்சொல்லி கடிதம் போட்டேன். என் அப்பா பள்ளி ஆசிரியர். கடிதம் போய்ச் சேர்ந்து நான்கைந்து நாட்களுக்குப் பிறகு, என்னைப் பார்க்க வந்தார். ஆறுதலாக நிறையப் பேசினார்.

’குடும்பம் என்றால் ஆயிரம் பிரச்னைகள் இருக்கத்தான் செய்யும். நீதான் புரிந்துகொண்டு அரவணைத்துப் போகவேண்டும். ஒருவேளை ரொம்பக் கஷ்டமாக இருந்தால், ஊருக்குப் புறப்பட்டு வர பஸ் சார்ஜுக்கு, இந்தப் பத்து ரூபாயை வைத்துக்கொள். பஸ் பிடித்து வந்துவிடு. பிறகு நான் பேசிக்கொள்கிறேன்’ எனச் சொல்லி பத்து ரூபாயைக் கையில் கொடுத்தார்.

அது வெறும் பணம் அல்ல... தைரியம். அதை கையில் வாங்கி ஒரு துணியில் முடிந்து வைத்துக்கொண்டேன். அந்தப் பணம் கையில் இருக்கிறது என்ற எண்ணம் என்னை மாற்றத் தொடங்கியது.

பிரச்னைகளைத் தைரியமாக எதிர்கொள்ளத் தொடங்கினேன்; சமாளித்தேன். பிள்ளைகளைப் பெற்று, வளர்த்து, படிக்கவைத்து இன்று நல்ல நிலைக்குக் கொண்டுவந்திருக்கிறேன். இந்த முப்பது வருடங்களில் எவ்வளவோ பணத்தைப் பார்த்துவிட்டேன். ஆனால், அந்தப் பத்து ரூபாயும் அது தந்த நம்பிக்கையும் மறக்கவே முடியாதது.

சில சமயம் அந்தப் பத்து ரூபாயைக் கையில் எடுத்துப் பார்ப்பேன். 'இனி எதற்கு இந்தப் பணம்?' எனத் தோன்றும். ஆனால், இது வெறும் பத்து ரூபாய் அல்ல; வாழ்க்கையைக் கற்றுக்கொடுத்த பொருள் என வைத்துக்கொண்டே இருந்தேன். எங்களின் அறுபதாம் கல்யாணம் நடந்தபோது அந்தப் பத்து ரூபாயை எடுத்து உண்டியலில் போட்டுவிட்டேன்.

'ஏன்?' எனக் கணவர் கேட்டார்.

'இனி எனக்கு அந்தப் பணம் தேவைப்படாது.

வாழ்க்கையை எதிர்கொள்ளும்போது பணமோ பொருளோ ஏதோ ஒன்று நம்பிக்கையூட்ட தேவைப்படுகிறது.'

நான் குறுக்கிட்டுச் சொன்னேன்...

'தென்மாவட்டங்களில் கிழவிகள் காது வளர்த்து பாம்படம் போட்டிருப்பார்கள். அது வெறும் நகை அல்ல. சாவுச் செலவுக்கான பணத்துக்கானது.'

நண்பனின் அம்மா சொன்னார்...

'கரெக்ட் தம்பி. யாரையும் எதிர்பார்க்காமல் நம் தேவைகளை நாமே நிறைவேற்றிக்கொள்ள வேண்டும் என்றால் பணம் முக்கியம். ஓர் ஆள் அவமானப்படாமல் வாழ வேண்டும் என்றால் பணம் இல்லாமல் முடியாது. எவ்வளவு பணம் வேணும்கிறது அவரவர் எண்ணத்தையும் விருப்பத்தையும் பொறுத்த விஷயம். ஆனால், யார் பணத்தைப் போதும் எனச்

சொல்லப்போகிறார்கள்? வாழ்க்கை முழுவதும் பணத்தைச் செலவழித்து, ஓர் உண்மையை உணர்ந்துகொண்டேன். அது என்ன தெரியுமா?



எல்லா விஷயங்களையும் பணத்தால் வாங்கிவிடவோ, சரிசெய்துவிடவோ முடியாது. பணத்தைவிட மனசு முக்கியமானது. அது இல்லாமல் பணம் மட்டும் இருந்து என்ன பிரயோஜனம்? பணம்கூடப் போராடி, கஷ்டப்பட்டால் திரும்பக் கிடைத்துவிடும். முறிந்த உறவுகளும் அறுத்து எறிந்த நட்பும் திரும்பக் கிடைப்பது எளிதே இல்லை!' என்றார்.

அவர் சொன்னது முற்றிலும் உண்மை.

யோசித்துப்பார்த்தால், உறவுகள் ஒன்று சேர்வதற்குப் பதிலாகத் துண்டித்துப்போவதற்கு பணம் அதிகம் காரணமாக இருந்திருக்கிறது. பணத்தால் எல்லோரையும் சந்தோஷப்படுத்திவிட முடியாது. பணத்தையும் 'நாணயம்' என்கிறோம். சத்தியத்தையும் 'நாணயம்' என்கிறோம். ஒரே சொல்தான்.

ஒருகாலத்தில் இரண்டும் மதிப்புமிக்கதாக இருந்திருக்கின்றன. இன்றைக்கு இரண்டுக்கும் மதிப்பு இல்லாமல்போய்விட்டது.

பணம் இல்லாமல் வாழ முடியாது. பணமே இன்றைய அளவுகோல். பணத்தை எப்படிச் சம்பாதிப்பது, எப்படிச் செலவுசெய்வது என்பதுதான் இன்றைய பிரச்னை. நாம் தேடும் பணம் தீதின்றி வந்ததாக இருக்க வேண்டும் என்கிறது திருக்குறள்.

பழைய நாணயங்களை வாங்குகிறவர்கள் எந்த நூற்றாண்டைச் சேர்ந்த காசு என்பதற்கேற்ப அதன் விலையை மதிப்பிடுகிறார்கள். அந்த நாணயம் அதன் பழைய மதிப்பைப்போல பல நூறு மடங்கு இன்று அதிகமானதாக மாறிவிடுகிறது. இன்னொரு பக்கம் சில நாணயங்கள் செல்லாக்காசு ஆகிவிடுகின்றன. அவை - இன்று வெறும் உலோகப்பொருட்கள்; காகிதங்கள். மனித வாழ்க்கையும் அப்படியானதே. சிலரது வாழ்க்கை மதிப்புமிக்கதாக ஆகிவிடுகிறது; சிலரது வாழ்க்கை அர்த்தமற்றதாக முடிந்துவிடுகிறது!

காலம்தான் பொருளின் மதிப்பை தீர்மானிக்கிறது. எதை முக்கியம் என நினைக்கிறோமோ, அது காலத்தில் அர்த்தமற்றதாகிப்போகிறது. எதைத் தேவையற்றது என நினைக்கிறோமோ அதை மதிப்புமிக்கதாக்கிவிடுகிறது. காலத்தின் இந்த ரசவாதத்தை நம்மால் புரிந்துகொள்ள முடிவதே இல்லை.

தனக்குக் கிடைத்த வாய்ப்பை எப்படிப் பயன்படுத்திக்கொள்ளப்போகிறோம் என்பதற்கு டோரன் ஓர் உதாரணம் என்றால், பார்வையற்றவரான ஹெலன் கெல்லர், தானே முயன்று கல்வி பயின்றதோடு பார்வையற்றோருக்கான

வழிகாட்டியாக உருமாறியது வரலாற்றுச் சாதனை. கண் பார்வை இல்லாமல், காது கேளாமல் பல்கலைக்கழகத்தில் படித்து இளங்கலைப் பட்டம் பெற்ற முதல் பெண்மணி என்ற சிறப்பைப் பெற்றவர் ஹெலன் கெல்லர். அமெரிக்காவைச் சேர்ந்த இவர் புகழ்பெற்ற பேச்சாளராகவும் எழுத்தாளராகவும் திகழ்ந்தார். மாற்றுத்திறனாளிகளுக்கான உரிமைகளைப் பெற்றுத்தந்ததில் ஹெலன் கெல்லரின் பங்களிப்பு மிக முக்கியமானது.

அவரது புகழ்பெற்ற உரைகள் தனி நூலாக வெளிவந்துள்ளன. கெல்லரின் குரல் கரடுமுரடானது. அவருக்கு தன் உரையை யார் கேட்கப்போகிறார்கள் எனத் தெரியாது. ஆனால், அவரது பேச்சில் உண்மை இருந்தது. சத்திய ஆவேசம் இருந்தது. தன்னை ஒரு சோஷலிசவாதியாக அறிவித்துக்கொண்ட கெல்லர், பொதுவுடைமைச் சிந்தனைகளுக்கு ஆதரவாகத்

தனது குரலை எழுப்பினார். கல்வியின் முக்கியத்துவம் பற்றிய உரையில் அவர் முன்வைக்கும் கருத்துகள் வலிமையானவை.

’பேச்சின் வலிமையை உலகுக்கு உணர்த்தியவர் சாக்ரடீஸ். அவர் சொல்லை ஓர் அஸ்திரம்போல பயன்படுத்தினார். அவரது ஒவ்வொரு சொல்லும் கேட்பவர் மனதைத் துளைத்து, ஆழமான பாதிப்பை ஏற்படுத்தின. உரையாடல்களின் மூலம் அவர் சொற்களின் உண்மையான பொருளை நமக்கு விளங்கச் செய்தார்.

வீரம், நீதி, தைரியம்... போன்ற சொற்களை நாம் பயன்படுத்துகிறோம். ஆனால், அதன் அர்த்தம் ஆளுக்கு ஆள் வேறுபடுகிறது; தேவைக்கு ஏற்ப மாறுபடுகிறது. ஆனால், இதன் உண்மைப்பொருள் என்ன, எப்படி அதை வரையறை செய்வது... சாக்ரடீஸ் அதை நமக்கு விளங்கச் செய்கிறார்.

தைரியம் என்ற ஒற்றைச் சொல்லை முன்வைத்து அந்தச் சொல்லின் பல்வேறு சாத்தியங்களை நமக்கு எடுத்துக்காட்டுகிறார். நாம் உச்சரிக்கும் சொற்களின் உண்மைப்பொருளை நாம் அறிந்துகொள்ள வேண்டும் என்பதை அவர் வலியுறுத்துகிறார். பேச்சின் வழியே உரத்தச் சிந்தனைகளை முன்வைத்து மாற்றங்களை உருவாக்க முயன்றார் சாக்ரடீஸ்.

சிந்தனையில் மாற்றத்தை உருவாக்குவதற்கு புத்தகங்கள் முக்கியமானவை. புத்தகங்களே எனது சிறந்த நண்பர்கள். புத்தகங்கள், மனிதர்களைப்போல சலிப்பு ஏற்படுத்துவது இல்லை; தொல்லை தருவது இல்லை; மோசமாக நடந்துகொள்வது இல்லை. அறிவை விருத்தி செய்துகொள்வது என்பது அளப்பரிய சந்தோஷம். அதற்கு புத்தகங்களே பெரிதும் துணை செய்கின்றன.

கல்வி, பார்வையற்றவர்களுக்குள் புது வெளிச்சத்தை உருவாக்குகிறது. வழிகாட்டுதலைத் தருகிறது. பார்வையற்றவர்கள் உங்களிடம் கருணையை வேண்டுவது இல்லை. மாறாக தங்களுக்கான சுதந்திரமான நடவடிக்கையை, வேலையை, சமஉரிமையை யாசிக்கிறார்கள். ஒவ்வொரு மாற்றுத்திறனாளியும் இரண்டுவிதங்களில் வேதனைப்படுகிறார். ஒன்று உடல்ரீதியான குறை; மற்றது மனரீதியான பாதிப்பு. இந்த இரண்டில் மனரீதியான பாதிப்புகளில் இருந்து விடுபட கல்வியும் உலக அறிவும் முக்கியம்.

மாற்றுத்திறனாளிகளில் பலர் தங்களின் இயலாமையை நினைத்து முடங்கிப்போய்விடுகிறார்கள். அது தவறானது. தங்களின் குறைபாடுகளைத் தாண்டி சாதனைகள் செய்வதற்கு அவர்கள் கல்வியைத் துணைகொள்ள வேண்டும். 'பார்வையற்றுப்போய் இருட்டில் இருப்பவர்களைவிட அறியாமை இருட்டில் இருக்கும் மனிதர்கள் பரிதாபமானவர்கள்' என்கிறார் ஹெலன் கெல்லர்.

சாவியும் சுத்தியலும் பேசிக்கொண்டதாக ஒரு கதை இருக்கிறது. சுத்தியல் சாவியிடம் கேட்டது... 'நான் பலசாலி. பூட்டை உடைத்துத் திறக்க பலத்தை உபயோகிக்கிறேன். நீயோ பலமற்றவன். ஆனால் எளிதாக பூட்டைத் திறந்துவிடுகிறாய். அது எப்படி?'

அதற்கு சாவி பதில் சொன்னது... 'நீ அடித்துத் திறக்கப்பார்க்கிறாய். நானோ பூட்டின் இதயத்தைத் தொட்டுத் திறக்க முயற்சிக்கிறேன். ஒன்றை உடைத்துத் திறப்பதைவிட இதயத்தைத் தொட்டுத் திறக்கவைப்பதுதானே சிறந்தது.'

இந்தக் கதையின் மாறுபட்ட வடிவங்கள் பல இணையத்தில் உலவுகின்றன. கற்பனைக் கதை என்றாலும் அது வலியுறுத்தும் உண்மை முக்கியமானது. இதயத்தைத் தொட்டுத் திறப்பது என்பது நாம் அனைவரும் மேற்கொள்ளவேண்டிய பணி. அதைச் சாத்தியப்படுத்துவது எளிதானது அல்ல. பூட்டுக்காவது திறப்பு எங்கே இருக்கிறது எனத் தெரியும். அதில் சாவியைப் பொருத்தினால் திறந்துவிடலாம். மனிதர்கள் விசித்திரமானவர்கள். அவர்களின் இதயத்தை எப்படித் திறப்பது என யாருக்கும் தெரியாது. அன்புதான் மனதைத் திறக்கும் ஒரே சாவி. அது எப்போது, எப்படி ஓர் இதயத்தைத் திறந்து தன்வசப்படுத்தும் என்பது விந்தையே!

- சிறகடிக்கலாம்...

## இந்திய வானம் - 8
## எஸ்.ராமகிருஷ்ணன், ஓவியங்கள்: ரமேஷ் ஆச்சார்யா

### தலைமுறையின் தூரம்

மாலை 4 மணி இருக்கும். பரபரப்பான வாகனப் போக்குவரத்துக்கு இடையில் மதுரை சிம்மக்கல் சிக்னலில் ஒரு காட்சியைக் கண்டேன். பைக்கில் வந்து இறங்கிய அந்த இளைஞனுக்கு 20 வயது இருக்கும். காலர் இல்லாத சிவப்பு நிற பனியன் அணிந்திருந்தான்.

போக்குவரத்துக் காவலர் வாகனங்களை நிறுத்திவைத்திருந்ததை மீறி அந்த பைக் உள்ளே நுழைந்தது. பைக்கில் இருந்து குதித்த இளைஞன், அத்தனை பேர் பார்த்துக்கொண்டிருக்கும்போதே போக்குவரத்துக் காவலரின் காலில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து கும்பிட்டு 'இப்போ சந்தோஷமா?' எனக் கேட்டான்.

அந்தப் போக்குவரத்துக் காவலர் குழப்பத்துடன் 'என்னடா குடிச்சிருக்கியா, இங்க வந்து ஏன் பிரச்னை பண்ணுற?' எனக் கேட்டார். 'யாருப்பா பிரச்னை பண்றது? பெத்த பிள்ளையை நீதான் நம்ப மாட்டேங்கிற. அதான் பப்ளிக்ல வெச்சு உன் கால்ல விழுந்திருக்கேன். இப்பவாச்சும் என்னை நம்புறியா?' என்றான்.



சிக்னலுக்காகக் காத்திருந்த வாகன ஓட்டிகள் இந்தச் சம்பவத்தை வேடிக்கை பார்த்தார்கள். காரில் இருந்த ஒருவரை நோக்கி வந்த அந்த இளைஞன் கேட்டான்,'வீட்டுக்குள்ளே விட மாட்டேங்கிறார் சார். நாலு நாள் ஆச்சு... ரோட்டுலயே சுத்திட்டிருக்கேன். நான் எங்க போறது? என்னை நம்ப மாட்டேங்கிறார் சார். நீங்களாச்சும் சொல்லுங்க!'

வாகனங்கள் கடந்து போய்க்கொண்டிருந்தன. அந்த இளைஞன் சாலையோரமாக நின்றபடி, 'அதான் உன் கால்ல விழுந்து மன்னிப்பு கேட்டுட்டேன்ல... இதுக்கு மேல என்ன செய்யச் சொல்ற?' எனச் சத்தமாகக் கத்தினான்.

எனது ஆட்டோ அவர்களைக் கடந்து போனது. அந்தப் போக்குவரத்துக் காவலர் கர்ச்சீஃப்பால் முகத்தைத் துடைத்தபடியே அவனிடம் கண்டிப்பான குரலில் எதையோ சொல்லிக்கொண்டிருந்தார். அப்பாவும் பையனும் பொது இடத்தில் சண்டையிடுவதை எத்தனையோ முறை பார்த்திருக்கிறேன். ஆனால், இப்படி ஒருவன் பொது இடத்தில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கி, மன்னிப்பு கேட்டதை இன்றுதான் பார்க்கிறேன். அந்தக் காவலர் சொன்னதுபோல ஒருவேளை குடித்திருப்பானோ... எதற்காக மன்னிப்பு கேட்கிறான், என்ன பிரச்னை, ஏன் அந்த இளைஞன் நான்கு நாட்களாக வீட்டுக்குள் அனுமதிக்கப்படவில்லை... 20 வயதில் வீடு ஏன் பிடிக்காமல் போய்விடுகிறது?

யோசித்துப்பார்த்தால், இது தனிநபரின் பிரச்னையாக எனக்குத் தோன்றவில்லை. எல்லா இளைஞர்களும், 20 வயதுகளில் வீட்டின் கட்டுப்பாட்டில் இருந்து விடுபடவே விரும்புகிறார்கள்; தனக்கென ஓர் உலகை உருவாக்கி அதற்குள் வாழவே ஆசைப்படுகிறார்கள். நேற்றும் அப்படித்தான் இருந்தது; இன்றும் அப்படித்தான் இருக்கிறது; நாளையும் அப்படித்தான் இருக்கும். ஆனால், ஒவ்வொரு தலைமுறையும் தனது கோபத்தை வெளிப்படுத்துவதில் மாற்றம் உருவாகி இருக்கிறது.

சென்ற தலைமுறையில் வீட்டில் கோபம்கொண்டால், சாப்பிட மாட்டார்கள். நண்பர்கள் வீட்டில் போய் தங்கிக்கொள்வார்கள். அழுக்கான உடையை அணிந்து கையில் காசு இல்லாமல் சோக முகத்துடன் சுற்றிக்கொண்டிருப்பார்கள். ஆனால், இந்தத் தலைமுறை அப்படி இல்லை. கோபம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் யாருடனும் பேசுவது இல்லை.

10 கேள்விகளுக்கு ஒரு பதில் தந்தாலே பெரிய விஷயம். பொதுவாகவே வீட்டில் சாப்பிட விரும்புவது இல்லை; உறங்குவதும் குறைவு. இன்றைய இளைஞர்களுக்கு வீட்டின் மீது கோபம் வந்தால் செய்கிற முதல் வேலை, செல்போனை ஸ்விட்ச்-ஆஃப் செய்வதுதான். பிள்ளைகளுடன் பெற்றோர்களுக்கு இருக்கும் தொடர்பு போன் ஒன்றுதானே!

அந்த இணைப்பைத் துண்டிப்பதுதான் அவர்களுக்குத் தரும் தண்டனை. அடுத்த விஷயம் அறையைப் பூட்டிக்கொண்டு உள்ளேயே கிடப்பது. ஒரு கல்லூரி மாணவி தன் அப்பாவோடு சண்டை போட்டுக்கொண்டு

ஒரு நாள் முழுக்க, குளியல் அறையிலேயே இருந்திருக்கிறாள். அவரால் சமாதானப்படுத்த முடியவே இல்லை. முடிவில் உடன் படிக்கும் ஒரு பெண்ணை அழைத்துவந்து சமாதானப்படுத்தினாராம். யோசித்துப்பார்த்தால் பெற்றோர்களும் வயதுவந்த பிள்ளைகளும் ஒரே வீட்டில் வசித்தாலும், அவர்களுக்கு இடையிலான தூரம் மிக அதிகமாகி இருக்கிறது. மகன் அல்லது மகளின் மன உணர்ச்சிகளைப் புரிந்துகொள்வதற்கும் ஏற்றுக்கொள்வதற்கும் இன்றைய பெற்றோர்கள் முயற்சிக்கிறார்கள். அப்படி முயற்சிப்பதே, பிள்ளைகளுக்குத் தவறான செயலாகத் தெரிகிறது. 'என் தனிமையை உன்னால் ஒருபோதும் புரிந்துகொள்ள முடியாது. என் மனதைப் புரிந்துகொள்ள, என் வயது நண்பர்களால் மட்டுமே முடியும்' என உறுதியாக நம்புகிறார்கள். அப்படி நினைப்பது இயல்புதானே! 'பின் எப்படித்தான் பிள்ளைகளைப் புரிந்துகொள்வது?' என ஒவ்வொரு பெற்றோரும் இதற்கான விடை தேடி அல்லாடுகிறார்கள்.

வீட்டுக்கு வீடு நடக்கும் விஷயம்தான் என்றாலும், ஒவ்வொரு முறை இப்படி ஒரு காட்சியைக் காணும்போதும் மனம் வலிக்கவே செய்கிறது. இந்த இடைவெளியைப் பேசித் தீர்த்துவிட முடியாது. காலம்தான் இதற்கான தீர்வு. சாலையில் போக்குவரத்துக் காவலர் காலில் விழுந்த இளைஞன் கேட்டான் இல்லையா, 'என் மேல உனக்கு நம்பிக்கை இல்லையா?' என. அதுதான் இன்றைய இளைஞர்களின் குரல்.

அந்தக் குரல், 'எங்களை நம்புங்கள். உங்களுடையது வீண் பயம். எனக்கு என தனியான ஆசைகள், விருப்பங்கள், கனவுகள் இருக்கின்றன. அதை அடைய கடுமையாகப் போராடவும் செய்கிறோம். நீங்கள் படித்த காலத்தைப் போல் அல்லாமல், இன்றைய உலகம் மிகுந்த போட்டியும் பொறாமையும் கொண்டது. அதை வெல்லும் நம்பிக்கை எங்களுக்கு இருக்கிறது. ஆனால், நீங்கள் உருவாக்கிக்கொண்ட அளவுகோல்களை, கட்டுப்பாடுகளை வைத்து எங்களை அளக்க வேண்டாம். தோள் மீது கை போட்டுக்கொள்வதால் மட்டும் எங்கள் உணர்வுகளை உங்களால் புரிந்துகொள்ள முடியாது. இந்த இடைவெளியை அனுமதியுங்கள்' என்பதாகவே தோன்றுகிறது



இதைப் பற்றி பேராசிரியர் நண்பர் ஒருவரிடம் பேசிக்கொண்டிருந்தபோது அவர் சொன்னார்... ’போன வாரம் ஞாயிற்றுக்கிழமை வீட்ல என் பையனைக் கவனிச்சேன். முழுநாள் அவன் ஒரு வார்த்தைகூட யார்கிட்டயும் பேசவே இல்லை. எந்தக் குடும்ப நிகழ்வுக்கும் அவன் வருவது இல்லை. போனில் உள்ள பெரும்பான்மை நம்பர்கள் பெண்கள். காதில் கடுக்கன் போட்டிருக்கிறான்; கையில் பச்சை குத்தியிருக்கிறான்; தலை மயிரை நிறம் மாற்றிக்கொண்டுவிட்டான். போனில் பேசும் சத்தம் மற்றவருக்குக் கேட்காது. வெறும் தலையசைப்பு, முனகல், ஒன்று இரண்டு ஆங்கிலச் சொற்கள் அவ்வளவுதான். எதற்காக போனில் ஆங்கிலத்திலே பேசிக்கொள்கிறார்கள், ரகசியம் பேச தமிழ் ஏற்ற மொழி கிடையாதா? இப்படி அவனைப் பற்றி புகார் சொல்ல, என்னிடம் *100* விஷயங்கள் இருக்கின்றன. *17* வயது வரை அவனைப் பற்றி எனக்கு முழுமையாகத் தெரியும். இப்போது அவனைப் பற்றி கேள்விப்படும் ஒவ்வொன்றும் எனக்கு வியப்பாகவே இருக்கிறது. சிலவேளைகளில் பயமாகவும் இருக்கிறது’ என்றார்.

’நீங்கள் இப்படி நடந்துகொள்வதைத்தான் அவர்கள் விரும்புவது இல்லை. இதுவும் ஒருவிதமான கண்காணிப்புதான். நமது அக்கறைகள் தவறானவை அல்ல. அதை எப்படி வெளிப்படுத்துகிறோம் என்பதுதான்

பிரச்னை' என்றேன். அவரால் அதை ஏற்றுக்கொள்ள முடியவில்லை. நிறைய நேரம் விவாதித்தார். பிரச்னை, அப்பா அம்மாவோடு பிள்ளைகளுக்கு ஏற்படும் விஷயம் அல்ல; நாம் தயங்கிய, அனுமதிக்காத, விரும்பாத, அறியாத ஓர் உலகம், நம் பிள்ளைகள் வழியாக நம் வீட்டுக்குள் நுழைவதை ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அவர்கள் புதிய வாழ்வியலை மேற்கொள்ள முயற்சிக்கிறார்கள். அந்த வாழ்க்கை நமக்கு அந்நியமானது. பழக்கம், காலத்துக்குக் காலம் மாறிக்கொண்டே இருக்கிறது.

'ரைடிங் அலோன் ஃபார் தௌசண்ட்ஸ் ஆஃப் மைல்ஸ்' (*Riding Alone for Thousands of Miles*) என்கிற ஒரு சீனப் படம் நினைவுக்கு வந்தது. டோக்கியோவில் உயிருக்குப் போராடிய நிலையில் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ள மகனைக் காண்பதற்காகச் செல்கிறார் வயதான கௌஷி தஹதா. அப்பா மீது உள்ள கோபத்தால் மரணப்படுக்கையிலும் அவரைச் சந்திக்க மறுக்கிறான் மகன். செய்வது அறியாத நிலையில் மருமகளிடம் தனது வேதனைகளைப் பகிர்ந்துகொள்கிறார். சில நாட்களில் மகன் இறந்துவிடுகிறான். மகனைப் புரிந்துகொள்ள முடியவில்லையே என்ற வருத்தம் அவரை ஆட்டுவிக்கிறது. அப்போது மருமகள் ஒரு வீடியோ டேப்பை அவரிடம் தந்து, 'இதைக் காண்பதன் வழியே மகனைப் பற்றி தெரிந்துகொள்ள முடியும்' என்கிறாள். அதன் மூலம் மகன் நாட்டுப்புற இசை குறித்த ஆய்வு ஒன்றை மேற்கொண்டுவந்ததையும், யுனான் பிரதேசத்தில் வசித்துவரும் நாட்டுப்புறப் பாடகன் ஒருவனைப் பற்றி டாக்குமென்ட்ரி எடுக்க விரும்பியதையும் தெரிந்துகொள்கிறார். இத்தனை நாட்களாகப் புரிந்துகொள்ளாமல்போன மகனுக்காக, தான் ஏதாவது செய்ய வேண்டும் என சீனாவுக்குப் புறப்படுகிறார். நாட்டுப்புறக் கலைஞனைத் தேடி ஒரு தந்தை மேற்கொள்ளும் பல்லாயிரம் மைல் பயணம்தான் படம்.

தேடுதல் முடிவில் நாட்டுப்புறக் கலைஞன் சிறையில் இருப்பதை அறிந்துகொள்கிறார். அவனும் மகன் பிரிவால் வாடுகிறான். ஆகவே, தன்னால் பாட முடியாது என மறுக்கிறான். நாட்டுப்புறக் கலைஞனின் மகனைத் தேடிக் கண்டுபிடித்து சிறை வளாகத்துக்கு அழைத்து வருகிறார் கௌஷி தஹதா. அவர்கள் ஒன்று சேர்கிறார்கள். நாட்டுப்புறப் பாடகன் தன்னை மறந்து உணர்ச்சிபூர்வமாகப் பாடுகிறான். அதை கௌஷி வீடியோவில் பதிவுசெய்து தன் மகனின் கனவை நிறைவேற்றுகிறார். தந்தையின் அன்பை வெளிப்படுத்தும் அற்புதமான படம் அது. சொற்களால் ஒருவரை ஒருவர் புரிந்துகொள்ள முடியும் என்ற நம்பிக்கை இன்று வெகுவாகக் குறைந்துவிட்டது. அன்பை வெளிப்படுத்த பணமும் பரிசுப்பொருட்களும்

மட்டுமே உதவுகின்றன. இல்லாதவர்களின் அன்பு ஏளனப்படுத்தப்படவே செய்கிறது.




ஸ்டேன்ஃபோர்டு பல்கலைக்கழகத்தின் விழாவில் ஸ்டீவ் ஜாப்ஸ் பேசிய உரை இளைஞர்களை உத்வேகப்படுத்தக்கூடியது. உலகப் புகழ்பெற்ற ஆப்பிள் கம்ப்யூட்டர் நிறுவனத்தை உருவாக்கிய ஸ்டீவ் ஜாப்ஸ், கல்லூரிப் படிப்பை முடிக்காதவர். அந்த உரையில் தனது வாழ்க்கை அனுபவத்தை உணர்ச்சிபூர்வமாகப் பகிர்ந்துகொண்டிருக்கிறார்.

’என் அம்மா கல்லூரி மாணவியாக இருந்தபோது, திருமணம் செய்துகொள்ளாமலேயே என்னைப் பெற்றெடுத்தார். ஆகவே, யாராவது படித்த குடும்பத்திடம் என்னைத் தத்துக்கொடுக்க விரும்பினார். ஆனால், என்னைத் தத்தெடுக்க முன்வந்த தொழிலாளர் குடும்பத்தில், தந்தையும் தாயும் பள்ளிப் படிப்பைத் தாண்டாதவர்கள். அவர்கள் நிச்சயம் என்னை ’கல்லூரியில்

படிக்கவைக்கிறோம்' என உறுதிமொழி தந்தார்கள். அந்த உத்தரவாதத்தில்தான் அம்மா என்னைத் தத்துக்கொடுக்கச் சம்மதித்தார்.

அவர்களும் 17 வயதில் என்னை கல்லூரிக்கு அனுப்பினார்கள். அதற்கான கட்டணத்துக்காக அவர்களின் மொத்த சேமிப்பும் காலியானது. வேலைக்குச் செல்லும் எளிய குடும்பத்தால் எப்படி படிப்புச் சுமையைத் தாங்க முடியும்? ஆகவே, நான் கல்லூரியில் கற்றுக்கொள்ள எதுவும் இல்லை எனப் பாதியில் படிப்பைவிட்டு விலகிவிட்டேன். காலி கோக் பாட்டில்களை விற்று, அதில் கிடைக்கும் பணத்தைக்கொண்டு உணவு உண்டேன். 'ஹரே கிருஷ்ணா' கோயிலில் இலவசச் சாப்பாடு போடுகிறார்கள் என்பதற்காக, ஒவ்வொரு ஞாயிறு இரவும் ஏழு மைல்கள் நடந்து போய் சாப்பிட்டு வருவேன். அப்படியான கஷ்டங்கள்தான் எனது உள்ளுணர்வையும் தன்னம்பிக்கையையும் வளர்த்தன. நான் படித்த கல்லூரி, சித்திர எழுத்துக் கலைக்குப் பெயர் பெற்றது. கல்லூரிச் சுவர்களில் உள்ள போஸ்டர்களில் விதவிதமான அழகிய கையெழுத்துக்கள் காணப்படும். ஆகவே, நானும் சித்திர எழுத்துக் கலையைப் பழக விரும்பி அதைக் கற்றுக்கொள்ளத் தொடங்கினேன்.

10 வருடங்களுக்குப் பிறகு நாங்கள் மெகின்டோஷ் கம்ப்யூட்டரை வடிவமைத்தபோது சித்திர எழுத்துக் கலை எனக்கு உதவியது. 'உங்கள் வாழ்வின் ஒவ்வொரு நாளையும் இறுதி நாளாக நினைத்து வாழ்ந்தால், லட்சியம் ஒருநாள் நிச்சயம் நிறைவேறும்' என்ற வாசகம் எனக்கு மிகவும் பிடித்தமானது. ஒவ்வொரு நாள் காலையிலும் கண்ணாடி முன்பாக நின்றுகொண்டு, 'இதுதான் என் வாழ்வின் கடைசி நாள் என்றால், எப்படி நடந்துகொள்வேன்?' என என்னை நானே கேட்டுக்கொள்வேன்.




வாழ்க்கை என்பது மிகக் குறுகியது. மற்றவர்களுக்காக போலியான வாழ்க்கையை வாழாதீர்கள். உங்கள் உள்ளுணர்வின் குரலுக்குச் செவிசாயுங்கள். மற்றவர்கள் என்ன சொல்வார்கள் என்பதைப் பற்றி கவலைப்பட வேண்டாம். எதையாவது நீங்கள் உறுதியாக நம்புங்கள். அது உங்கள் கர்மா, விதி, தைரியம் என எதுவாகவும் இருக்கலாம். நிச்சயம் அது உங்கள் வாழ்க்கையை மாற்றிவிடும். சில வேளை உங்கள் நம்பிக்கைகள் தகர்க்கப்படலாம். ஆனால், மனம் தளர்ந்துவிடாதீர்கள். தேடிக்கொண்டே

இருங்கள். எவ்வளவு உச்சத்தைத் தொட முடியுமோ, அதை நோக்கி நகர்ந்துகொண்டே இருங்கள். உங்கள் நம்பிக்கையும் அயராத உழைப்பும் நேசித்து அதைச் செய்வதும் நிச்சயம் வெற்றியைத் தேடித் தரும்' என்கிறார் ஸ்டீவ் ஜாப்ஸ்.

'குட்டி இளவரசன்' நாவலில் 'பெரியவர்கள் ஒருபோதும் எதையும் தாங்களாகவே புரிந்துகொள்வது இல்லை. எப்போதும் ஓயாமல் விளக்கங்களைத் தருவது குழந்தைகளுக்குச் சலிப்பு தருவதாக இருக்கிறது' என குட்டி இளவரசன் சலித்துக்கொள்கிறான். அது குட்டி இளவரசனின் குரல் மட்டும் அல்ல... இன்றைய இளைஞர்கள் அனைவரின் குரலே!

- சிறகடிக்கலாம்...

## இந்திய வானம் - 9

### எஸ்.ராமகிருஷ்ணன், ஓவியங்கள்: ரமேஷ் ஆச்சார்யா

### இதயத்தின் ஜன்னல்

காரைக்குடியில் உள்ள 'ஆயிரம் ஜன்னல் வீடு' மிகவும் புகழ் பெற்றது. சுமார் 20 ஆயிரம் சதுரஅடியில் அமைந்துள்ள இந்த வீடு, 1941-ம் ஆண்டு கட்டப்பட்டது. 'உண்மையாகவே ஆயிரம் ஜன்னல்கள் இருக்கின்றனவா?' எனக் கேட்டேன். 'இல்லை... நிறைய ஜன்னல்கள் இருப்பதைக் குறிக்க 'ஆயிரம் ஜன்னல் வீடு' என அழைக்கிறார்கள்' என்றார்கள்.

உண்மையில் ஆயிரம் ஜன்னல் வீடு என்பது மகத்தான கனவு. ஆயிரம் ஜன்னல்கள் இருக்க வேண்டும் என்றால், அந்த வீடு எவ்வளவு பெரியதாக இருக்க வேண்டும். அத்தனை ஜன்னல்களையும் திறந்துவிட்டால், உள்ளே எவ்வளவு வெளிச்சமும் காற்றும் வந்து சேரும். யோசிக்க யோசிக்க மனம் சந்தோஷம்கொள்கிறது.

'உங்கள் வீட்டில் எத்தனை ஜன்னல்கள் இருக்கின்றன?' என யாரைக் கேட்டாலும் சரியான பதிலைச் சொல்ல முடிவது இல்லை. யோசித்துப் பார்த்தோ, எண்ணிப்பார்த்தோ சொல்கிறார்கள்.

கதவுகளும் ஜன்னல்களும் பெரிதாகப் பெரிதாக, நாம் சந்தோஷம்கொள்கிறோம். கோயிலுக்குச் செல்கிற ஒவ்வொருவரும் அதன் பிரமாண்டமான கதவுகளை வியப்புடன் தொட்டுத் தடவிப்பார்த்தே போகிறார்கள். அது ஓர் ஆசை; பகிர்ந்துகொள்ளாமல் மனதுக்குள் கொள்ளும் ஏக்கம்.



புது வீடு கட்டும்போதுகூட நிலைக்கதவு வைப்பதற்கு அழகான, பெரிய கதவாக வேண்டும் எனத் தேடித் தேடி வாங்குகிறார்கள்; அல்லது விருப்பமான முறையில் செய்யச் சொல்கிறார்கள். கதவும் ஜன்னலும் வீட்டின் அடையாளங்கள் மட்டும் அல்ல; பண்பாட்டின் சின்னங்கள்.

பழங்குடி மக்களின் வீடுகளைப் பாருங்கள்... பெரும்பாலும் கதவுகளே இருக்காது. ஒருவேளை கதவு இருந்தாலும் அது ஒரு மறைப்பு என்ற அளவில் மட்டுமே உருவாக்கப்பட்டிருக்கும். அலங்கார வேலைப்பாடுகள் எதுவும் இருக்காது. ஐரோப்பிய நாடுகளில் வீட்டுக் கதவுகள் விதவிதமான கலை வேலைப்பாடுகளுடன் இருப்பதைக் கண்டிருக்கிறேன். குறிப்பாக, கதவின் கைப்பிடி அழகான சிற்ப வேலைப்பாட்டுடன் உருவாக்கப்பட்டிருக்கும்.

கடவுளுக்கு மட்டுமே பிரமாண்டமான கதவுகள். ஆனால், ஜன்னல்கள் மனிதர்களுக் கானவை. ஒவ்வொரு முறை ராஜஸ்தான் போகும்போதும் அங்கு உள்ள வீடுகளையும் அரண்மனைகளையும் கண்டு வியந்துபோகிறேன். குறிப்பாக, ஜன்னல்கள் விதவிதமாக அமைக்கப்பட்டுள்ளன. வீட்டுக்கு *100* கண்கள் முளைத்து, வெளி உலகைப் பார்த்துக்கொண்டி ருப்பதுபோலவே அந்த ஜன்னல்கள் காணப்படுகின்றன. ஆனால், பெருநகர வீடுகளில் ஒன்றிரண்டு ஜன்னல்களைத் தவிர மற்றவை திறக்கப்படுவதே இல்லை. சில அடுக்குமாடிக் குடியிருப்புகளில் ஜன்னலைத் திறந்தாலும் உள்ளே வெளிச்சம் வருவதே இல்லை.

ஈரானின் புகழ்பெற்ற இயக்குநர் மெக்மல்பஃப், 'தி டோர்' என்ற குறும்படம் ஒன்றை எடுத்திருக்கிறார். சர்வதேசத் திரைப்பட விழாக்களில் பல முக்கிய விருதுகள் பெற்ற படம் அது. அந்தப் படத்தில் ஒரு மரக் கதவு தனியே நடந்துபோகிறது. உண்மையில் அப்படித் தோன்றும்படி காட்சி அமைக்கப்பட்டுள்ளது.

அந்தக் கதவை ஒரு வயதான மனிதர் தூக்கிக்கொண்டு மணல்வெளியில் நடந்துகொண்டிருக்கிறார். அவரிடம் மிச்சம் இருப்பது வீட்டின் கதவு மட்டுமே. அவரோடு முக்காடுபோட்ட அவரது மகளும் ஓர் ஆட்டுக்குட்டியும் உடன் பயணிக்கிறார்கள். வயதானவர் கதவைத் தூக்கிக்கொண்டு நடக்க முடியாமல் நடந்துபோகிறார்.

அப்போது அந்த வீட்டுக்கு ஒரு தபால் வந்திருப்பதாக தபால்காரன் பின்தொடர்ந்து வருகிறான். முதியவர் தனது வீட்டின் கதவை தரையில்

நிறுத்திவைக்கிறார். தபால்காரன் வீட்டின் கதவைத் தட்டி கடிதத்தைத் தருகிறான்.



'தி டோர்' குறும்படத்தில்...

அது, அவரது மகளுக்கு வந்த காதல் கடிதம். வயதானவர் ஆத்திரத்துடன் அதைக் கிழித்துப்போடுகிறார். பிறகு, மகளையும் ஆட்டுக்குட்டியையும் கூட்டிக்கொண்டு நடக்கிறார். இருவரும் பலி கொடுக்கப்படும் உயிர்களைப்போல பின்தொடர்கிறார்கள்.

வீட்டோடு பொருந்தி இருந்த கதவு, பிரமாண்டமான கலைப்பொருள்போல இடம்விட்டு இடம் நகர்ந்து போய்க்கொண்டே இருக்கிறது. பழைமையின் அடையாளம்போலவும் மீதம் இருக்கும் வாழ்வின் குறியீடுபோலவும் அந்தக் கதவு தோற்றம் அளிக்கிறது. முதியவர் கதவை விற்க முயற்சிக்கிறார். ஆனால், அது சாத்தியம் ஆகவில்லை. முடிவில் கதவை விற்க முடியாமல் தன்னோடு தூக்கிக்கொண்டு, கடலை நோக்கி நடப்பதுடன் படம் நிறைவுபெறும்.

ஈரானியப் படத்தில் வரும் முதியவர் மட்டும் அல்ல... நாம் ஒவ்வொருவரும் வீட்டைச் சுமந்துகொண்டேதான் திரிகிறோம்.

திருமண வரவேற்பு ஒன்றுக்குச் சென்றிருந்தேன். அருகில் உட்கார்ந்து இருந்த ஒருவர், தனது செல்போனை எடுத்து அடிக்கடி பார்த்துக்கொள்வதும், பதற்றம் அடைந்து நகத்தைக் கடிப்பதுமாக இருந்தார். அருகில் இருந்த மற்றவர் 'என்ன சார்... ஏதாவது ப்ராப்ளமா?' எனக் கேட்டார்.

'பெங்களூர்ல இருக்கிற என் வீட்டைப் பூட்டிட்டு கல்யாணத்துக்காக சென்னை வந்துட்டேன். ரெண்டு நாளா யாரோ ஒருத்தன் என் வீட்டையே சுத்திச் சுத்தி வந்துக்கிட்டு இருக்கான். அதான் என்ன பண்றதுனு தெரியலை. இந்தா பாருங்க...' என தனது செல்போனைக் காட்டினார்.

அதில் அவரது வீட்டின் சுவர் ஓரமாக ஓர் ஆள் நிற்பது, நிழல்போன்ற காட்சியாகத் தெரிந்தது.

'வீட்ல செக்யூரிட்டி கேமரா ஃபிக்ஸ் பண்ணியிருக்கேன். என்ன நடக்குதுனு செல்போன் வழியா பார்த்துக்கிடலாம். ரெண்டு நாளா இந்த ஆள் வீட்டையே சுத்திச் சுத்தி வந்துக்கிட்டு இருக்கான். திருடனா... இல்லை பைத்தியமா... யாரு என்னன்னு தெரியலை. யாரையாவது கூப்பிட்டு விசாரிக்கச் சொல்லலாம்னு பார்த்தா, பக்கத்துல இருக்கிற வீடுகளோடு பழக்கம் இல்லை. புது வீடு கட்டி ஆறு வருஷங்களாச்சு. பக்கத்துல எல்லாம் பெரிய பங்களாவா இருக்கு. யாரும் உதவிக்கு வர மாட்டாங்க.



ஆபீஸ் ஃப்ரெண்டுகிட்ட சொன்னேன். அவன் போய்ப் பார்த்த நேரம் ஆள் நடமாட்டம் இல்லை. வீட்டைத் தனியா விட்டுட்டு வந்துட்டு நிம்மதியா இருக்க முடியலை; பயமா இருக்கு.'

'பூட்டிட்டு வந்த வீட்ல எப்படி நுழைய முடியும்?' எனக் கேட்டார் மற்றவர்.

'கண்ணாடி ஜன்னலை உடைச்சு உள்ளே போயிட்டா, என்ன செய்றது? லேப்டாப், ஐ-பேட், மியூசிக் சிஸ்டம்னு நிறையப் பொருட்கள் இருக்கு.'

'யாரையாவது வீட்லவெச்சுட்டு வந்துருக்கலாம்ல..?' எனக் கேட்டார் இன்னோர் ஆள்.

'உதவிக்கு யாரு கூட வந்து இருக் காங்க? அதோட யாரையும் நம்பி வீட்டை விட்டுட்டுப் போகவும் முடியலை...' எனச் சலித்துக்கொண்டார்.

'பெரியவங்க யாராவது துணைக்கு இருந்தா, இந்தப் பிரச்னை வராது. அவங்களே பார்த்துக்கிடுவாங்க. அந்த அருமை இந்தத் தலைமுறைக்குத் தெரியலை' என அலுத்துக்கொண்டார் ஒரு பெரியவர்.

'அதெல்லாம் பெரிய பிரச்னை சார். என் வொய்ஃப் ஒப்புக்கிட மாட்டா...' எனப் புலம்பியபடியே, செல்போன் கேமராவை உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தார் பெங்களூருக்காரர்.

பிறகு திடீரென பதற்றம் அதிகமாகிச் சொன்னார், 'சார்... அந்த ஆளைக் காணோம். ஒருவேளை பின்பக்க வழியா உள்ளே போயிருப்பானோ, இப்போ என்ன செய்றது?'

'எதுக்கும் நீங்க உடனே போலீஸ்ல சொல்லிடுங்க...' என உஷார்படுத்தினார் மற்றவர்.

'ச்சே... தேவை இல்லாத டென்ஷன். எங்க வீடு இருக்கிற ஏரியாவுல நிறையத் திருட்டு பயம். இப்போ என்ன செய்றது?'னு தெரியலை எனப் புலம்பியபடியே, மனைவியைத் தேடி எழுந்து போனார். ஊருக்குப் போகிற வரை, அவருக்கு இந்தப் பதற்றம் நிச்சயம் குறையவே குறையாது.

வீட்டைப் பூட்டிவிட்டு ஊருக்குப் போவது காலங்காலமாக நடந்துகொண்டுதான் இருக்கிறது. முந்தைய காலங்களில் வெளியூர் போகும்போது அண்டை அயலாரிடம் வீட்டைப் பார்த்துக்கொள்ளச் சொல்லிவிட்டுப் போவார்கள். மளிகைக் கடை, பால்காரர் என பலரிடமும் சொல்லிவைப்பார்கள். இத்தனையும் மீறி ஒன்றிரண்டு திருட்டுக்கள் நடந்துவிடுவதும் உண்டு. ஆனால், அவை விதிவிலக்குகள். மற்றபடி நம் மீது அக்கறைகொண்ட யாரோ ஒருவர், நமக்காக நம் வீட்டைப் பாதுகாத்து வந்ததே இத்தனை ஆண்டுகளாக நடைபெற்று வந்திருக்கிறது.




ஆனால், இன்று வீட்டைப் பூட்டிக்கொண்டு கிளம்புகிற நாளில், 'யாரைப் பார்த்துக்கொள்ளச் சொல்வது?' என்பது மிகப் பெரிய கேள்வி. இதற்கு மாற்றாக, செக்யூரிட்டி கேமரா வாங்கிப் பொருத்திவிடுகிறார்கள்; அல்லது செக்யூரிட்டி ஆளை நியமித்துவிடுகிறார்கள்.

இது பாதுகாப்பு சம்பந்தமான பிரச்னை மட்டும் அல்ல; மனித உறவுகள் அற்றுப்போய்விட்டதன் அடையாளம். நாமும் யாருடனும் பழகுவது இல்லை; யாரும் நம்மோடு பழகுவதும் இல்லை. நமது வீடுகள் தனித்தனி கல்லறைகள்போல் ஆகிவிட்டன. வாசற்படிகூட இல்லாமல் வீடுகள் சுருங்கிப்போனதுடன் மனித மனமும் சுருங்கிப்போய்விட்டது.

அண்டை அயலாரோடு நட்புடன் பழக விரும்புகிறவர்கள் சொல்கிற குற்றச்சாட்டு, 'அவர்கள் நம்மைத் தவறாகப் புரிந்து கொள்கிறார்கள். எதற்காகவோ நாம் திட்டமிட்டுப் பழகுவதாக நினைக்கிறார்கள். பல நேரங்களில் நாம் ஆசையாகக் கொண்டுபோய்க் கொடுக்கும் இனிப்புகளை, உணவுப்பொருட்களை நாய்க்குப் போட்டுவிடுகிறார்கள். இப்படி அவமானப்படுவதைவிட அவர்களுடன் உறவாடாமல் இருப்பதே நல்லது என ஒதுங்கிவிடுகிறோம்' என்கிறார்கள். இதுவும் நிதர்சனமான உண்மை.

கோடை விடுமுறையில் 10 நாட்கள் கேரளா போக விரும்பிய ஒருவர், தனது வளர்ப்பு நாயை யாரிடம் விட்டுச்செல்வது எனப் புரியாமல் தடுமாறிப்போனார். அந்த நாய்க்குத் தவறாமல் உணவு வைக்கவேண்டும். அதைத் தினமும் நடைப்பயிற்சிக்கு அழைத்துக்கொண்டு போக வேண்டும். யார் அதை எல்லாம் செய்வார்கள்? அவரது அண்ணன் - தம்பி, உறவினர் என

பலரையும் கேட்டுவிட்டார். நாயைப் பராமரிக்க பணம் தருவதாகக்கூடச் சொல்லிப்பார்த்தார். ஒருவரும் அவருக்கு உதவத் தயாராக இல்லை. முடிவில் வளர்ப்பு நாய்களைப் பராமரிக்கும் காப்பகம் பற்றி கேள்விப்பட்டு, பணம் கொடுத்து அதில் தனது நாயை விட்டுவிட்டு பயணத்தை மேற்கொண்டார்.

நாய்கள், பூனைகளுக்குக்கூட இப்படி காப்பகங்கள் வந்துவிட்டன. ஆனால், உடன்வசிக்கும் மாற்றுத்திறனாளிகளை, நடமாட முடியாமல் படுக்கையில் கிடக்கும் வயதான வர்களை எங்கே போய் ஒப்படைப்பது, யார் கவனித்துக்கொள்வார்கள்? யாராவது அப்படி ஓர் உதவியை நம்மிடம் கேட்டால், செய்வதற்கு நாம் தயாராக இருக்கிறோமோ?

மகாராஷ்டிரா மாநிலம், நெவாஸா தாலுகாவில் உள்ள சனி ஷிங்னாபூர் கிராமத்தில் இருக்கும் எந்த வீட்டுக்கும் கதவுகள் இல்லை. வங்கிக்குக்கூட கதவுகள் கிடையாது. 'சனி பகவான் தங்களைக் காப்பாற்றுவார்' என ஊர் மக்கள் நம்புகிறார்கள். அத்துடன் ஊரே ஒற்றுமையாக வாழ்கிறது. ஆகவே, அந்தக் கிராமத்தில் இதுவரை திருட்டு நடந்ததே இல்லை என்கிறார்கள்.

ஒரு பக்கம் கதவுகளே இல்லாமல் வாழும் கிராமம். இன்னொரு பக்கம் செக்யூரிட்டி கேமரா வாங்கிப் பொருத்திவிட்டும் மனநிம்மதி இல்லாமல் அலையும் நகர வாழ்க்கை. இரண்டும் ஒரே இந்திய வானத்தின் கீழ்தான்.

உறவுகளை மேம்படுத்திக்கொள்வதுதான் இதற்கான ஒரே தீர்வு. அது ஒரே நாளில் சாத்தியமாகக்கூடியது அல்ல. அதே நேரம் சாத்தியமே ஆகாத விஷயமும் இல்லை.

நோபல் பரிசுபெற்ற அன்னை தெரசா, தனது உரை ஒன்றில் அன்பின் வலிமையைப் பற்றி குறிப்பிடுகிறார்...

'பலரும் 'நான் கடவுளை உண்மையாக நேசிக்கிறேன்; அன்பு செலுத்துகிறேன். ஆனால் எனது அண்டை அயலாரை நேசிக்க முடியவில்லை. அவர்களுடன் நட்பாகப் பழக முடியவில்லை' எனச் சொல்கிறார்கள்.

இதை என்னால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. கண்ணுக்குத் தெரியாத கடவுளை நேசிக்க முடிகிற நம்மால், கண்ணுக்குத் தெரிகிற மனிதர்களை ஏன் நேசிக்கவும் அன்பு செலுத்தவும் முடியவில்லை? வெறுப்பு, குரோதம், பொறாமை, சுயநலம்... இவைதான் அடுத்தவர் மீது அன்பு செலுத்தத்

தடைகளாக உள்ளன. நாம் வறுமையில்கூட வாழ்ந்துவிடலாம். ஆனால் அன்பு இல்லாமல் வாழ்ந்துவிட முடியாது.

ஒருமுறை கல்கத்தாவில் சர்க்கரைப் பஞ்சம் வந்தது. கடைகளில் சர்க்கரை கிடைக்கவில்லை. எங்கள் காப்பகத்தில் உள்ள நோயாளிகளுக்குத் தேவையான சர்க்கரை கிடைக்கவில்லை. இதைப் பற்றி கேள்விப்பட்ட நான்கு வயதுச் சிறுவன் ஒருவன், தன் அம்மாவிடம் 'எனது காபியில் போடும் சர்க்கரையை மூன்று நாட்களுக்குச் சேர்த்துவைத்து அன்னை தெரசாவிடம் ஒப்படைக்கப்போகிறேன்' எனச் சொல்லியிருக்கிறான். அந்தக் குடும்பமே மூன்று நாட்கள் இனிப்பு சேர்க்கவில்லை. அந்தச் சர்க்கரையை என்னிடம் ஒப்படைக்க வந்த நாளில் அந்தச் சிறுவனும் வந்திருந்தான்.

எனக்கு மிகுந்த சந்தோஷமாக இருந்தது. இந்தச் சின்னஞ்சிறு வயதில் அந்தச் சிறுவனின் மனதில் தூய அன்பு பீறிடத் தொடங்கி இருக்கிறது. அவன் தந்தது வெறும் சர்க்கரை அல்ல; அது ஒரு நம்பிக்கை; அடுத்தவர் மீதான அக்கறை. அன்பு செலுத்துவது பலன் கருதிச் செய்கிற காரியம் அல்ல. அது உயர்ந்த பண்பு.

முதியோர் காப்பகங்களுக்குப் போகும்போதும் அங்கு உள்ளவர்கள் வாசலை நோக்கி உட்கார்ந்திருப்பதையும் அடிக்கடி வாசலை நோக்கி எழுந்து போய் வருவதையும் பார்த்திருக்கிறேன். அவர்களில் எவர் முகத்திலும் துளிப் புன்னகைகூட இருக்காது. 'எதற்காக வாசலைப் பார்த்தபடியே இருக்கிறார்கள்?' எனக் கேட்டபோது காப்பகப் பொறுப்பாளர் சொன்னார்...

'தனது வீட்டில் இருந்து மகனோ, மகளோ தன்னைத் தேடி வருவார்கள் என எதிர்பார்க்கிறார்கள். அப்படி யாரும் வரவில்லை என அறிந்தவுடன் வருத்தப்படுகிறார்கள். அது, தன்னைத் தேடி யாரும் வரவில்லை என்ற வருத்தம் இல்லை. பெற்ற பிள்ளைகளே தன்னை மறந்துவிட்டார்கள் என்ற வருத்தம். அந்த வேதனை தீர்க்கப்படவே முடியாதது.

இதுபோன்ற கைவிடப்பட்ட முதியவர்களுக்கு நாம் உணவு அளிக்கலாம்; உடையும் பாதுகாப்பும் தரலாம். ஆனால், பிள்ளைகள் வழியாகக் கிடைக்கும் அன்பை எப்படி நாம் தர முடியும்?

அன்பு செலுத்துவதன் காரணமாக ஒருவேளை நீங்கள் பரிகசிக்கப்படலாம்; விமர்சிக்கப்படலாம்; 'முட்டாள்' எனப் பட்டம்

சூட்டப்படலாம்; அவமானத்தையும் புறக்கணிப்பையும்கூடப் பெறக்கூடும். ஆனாலும் தொடர்ந்து அன்பு செலுத்துங்கள். அதுவே உங்கள் வாழ்க்கையின் அர்த்தம்.'

அன்னை தெரசா சொன்ன வார்த்தைகள் நம் அனைவருக்குமான வழிகாட்டும் வெளிச்சம் ஆகும். நெருக்கடியான இன்றைய வாழ்க்கைச் சூழலில் இருந்து மீட்சி அடைவதற்கு, நாம் திறக்கவேண்டியது வீட்டின் ஜன்னல்களை மட்டும் அல்ல... இதயத்தின் ஜன்னலையும்தான்!

- சிறகடிக்கலாம்...

## இந்திய வானம் - 10
## எஸ்.ராமகிருஷ்ணன், ஓவியங்கள்: ரமேஷ் ஆச்சார்யா

### சந்தோஜத்தின் மறுபக்கம்

பழங்குடி இன மக்கள் அதிகம் உள்ள மாநிலம் அருணாச்சலப்பிரதேசம். GS பழங்குடி மக்களைக் காண்பதற்காக இட்டா நகரைச் சுற்றிய பகுதிகளுக்கு, சில ஆண்டுகள் முன்னர் சென்றிருந்தேன்.

அருணாச்சலப்பிரதேசத்தில் காணும் இடங்களில் எல்லாம் வண்ணமயமான ஆர்க்கிட் மலர்கள், ஒளிரும் பனிச்சிகரங்கள், பசுமை ததும்பும் பள்ளத்தாக்குகள், அடர்ந்த மழைக் காடுகள், சிற்றோடைகள்.

சியாங், சுபன்சிரி, கமேங், திரப் மற்றும் லோஹித் என ஐந்து ஆற்றுப் பள்ளத்தாக்குப் பகுதிகளாக இந்த மாநிலம் பிரிக்கப்பட்டிருக்கிறது. 26 வகை பழங்குடி இன மக்கள் இங்கே வாழ்கின்றனர்.

பழங்குடி இன மக்களைச் சந்திக்கச் சென்றிருந்த நாளில்தான் எனது பிறந்த நாள் வந்தது. நாங்கள் சந்திக்கச் சென்றிருந்த பழங்குடி இனத் தலைவரிடம் நண்பர் இதைப் பற்றி சொன்னதும், அவர் மிகுந்த சந்தோஷத்துடன் என்னைக் கட்டி அணைத்து, ஆசி தந்ததோடு, பறவை இறகு ஒன்றையும் பரிசாகத் தந்தார்.

’எந்தப் பறவையின் இறகு இது?’ எனக் கேட்டேன்.

’இருவாட்சியின் இறகு’ எனச் சொன்னார் நண்பர்.

இருவாட்சி, அருணாச்சலப்பிரதேசத்தின் மாநிலப் பறவை. மிகவும் உயரமான மரங்களில் வசிக்கக் கூடியது. இந்தப் பறவை உட்கொண்டு வெளியேற்றும் எச்சத்தில் உள்ள விதைகள், மண்ணில் விழுந்து முளைக்கின்றன. ஆகவே காடு பெருகுகிறது; மழைக் காடுகள் இல்லை எனில், இருவாட்சி பறவைகள் கிடையாது.

’இந்தியாவில் ஒன்பது விதமான இருவாட்சி பறவைகள் உள்ளன. இருவாட்சி பறவைகள் ஒரே துணையுடன் வாழும் பழக்கம் கொண்டவை.

இணையோடு வாழும் சந்தோஷமான வாழ்க்கையின் குறியீடுதான் இருவாட்சி பறவையின் இறகு' என நண்பர் விளக்கினார்.



எத்தனையோ பிறந்த நாளை நண்பர்களுடன் கொண்டாடியிருக்கிறேன். ஆனால், அன்று அந்தப் பழங்குடி மனிதர்களுடன் பிறந்த நாள் கொண்டாடியது அபூர்வ நிகழ்வாக அமைந்தது.

எனக்காக விசேஷ உணவு தயாரிக்கப்பட்டது.உணவு உண்பதற்காக நாங்கள் ஒன்றுகூடியபோது பழங்குடி இனத் தலைவர், 'இந்த விருந்தில் உங்களுக்கு விருப்பமான ஒரு மனிதரை நினைத்துக்கொள்ளுங்கள்' என்றார்.

'யாரை?' எனக் கேட்டேன்.

’யாராக வேண்டுமானாலும் இருக்கலாம். அவர் உங்களோடு இங்கே இருந்து உணவு உண்பதாக மனதில் நினைத்துக்கொள்ளுங்கள்’ என்றபடியே என் மனதில் இருந்த மனிதருக்கும் ஒரு கலயத்தில் உணவு படைத்தார்.

அது ஒரு நம்பிக்கை. பிறந்த நாளின்போது நமக்கு விருப்பமான யாரோடு ஒன்றாக உணவைப் பகிர்ந்துகொள்ள விரும்புகிறோமோ, அவர் அரூபமாக நம்மோடு இருப்பார் என நம்புகிறார்கள்.

பிறந்த நாளைக் கொண்டாடிவிட்டுக் கிளம்பும்போது, அந்த முதியவர் தனது வீட்டுக்கு முன்னர் உள்ள மரத்துக்கு குவளை நிறையத் தண்ணீர் ஊற்றச் சொன்னார்.

’எதற்காக?’ எனக் கேட்டேன்.



’இந்த மரம் உள்ளவரை இலைகள் உங்களையும் நினைவுபடுத்திக்கொண்டே இருக்கும். யார் மரத்துக்குத் தண்ணீர் ஊற்றுகிறார்களோ, அவர்கள் நினைவைத்தான் மரங்கள் முணுமுணுத்துக்கொண்டிருக்கின்றன’ என்றார்.

ஆயிரம் ஆயிரமாகச் செலவுசெய்து கொண்டாடும் பிறந்த நாளில் கிடைக்காத ஆத்ம திருப்தி, அந்த எளிய நிகழ்வில் சாத்தியமானது.

பிறந்த நாளைக் கொண்டாடுவது என்பது நீண்ட வரலாறுகொண்டது. எகிப்து பாரோ மன்னர்கள் முதன்முதலாக பிறந்த நாள் கொண்டாடியதை பைபிள் குறிப்பிடுகிறது. பிறந்த நாளுக்கு கேக் வெட்டுகிற பழக்கம் கிரேக்கத்தில் தோன்றியிருக்கிறது. சந்திரனுக்கு நன்றி தெரிவிப்பதற்காகவே வட்டவடிவமான கேக் தயாரிக்கப்பட்டிருக்கிறது.

ஆரம்ப காலங்களில் பிறந்த நாள் கொண்டாடுவது மன்னர்களுக்கும் உயர்குடி மக்களுக்கு மட்டுமே அனுமதிக்கப்பட்ட ஒன்று. ரோமானியர்கள்தான் பொதுமக்களும் பிறந்த நாள் கொண்டாடலாம் என்ற வழக்கத்தைக் கொண்டுவந்தார்கள்.

ஜெர்மானியர்கள்தான் இன்றுள்ள பிறந்த நாள் கேக்கை முதன்முதலில் உருவாக்கியவர்கள். 'ஹேப்பி பர்த் டே டு யூ' என்ற பாடலை உருவாக்கியவர்கள் பேட்டி ஹில் மற்றும் மில்ரெட் ஜே ஹில். இவர்களில் பேட்டி ஹில், பள்ளி ஒன்றின் முதல்வர்; மில்ரெட், பியானோ இசைக் கலைஞர். 1912-ம் ஆண்டு இந்தப் பாடல் அச்சில் வெளியானது. அன்று முதல் இன்று வரை உலகில் மிக அதிக முறை பாடப்பட்டு வரும் பாடலாக 'ஹேப்பி பர்த் டே டு யூ' கின்னஸ் சாதனை பெற்றுள்ளது.

பிறந்த நாளை எப்படிக் கொண்டாடுவது என ஒவ்வொருவரும், பல்வேறுவிதமாக யோசனைசெய்கிறார்கள்; நடைமுறைப்படுத்து கிறார்கள். கோயிலுக்குப் போவது, கேக் வெட்டுவது, நண்பர்களுடன் சேர்ந்து சாப்பிடுவது, குடிப்பது, தானம் அளிப்பது இவைதான் வழக்கம்.

ஆசைத்தம்பி, தனது பிறந்த நாளை வித்தியாசமாகக் கொண்டாடக்கூடியவர். இதற்காக நிறைய யோசனைகள் செய்வார். ஒவ்வொரு முறையும் அவரது பிறந்த நாள் கொண்டாட்டம் புதிதாக இருக்கும். அதற்காக ஆயிரக்கணக்கில் செலவும் செய்வார்.

ஒருமுறை அவரது பிறந்த நாளை ரயிலில் கொண்டாடுவது எனத் தீர்மானித்து, எலெக்ட்ரிக் ட்ரெய்னில் முன்-பின் அறிமுகம் இல்லாத அத்தனை பேருக்கும் பரிசுகள் தந்து கேக் வெட்டி கொண்டாடினார். இன்னொரு முறை எய்ட்ஸ் நோயாளிகளுடன் கொண்டாடினார்; வேறு ஒருமுறை 100 நேபாளி கூர்க்காக்களுக்குப் புத்தாடைகள் வாங்கித் தந்து கொண்டாடினார். இப்படி அவர் ஒவ்வொரு பிறந்த நாளையும் வித்தியாசமாகத் திட்டமிட்டு செயல்படுத்துவார்.

ஆனால், கடந்த இரண்டு வருடங்களாக அவர் தனது பிறந்த நாளைக் கொண்டாடுவது இல்லை. 'எதனால் தனது பிறந்த நாள் கொண்டாட்டங்களை நிறுத்திக் கொண்டுவிட்டார்?' எனப் பலருக்கும் வியப்பாக இருந்தது. 'விதவிதமாகக் கொண்டாடி அலுத்துப்போய்விட்டார்' எனக் கேலி பேசினார்கள். இதைப் பற்றி ஆசைத்தம்பியிடம் கேட்டபோது, அவர் சிரித்தபடியே சொன்னார், 'இப்பவும் நான் பிறந்த நாளைக் கொண்டாடத்தான் செய்றேன். ஆனா, அது என் பிறந்த நாள் இல்லை. மத்தவங்க பிறந்த நாள்' என்றார்.

’மற்றவர்கள் பிறந்த நாளை நீங்கள் ஏன் கொண்டாடுகிறீர்கள்?’ எனப் புரியாமல் கேட்டதற்கு, ஆசைத்தம்பி பதில் சொன்னார்...

’2012-ம் ஆண்டில் என் பிறந்த நாளை பார்வையற்றவர்கள் காப்பகத்துல கொண்டாட ஏற்பாடு பண்ணியிருந்தேன். அது ஒரு தனியார் காப்பகம். படிக்கிற, வேலைபார்க்கிற 120 பார்வையற்றவர்கள் அங்கே இருந்தாங்க. அவங்களுக்கு காலை உணவு கொடுத்து, ஆளுக்கு ஒரு புத்தாடை வாங்கித் தந்து, பிறந்த நாளைக் கொண்டாட ஏற்பாடு பண்ணியிருந்தேன்.

காலை 7 மணிக்கு நான் போனபோது எல்லோரும் ஒன்றாகக் கூடிநின்று எனக்காகப் பிரார்த்தனை செய்தார்கள். பிறகு, என் கைகளாலேயே இனிப்புகளையும் பரிசுப் பொருட்களையும் கொடுத்தேன். எல்லோரும் வாங்கிக்கொண்டு நன்றி சொன்னார்கள். விருந்து பரிமாறப்பட்டது நிறையப் புகைப்படங்கள் எடுத்துக் கொண்டோம். எனக்கு மிகுந்த சந்தோஷமாக இருந்தது.

அப்போது பார்வையற்றப் பெண் ஒருவர் மட்டும் பரிசுப்பொருட்களை ’வேண்டாம்’ என மறுத்துவிட்டாள் எனக் கேள்விப்பட்டேன். அவளுக்கு என்ன கோபம் என்பதை அறிந்து கொள்வதற்காகச் சந்தித்துப் பேசினேன்

அவள் எரிச்சலான குரலில் கேட்டாள்... ’உங்க பிறந்த நாளை நாங்க ஏன் சார் கொண்டாடணும்? உங்ககிட்ட நிறையப் பணம் இருக்கு. அதனாலே எங்களைப் பிச்சைக்காரங்க மாதிரி நடத்துறீங்க. உங்களுக்கு உண்மையில மனசு இருந்தா, எங்கள்ல யாரோ ஒருத்தரோட பிறந்த நாளைக் கொண்டாடியிருக்கணும். எங்களுக்கும் பிறந்த நாள் வருது. ஆனா, நாங்க கொண்டாடுறது இல்லை. ஏன்னா எங்கக்கிட்ட காசு இல்லை. உங்களை மாதிரி பணம் வெச்சிருக்கிற யார் யாரோ இங்க வர்றாங்க. அவங்க பிறந்த நாளை எல்லாம் நாங்க கொண்டாடுறோம். ஆனா, எங்க பிறந்த நாளை யாருமே கொண்டாடுறது இல்லை. யாருக்கு, எப்போ, பிறந்த நாள்னு நாங்க வெளியே சொல்றதுகூடக் கிடையாது. எங்களுக்கும் ஆசை இருக்காதா? கண்ணு தெரியாமப் பிறந்துட்டோம். அதுக்காக பிறந்த நாள் கொண்டாடக் கூடாதா? உங்க கிஃப்ட் எதுவும் எனக்கு வேண்டாம். நீங்களே வெச்சிக்கோங்க!’ எனச் சொன்னார்.

அந்தப் பெண்ணின் மறுப்புக் குரல் என்னை உலுக்கிவிட்டது. நம் பிறந்த நாளைக் கொண்டாடுவதற்கு எத்தனை ஏற்பாடுகள் செய்கிறோம்; திட்டமிடுகிறோம். ஆனால், இந்தப் பெண்ணைப்போல எத்தனையோ பேர் தங்கள் பிறந்த நாளை வெளியே சொல்வதுகூடக் கிடையாது. அவர்களை யார் சந்தோஷப்படுத்தப்போகிறார்கள்?



எமர்சன்

அன்று வீடு திரும்பிய பிறகு அதே யோசனையாக இருந்தது. அன்றே 'இனி பிறந்த நாள் கொண்டாடுவது இல்லை' என முடிவுசெய்துவிட்டேன். அதற்காகச் செலவுசெய்யும் மொத்தப் பணத்தையும் அந்தக் காப்பகத்துக்கே கொடுத்துவிட்டேன். இப்போது அங்கு உள்ள ஒவ்வொரு பார்வையற்றவர் பிறந்த நாளையும் இனிப்புகளுடன் புத்தாடைகளுடன் கொண்டாடுகிறார்கள்.

ஒவ்வொரு வாரமும் யாரோ ஒருவருக்குப் பிறந்த நாள் வருகிறது. சந்தோஷம் கொப்புளிக்கும் குரலுடன் எனக்கு நன்றி சொல்கிறார்கள். வருஷம் முழுவதும் பிறந்த நாள் கொண்டாடிக்கொண்டே இருப்பதுபோல் இருக்கிறது. இந்த சந்தோஷம் என் பிறந்த நாள் கொண்டாட்டத்தில் கிடைக்கும் சந்தோஷத்தை விடவும் பெரியது. இப்போதுதான் முழுமையாக உணர்ந்து கொண்டிருக்கிறேன்.'

அவர் சொன்னதைக் கேட்டபோது 'பிறந்த நாள் என்பது நாம் சந்தோஷம்கொள்ளும் நாளாக மட்டும் ஏன் சுருங்கிப்போனது?' என்ற எண்ணம் தோன்றியது.

பணத்தைச் செலவுசெய்து நாம் உருவாக்கிக்கொள்ளும் கொண்டாட்டங்கள் ஒரு நாள் கூத்தாக முடிந்துவிடக்கூடியவை. அதிலும் சிலர் கடன் வாங்கி தனது பிறந்த நாளைக் கொண்டாடிவிட்டு, அதை அடைக்க முடியாமல் மாதக்கணக்கில் சிரமப்படுவதைக் காண்கிறேன்.

பிறந்த நாளைக் கொண்டாடும் சிறுவர்கள்தான் பரிசுக்கும் இனிப்புக்கும் ஆசைப்படுவார்கள். ஆனால், வயது வளர வளர சந்தோஷம் என்பது பொதுவில் பகிர்ந்துகொள்ளப்பட வேண்டியது. அதிலும் பெறுவதைவிடவும் கொடுப்பதில் இன்பம் அதிகம் என்பதை உணர வேண்டும் அல்லவா?

வாழ்வை அர்த்தப்படுத்திக்கொள்வது நமது செயல்களில்தான் இருக்கிறது. அதற்கு நாம் வாழ்வின் நோக்கம் குறித்து, சற்று சிந்தக்க வேண்டும். எது உண்மையான சந்தோஷம் என்பதை அறிந்துகொள்ள வேண்டும்.

சிந்தனையாளர் எமர்சன், சிறந்த பேச்சாளர்; இயற்கை ஆர்வலர். அவரது உரையில் அழகு என நாம் எதைக் கருதுகிறோம், ஏன் அதை ரசிக்கிறோம், உண்மையில் அந்த அழகு சிறப்பானதா என்பதைப் பற்றி விரிவாக எடுத்துச் சொல்கிறார்.

எமர்சனின் கணிப்புப்படி அழகு மூன்று விதமானது. முதல் வகை, கண்ணால் பார்ப்பது, ரசிப்பதன் காரணமாக அறியப்படும் புற அழகு. ஓடும் நீரிலும் கடலின் அலைகளிலும் ஒளிரும் மேகங்களின் வழியாகவும் உணரும் அழகு என அதைச் சொல்லலாம்.




இந்தக் காட்சிகள் நாளடைவில் பழகிப்போய்விடும். பிறகு, மனது புதிய அனுபவத்தைத் தேடத் தொடங்கிவிடும்.

இரண்டாவது வகை, காணும் இயற்கையின் ஊடாக நம் அகம்கொள்ளும் மன எழுச்சியை அறிந்துகொள்வது, இயற்கை அழகில் தெய்வீகத்தைக் காண்பது இந்த ரசனை, இதில் புறப்பொருட்கள் நம் அகத்தை எப்படி மாற்றுகின்றன என ஒருவன் ஆழ்ந்து அறிந்துகொள்கிறான்.

மூன்றாவது வகை, இயற்கையில் வெளிப்படும் அழகை முழுவதுமாக உள்வாங்கிக்கொண்டு அதைச் சிறந்த கலைப்படைப்பாக வெளிப்படுத்துவது. கலையின் வழியாக உருப்பெறும் இயற்கை எப்போதும் பேரழகாக உள்ளது.

மனிதன் பயன்படுத்தும் சகல சொற்களும் இயற்கையில் அவன் கண்டு, அனுபவப்பட்ட ஒன்றில் இருந்தே உருவாக்கப்பட்டுள்ளன. நாம் எந்தச் சொல்லின் மூலத்தைத் தேடிச் சென்றாலும் இயற்கையில் காணக்கிடைக்கும் ஒரு பொருளையே சென்று சேரக்கூடும்.

தன் எண்ணங்களை வெளிப்படுத்த இயற்கையைத் துணைகொள்பவன் அதற்கு என இயல்பான மொழியை உருவாக்கிக்கொள்கிறான். இயற்கையை முன்வைத்து தனது அனுபவங்களைப் பேச ஆரம்பிக்கிறான். அதுதான் விவசாயிகளின் இயல்பு. எளிமையான அந்தச் சொற்கள் உண்மையின் வடிவங்களாக வெளிப்படுகின்றன.

எமர்சனைப் போன்றவர்கள், மனித வாழ்வின் அர்த்தத்தை நமக்கு உணர்த்துகிறார்கள்; வழிகாட்டுகிறார்கள். பின்பற்றவேண்டியது நமது கடமை.

இன்று ஆசைத்தம்பியைப் போல எத்தனையோ பேர் தங்களது பிறந்த நாளை முன்னிட்டு பல்வேறுவிதமான நற்செயல்களைச் செய்துவருகிறார்கள். ஒருவர் தான் படித்த பள்ளிக்கு தனது பிறந்த நாளின்போது சூரியஒளி, மின்சார வசதி அமைத்துத் தந்திருக்கிறார். இன்னொருவர் தனது தொழிற்சாலையில் வேலைசெய்யும் ஆயிரம் பேருக்கும் ஒரு புத்தகம் பரிசு தந்திருக்கிறார். ஒரு பள்ளி மாணவன் தனது பிறந்த நாளில் தனக்குக் கிடைத்த பணம் முழுவதையும், புற்றுநோய் சிகிச்சைக்கான அன்பளிப்பாகத் தந்திருக்கிறான்.

இப்படி எத்தனையோ பேர் தங்கள் பிறந்த நாளைக் கொண்டாடும் வழியை மாற்றிக்கொண்டிருக்கிறார்கள். இது சிறிய தொடக்கம்தான். இது தொடருமானால், அதன் விளைவு நிச்சயம் ஆரோக்கியமானதாக இருக்கும்!

- சிறகடிக்கலாம்...

## இந்திய வானம் - 11
## எஸ்.ராமகிருஷ்ணன், ஓவியம்: ரமேஷ் ஆச்சார்யா

### அப்பு என்கிற ஆம்ஸ்ட்ராங்!

நிலவில் காலடி பதித்த நீல் ஆம்ஸ்ட்ராங்கை, உலகுக்கே தெரியும். எனக்குத் தெரிந்த அப்பு என்கிற ஆம்ஸ்ட்ராங் சைவ ஹோட்டல் ஒன்றின் சப்ளையர். சந்திரனில் மனிதன் காலடி வைத்த 1969-ம் ஆண்டு பிறந்த காரணத்தால் அவருக்கு ஆம்ஸ்ட்ராங் என்ற பெயரை வைத்துவிட்டார்கள்.

வாழ்வில் ஒருமுறையாவது தாஜ்மஹாலைப் பார்க்க வேண்டும்; இமயமலைக்குப் போய் வர வேண்டும் என, பலருக்கும் ஆசை இருக்கிறது. ஆனால் அப்புவுக்கு, கர்நாடகாவின் லோகுர் கிராமத்தில் உள்ள நரசிங்கநவார் குடும்பத்தை நேரில் சென்று பார்த்து வரவேண்டும் என்பதுதான் ஒரே ஆசை. அப்படி அந்தக் குடும்பத்தில் என்ன விசேஷம் இருக்கிறது?

இந்தியாவின் மிகப் பெரியக் கூட்டுக் குடும்பம் அது. 180 பேர் ஒன்றாக வசிக்கிறார்கள். இரண்டு பெரிய வீடுகளில் ஐந்து தலைமுறையாக ஒன்றாக வாழ்கிறார்கள். சமண சமயத்தைச் சார்ந்த குடும்பம் அது. அந்தக் குடும்பத்தினர் அனைவரும், தங்களின் 270 ஏக்கர் நிலத்தில் ஒன்றாகப் பாடுபடுகிறார்கள்; நிலத்தில் விளையும் காய்கறிகள், தானியங்களை உணவுக்குப் பயன்படுத்துகிறார்கள். வீட்டு உறுப்பினர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு வேலை ஒதுக்கப்பட்டுள்ளது. முறைவைத்துக்கொண்டு, பெண்கள் ஒன்றிணைந்து சமைக்கிறார்கள். வீட்டைப் பராமரிக்கிறார்கள். ஒரு நாளைக்கு அந்த வீட்டில் ஆயிரம் ரொட்டிகள் தயாரிக்கப்படுகின்றன. அந்தக் கூட்டுக் குடும்பத்தின் ஆண்டு வருமானம் 12 லட்சம் ரூபாய். அதற்குள் உடை, மருத்துவம், படிப்பு என யாவும் நிர்வகிக்கப்படுகின்றன!

ஒரே பிளாட்டில் அடுத்தடுத்த வீடுகளில் குடியிருக்க அண்ணன்-தம்பிகளே ஆசைப்படாத இன்றைய சூழலில் 180 பேர் ஒன்றாக வாழ்கிறார்கள் என்றால், அவர்களின் பரந்த மனதைப் பாராட்ட வேண்டும். அதற்காக அவர்களை ஒருமுறை தேடிச் சென்று பார்த்து, அந்த வீட்டில் ஒரு ரொட்டியாவது சாப்பிட்டு வர வேண்டும் என்பது அப்புவின் ஆசை. அப்பு அப்படித்தான்!



நிலவில் காலடி எடுத்து வைத்த தனது சாதனையைப் பற்றி கூறும்போது நீல் ஆம்ஸ்ட்ராங் இப்படிச் சொன்னார்... 'இது மனிதனுக்கு ஒரு சிறிய கால் தடம். ஆனால், மனிதகுலத்துக்குப் பெரும் தாவல்!' ஆனால், 'அமெரிக்க விண்வெளி வீரர்கள் சந்திரனில் காலடி வைக்கவே இல்லை. இப்போது நாம் காணும் புகைப்படங்கள் இயக்குநர் ஸ்டான்லி குப்ரிக் ஸ்டுடியோவில் செட் போட்டு எடுத்துத் தந்தவை' என்ற ஒரு சர்ச்சை இன்றும் உலவிவருகிறது. இந்தச் சர்ச்சையை மறுத்த ஆம்ஸ்ட்ராங், 'நாங்கள் விட்டுவந்த கேமரா மற்றும் இதர உபகரணங்கள் இன்றும் நிலாவில்தான் இருக்கின்றன. அவை உலகுக்கு உண்மையை விளக்கும்' எனக் கூறியிருக்கிறார்.

நிலாவில் மனிதன் காலடி வைத்ததை அப்புவால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அதற்கு அவர் கூறும் காரணம், 'அமெரிக்காக்காரன் காலடி எடுத்து வெச்ச எந்த இடமும் உருப்பட்டது இல்லை; சர்வநாசம்தான். ஆம்ஸ்ட்ராங் சந்திரனில் காலடி எடுத்து வைக்கும்போது முதலில் இடது காலையே வைத்தார். பிறகு எப்படி உருப்படும்? அமெரிக்காக்காரன் எதைச் செய்தாலும் ஆதாயம் இல்லாம செய்ய மாட்டான். இப்போ நிலாவுல காலடி எடுத்து வெச்சுட்டான்; அடுத்து அங்கே வீடு கட்ட பிளான் போடுவான்; பிறகு, இன்னொரு அமெரிக்க முதலாளி கடை போடுவான்; அப்புறம் ரோடு, வண்டி, போக்குவரத்துனு ஆரம்பிப்பாங்க. அப்புறம் என்ன, ஒரே

சந்தைக்கடைதான். சச்சரவு, வெட்டு, குத்துனு பிறகு அந்த இடத்துல மனுஷன் வாழவே முடியாது. மனுஷன் காலடி எடுத்து வெச்ச பின்னாடி நிலாவைப் பார்க்கும்போது அதிசயமாவே இல்லை. எப்போ அமெரிக்காக்காரன் பிளாட் போட்டு விக்கப்போறானோனு பயமா இருக்கு. இது என் அபிப்பிராயம். உலகம் ஆயிரம் சொல்லட்டும். எனக்குனு ஓர் அபிப்பிராயம் இருக்கும்ல. அதுவும் ஆம்ஸ்ட்ராங்குனு பேர் வெச்சுட்டு நிலாவைப் பத்தி அபிப்பிராயம் சொல்லாட்டி எப்படி?' என்கிறார் அப்பு.

அப்பு என்கிற ஆம்ஸ்ட்ராங் இப்படித்தான். அவரது பேச்சில் எப்பவும் கோபம் கொப்புளிக்கும். காரணம், வாழ்க்கையில் அவ்வளவு அடிபட்டிருக்கிறார். வறுமையான குடும்பச் சூழல் காரணமாக பள்ளிப் படிப்பை தொடர, பத்துக்கும் மேற்பட்ட சிறு வேலைகள் செய்திருக்கிறார். எதிலும் நிலைக்க முடியவில்லை. கடைசியில் வயிற்றுப்பாட்டைப் போக்கிக்கொள்ள ஹோட்டல் வேலையில் சேர்ந்துவிட்டார். பசியைப் போக்குவதுதானே முக்கியம். ஹோட்டலில் சாப்பாட்டுப் பிரச்னை கிடையாது. தனது வருமானத்தில், தன் ஒருவனையே கவனித்துக்கொள்ள முடியாதபோது, எதற்கு கல்யாணம் என அவர் திருமணம் செய்து கொள்ளவில்லை.

நிலவில் கால் வைப்பது மட்டும்தான் சாதனையா என்ன? அப்பு என்கிற ஆம்ஸ்ட்ராங் இதுவரை ஒருமுறைகூட எவரிடமும் கை நீட்டி கடன் வாங்கியதே இல்லை. அதுவும் சாதனைதானே! ஒன்று இரண்டு பேருக்கு அவர் கடன் கொடுத்திருக்கிறார். அவர்கள் திருப்பித் தராமல் ஏமாற்றியிருக்கிறார்கள். ஆனால், அப்பு அதைப் பெரிதாக எண்ணவே இல்லை. இந்தக் காலத்தில் ஒரு மனிதன் கடனே வாங்காமல் 45 வயது வரை வாழ முடிந்திருக்கிறது என்பது சாதனை அல்லவா?!

அப்பு, கடன் வாங்காமல் இருப்பதற்கு அவரது அப்பா முக்கியக் காரணம். ஏனெனில், அவர் கடன் வாங்காத ஆளே கிடையாது. அன்றாடம் யாராவது வீடு தேடி வந்து, கொடுத்தக் கடனைக் கேட்டு நிற்பார்கள்; அசிங்கமாகத் திட்டுவார்கள். யார் கடனையும் அப்புவின் அப்பா முழுமையாக அடைக்கவில்லை. அற்ப ஆயுளில் இறந்தும் போய்விட்டார். ஒரு மனிதனின் மரணத்துடன் அவன் வாங்கிய கடன்கள் இறந்துவிடுவது இல்லை. அந்தக் கடன்கள், வட்டிக்கு வட்டி எனக் குட்டிபோட்டு உயிர் வாழ்ந்துகொண்டிருந்தன. முடிவில் ஒருநாள் கடன்காரர்கள் ஒன்று சேர்ந்து அவர்கள் குடியிருந்த வீட்டைப் பிடுங்கிக் கொண்டு துரத்திவிட்டார்கள்.

அப்போது அப்புவுக்கு 16 வயது இருக்கும். குடும்பம், நடுத்தெருவுக்கு வந்துவிட்டது. ஓர் இரவு யார் வீட்டிலாவது போய்த் தங்கலாம் என்றால்கூட, எங்கே போவது எனத்தெரியவில்லை. வேறு வழி இல்லாமல் அன்று இரவு கோயில் மண்டபத்தில் படுத்துக் கொண்டார்கள். அப்போதுதான் 'வாழ்வில் இனி ஒரு முறைகூட யாரிடமும் கடன் வாங்கக் கூடாது' என முடிவுசெய்தார் அப்பு. ஆனால், அப்படி இருப்பது எளிது அல்ல என்பதையும் தனது கஷ்ட ஜீவனத்தில் பலமுறை உணர்ந்திருக்கிறார். சட்டைப் பையில் நாலணாகூட இல்லாத நாளிலும் அப்பு யாரிடமும் கை நீட்டி, கடன் கேட்டதே இல்லை. ஒருவேளை பெண்டாட்டி பிள்ளைகள் இருந்திருந்தால், கடன் வாங்க நேரிட்டிருக்குமோ என்னவோ!

கடன் வாங்குவது ஒரு கலை. எல்லோருக்கும் எளிதாக அது கைவந்துவிடுவது இல்லை. இதில் தேர்ந்த கில்லாடிகள் இருக்கிறார்கள். அவர்களின் நடிப்போடு எந்த ஆஸ்கர் விருது வென்ற நடிகரும் போட்டியிட முடியாது. முகத்தைச் சோகமாக வைத்துக்கொண்டு பரிதாபமான குரலில் கேட்பவர் நம்பும்படியாக ஒரு கதையைச் சொல்வார்கள். அந்த நடிப்பை நம்பி பணம் தந்துவிட்டால், பிறகு அவர்களை நாம் சந்திக்கவே முடியாது. பணம் அரோகராதான். பணம், மனிதர்களைச் சேர்த்து வைத்ததைவிட பிரித்துவைத்ததே அதிகம். எத்தனையோ பேரின் உறவு, பணத்தால் சீர்கெட்டுப்போய் இருக்கிறது. நண்பர்கள், பணத்தின் காரணமாகச் சண்டையிட்டு பகையாளி ஆகியிருக்கிறார்கள். 'பணம் பத்தும் செய்யும்!' என்பார்கள், அந்தப் பத்தில் ஒன்பது மோசமானவை!

அப்புவும் அப்படி ஒருமுறை ஏமாந்திருக்கிறார். அவரோடு வேலைபார்த்த முத்துராமன், ஓர் இரவில் கதவைத் தட்டி 'அவசரமாக ஐந்தாயிரம் ரூபாய் வேண்டும்' எனக் கேட்டான். 'எதற்காக?' என அப்பு கேட்டபோது, 'மகளை ஆஸ்பத்திரியில் சேர்த்திருக்கிறேன். இன்றைக்கு டிஸ்சார்ஜ் செய்வதாகச் சொல்லியிருந்தார்கள். ஆனால், ஆஸ்பத்திரிக்குக் கட்ட பணம் இல்லை. நானும் பலரிடம் கடன் கேட்டுப் பார்த்துவிட்டேன். கிடைக்கவில்லை. ஆஸ்பத்திரியில் மகளும் மனைவியும் காத்துக்கொண்டிருக்கிறார்கள். நீங்கள்தான் உதவ வேண்டும்' எனக் கண்ணீர் விட்டான்.

அப்பு அவனது பதற்றத்தை நம்பி, தனது சேமிப்பில் இருந்த 2,300 ரூபாயை எடுத்துக் கொடுத்தார். அவன் இதை வைத்துக்கொண்டு எப்படி ஹாஸ்பிட்டல் பில் கட்டுவது என அழுதபடியே சென்றான். அன்று இரவு

முழுவதும் முத்துராமனின் குடும்பத்தைப் பற்றியே அப்பு நினைத்துக்கொண்டிருந்தார்.




அதன் பிறகு, இரண்டு நாட்கள் ஆகியும் முத்துராமன் வேலைக்கு வரவில்லை. ஹோட்டல் சூப்பர்வைசரிடம், 'என்ன ஆயிற்று?' என அப்பு கேட்டதற்கு, 'அவன் வேலையைவிட்டு நின்று நாலு நாள் ஆகுதே!' என்றார். 'முந்தாநாள் என்னிடம் வந்து மகளுக்கு உடல் நலம் இல்லை எனப் பணம் வாங்கிச் சென்றானே?!' என அப்பு கேட்க, சூப்பர்வைசர் சிரித்தபடியே சொன்னார், 'அதெல்லாம் சுத்தப் பொய். அவன் பெண்டாட்டி, பிள்ளைகள் எல்லாரும் தஞ்சாவூர்ல இருக்காங்க. அவன் உன்கிட்ட பொய்ச் சொல்லி கடன் வாங்கியிருக்கான். அவன் சுத்த ஃபிராடு. கடன் கொடுக்கிறதுக்கு முன்னாடி என்கிட்ட ஒருமுறை கேட்டிருக்கலாம்ல!' என்றார். கடன் வாங்குவதற்காக இப்படி கண்ணீர்விட்டு நடிக்க முடியுமா என்பது அப்புவுக்கு வியப்பாக இருந்தது. ஆனால், சூப்பர்வைசர் சொன்னது நிஜம் என்பது புரிந்தது.

கடன் வாங்குகிறவர்கள் விதவிதமான பொய்களை, காரணங்களாகச் சொல்கிறார்கள். கடனைத் திரும்பக் கொடுக்க வேண்டும் என்கிறபோது தயக்கமும் சங்கடமும் இயலாமையும் வந்துவிடுகின்றன. கடனைத் திருப்பித் தராமல் இருக்க புதுப்புதுப் பொய்கள் சொல்லத் தொடங்குகிறார்கள். கடன் வாங்குவதோ, திரும்பக் கொடுக்காமல் இருப்பதோ எவரையும் உறுத்துவதே இல்லை. காற்றுப்போன பலூனைப்போல மனசாட்சியும் சுருங்கி வலுவற்றுப்போய்விட்டதா என்ன?

தன்னால் அப்படி மனசாட்சி இல்லாமல் நடக்க முடியாது என்பதில் அப்பு உறுதியாக இருந்தார். ஒரே ஒருமுறை அவர் கடன் கேட்கவேண்டிய நெருக்கடியான நிலை உருவானது. அவரது தங்கை ஹோட்டல் வாசலில் வந்து நின்றுகொண்டு, 'ஊருக்குப் போக எப்படியாவது ஐந்நூறு ரூபாய் வேண்டும்' எனக் கெஞ்சினாள். தன் கையில் பணம் இல்லை என அவர் சொல்லியும் அவள் கேட்கவில்லை. முடிவில் கல்லாவில் இருந்த முதலாளியிடம் அவர் கடன் கேட்கச் சென்றார். முதலாளி ஒரு வார்த்தைகூட கேட்கவில்லை. ஐந்நூறு ரூபாயை எடுத்துக் கொடுத்துவிட்டுச் சொன்னார், 'இது கடன் இல்லை, உதவி. உன் தங்கச்சியை ஊருக்கு அனுப்பி வை!' 'இதை என் சம்பளத்துல பிடிச்சிக்கோங்க முதலாளி' என்றார் அப்பு. 'போடா,

போய் வேலையைப் பாரு. இந்த ஐந்நூறு ரூபாயை வெச்சுத்தான் நான் கோட்டை கட்டப்போறேனா? உன்னைப் பத்தி எனக்குத் தெரியும். நீ ஒருத்தனாவது கடன் வாங்காம காலத்தை ஓட்ட பாரு!' என்றார்.

ஒருவரைக் கடனாளி ஆக்குவது எளிது; ஆனால், அதில் இருந்து மீட்பது எளிது அல்ல. அதை அப்பு நன்றாக உணர்ந்திருக்கிறார். வறுமையாலும் நெருக்கடியாலும்கூட அவரைக் கடன் வாங்கவைக்க முடியவே இல்லை. 'இப்படியே கடன் வாங்காமல் என் வாழ்நாள் முழுக்க இருந்துவிட்டால் போதும். சந்தோஷமாகச் சாவேன்' என அப்பு சொல்கிறார்.

எளிய வாழ்க்கை வாழ்வது தவறு அல்ல. ஆனால், அறம் இல்லாத வாழ்க்கையை வாழ்வது தவறானது. அந்த வகையில் 'இப்படித்தான் வாழ்வேன்' என்ற மனஉறுதியோடு வாழும் அப்பு, ஒரு சாதனையாளரே!

எலீசா இவான்ஸ் என்ற உளவியல் ஆய்வாளர், தனது உரை ஒன்றில் மனிதனின் பலவீனங்களில் முதன்மையானது பயம் எனக் கூறுகிறார். 'பயம் தன்னை மறைத்துக்கொண்டு பல்வேறுவிதமான வடிவங்களில், உருவங்களில் எண்ணங்களாக வெளிப்படுகிறது. பயம் ஒரு விதையைப்போல மனதில் ஊன்றி வளரத் தொடங்குகிறது. அதை வளர அனுமதித்துவிட்டால் நமது வளர்ச்சி தடைபட்டுவிடும். ஆகவே, அச்சம், தோல்வி பற்றி சதா ஆராய்ந்துகொண்டு வீணாகக் காலம் கடத்தவேண்டியது இல்லை. அதற்கு மாறாக துணிவுடன் செயல்படத் தொடங்கினால், அச்சம் தானாகவே விடைபெற்றுவிடும். புதிய செயல்களில் ஊக்கமுடன் ஈடுபடும்போது மட்டுமே ஒருவரின் முழு ஆளுமைத்திறனும் வெளிப்படும். படைப்பாற்றல் திறன் என்பது, எழுத்தாளர்களுக்கும் கலைஞர்களுக்கும் மட்டுமேயானது அல்ல; அது சாதாரண மனிதர்களுக்கும் அவசியமானது. வாழ்வில் முக்கியமான முடிவுகளை எடுக்க படைப்பாற்றல் பெரிதும் உதவிசெய்கிறது.

தோல்வி ஏற்படும்போது, நாம் அடுத்தவர்களைக் குற்றம் சொல்கிறோம்; நம் மீது பரிதாபத்தையும் அனுதாபத்தையும் பெற முயற்சிக்கிறோம். அது தவறான வழிமுறை. இதற்கு மாறாக அடுத்து என்ன செய்வது எனச் சிந்தித்தால், தோல்வியைக் கடந்துவிடலாம். என்றோ நாம் ஒரு வெற்றி அடைந்திருந்தால் அதைப் பற்றியே பேசிக்கொண்டிருக்கக் கூடாது. அதைத் தாண்டி செயல்பட என்ன செய்வது என்பதை யோசிக்க வேண்டும். ஆளுமையை வளர்த்துக்கொள்ள நமக்கு நாமே உத்வேகம் ஊட்டிக்கொள்ள வேண்டும்' என்கிறார்.

'நிலவில் காலடி பதித்த சாதனையைச் செய்ய ஆம்ஸ்ட்ராங்குக்கு ஆதாரமாக இருந்தவை நிதானமான செயல்பாடு, அச்சமின்மை, உறுதியான மனம், அடக்கம் ஆகிய நான்கும்' என்கிறார்கள். இவை விண்வெளியில் சாதனை செய்வதற்கு மட்டும் அல்ல, அன்றாட வாழ்வுக்கும் அவசியமான நெறிகளே!

- சிறகடிக்கலாம்...

## இந்திய வானம் - 12
## எஸ்.ராமகிருஷ்ணன், ஓவியங்கள்: ரமேஷ் ஆச்சார்யா

### சுடர்மிகும் அறிவு!

இரண்டு வாரங்களுக்கு முன்னர் காசிக்குச் சென்றிருந்த ஒரு நண்பர் தொலைபேசியில் அழைத்து, 'பாரதியார் வசித்த வீடு எங்கே இருக்கிறது? அதைப் பார்க்க விரும்புகிறேன். யாரைக் கேட்டாலும் 'தெரியவில்லை' என்கிறார்கள். அரை நாளாகச் சுற்றிக்கொண்டிருக்கிறேன்' என்றார்.

' 'ஹனுமான் காட்' எனக் கேளுங்கள். காஞ்சி மடத்துக்கு நேர் எதிராக 'சிவ மடம்' என தமிழிலும் இந்தியிலும் எழுதப்பட்ட பழைய வீடு ஒன்று இருக்கும். அதுதான் காசியில் பாரதி வசித்த இடம்' என்றேன்.



அன்று இரவு அவர் மறுபடியும் போன் செய்து, 'பாரதி வசித்த இடம், இப்படி பராமரிப்பே இல்லாமல் கிடக்கிறதே' என வருந்திக் கண்ணீர்விட்டார். தமிழ்நாட்டில் உள்ள பல்வேறு நினைவகங்களையே நாம் முழுமையாகப் பராமரிப்பது இல்லை. காசியில் பாரதி வசித்த வீட்டைப் பற்றி யார் கவலைப்படப்போகிறார்கள்?

*1898*ம் ஆண்டு ஜூன் மாதம் பாரதியின் தந்தை சின்னச்சாமி ஐயர் காலமானதும், அவரது வாழ்க்கை நிலை நெருக்கடியானது. அப்போது அத்தை குப்பம்மாளும், அவரது கணவர் கிருஷ்ணசிவனும் காசியில் இருந்தார்கள். பாரதியை காசிக்கு வருமாறு அத்தை அழைக்கவே, அவரும் புறப்பட்டுச் சென்றார். தனது *16* முதல் *21*வது வயது வரை பாரதியார் காசியில் வசித்திருக்கிறார். அவரது சிந்தனையிலும் உடையிலும் உருவத்திலும் மாற்றத்தை உருவாக்கியது வாரணாசியே!

நெரிசலான சந்துக்குள்தான் சிவமடம் என்ற பாரதி வசித்த வீடு அமைந்து இருக்கிறது. அதில் தற்போது பாரதியின் உறவினர் கே.வி.கிருஷ்ணன் வசிக்கிறார். மிகவும் வயதான மனிதர். பாரதியின் மார்பளவு சிலை ஒன்று, வேப்பமரத்தை ஒட்டி அமைக்கப்பட்டுள்ளது. பாரதி அமர்ந்து படித்த மேஷை, அவர் பயன்படுத்திய ஹார்மோனியம் போன்றவை நினைவுப் பொருட்களாக உள்ளன. முறையான பராமரிப்பு இல்லாமல் இருக்கும் அந்த வீட்டை பாரதி நினைவகமாக மாற்றி, அங்கே அவரது பாடல்கள், புகைப்படங்கள், செய்திகள் இடம்பெறச் செய்ய வேண்டும் என்பது நீண்டகாலக் கோரிக்கை. அத்துடன் பாரதி வசித்த வீடு பற்றிய தகவல் பலகை வாரணாசி ரயில் நிலையத்திலும் முக்கிய இடங்களிலும் விடுதிகளிலும் வைக்கப்பட வேண்டும். இதற்காக மத்திய மாநில அரசுகளிடம் குரல்கொடுக்கவேண்டியது நம் அனைவரின் கடமை!

ஜப்பானில் கவிஞர் பாஷோவின் நினைவிடத்துக்குச் சென்றிருந்தேன். அங்கே தினமும் இளைஞர்கள் ஒன்றுகூடி கவிதை வாசிக்கிறார்கள். ஹைக்கூ கவிதை எழுதுவதற்கு பயிற்சி அளிக்கப்படுகிறது. பாஷோவின் கவிதைகளை வேறு மொழிகளில் மொழிபெயர்ப்பு செய்கிறார்கள். அந்த இடம் ஒரு தியான மண்டபம்போல அத்தனை அமைதியாக, இயற்கையோடு இணைந்து உருவாக்கப்பட்டிருந்தது. அதுதான் ஒரு கவிஞருக்கு நாம் செய்யும் மரியாதை!

சமீபத்தில் தொலைக்காட்சியில் ஒரு நிகழ்ச்சி பார்த்தேன். அதில் 'மகாகவி பாரதியார் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயில் யானை மிதித்துத் தள்ளி இறந்துபோய்விட்டார்' என ஒரு பேச்சாளர் உணர்ச்சிப் பொங்க முழக்கமிட்டு கைதட்டல்கள் வாங்கிப்போனார். இவரைப்போல பலரும் இந்தப் பொய்யான தகவலை, தொடர்ந்து பகிர்ந்துவருகிறார்கள். மக்களும் இதை உண்மை என்றே நம்புகிறார்கள். ஒரு பொய் தொடர்ந்து சொல்லப்படுவதன் வழியே உண்மையாக உருமாறிவிடுகிறது என்பதற்கு இதுவே உதாரணம்.

பாரதியை யானை தூக்கி வீசியது நிஜம். ஆனால், அவர் அதில் மரணம் அடையவில்லை. அதன் சில மாதங்களுக்குப் பிறகு, திடீரென ஏற்பட்ட வயிற்றுப்போக்கால்தான் மரணம் அடைந்தார். இந்த உண்மையை பாரதியியல் ஆய்வாளர்கள் பாரதியின் மரணச் சான்றிதழுடன் நிரூபித்திருக்கிறார்கள். பாரதியாரின் இறுதிநாட்களைப் பற்றிய உண்மைச் செய்தியை உள்ளடக்கிய ஆய்வு நூலாக 'பாரதியின் இறுதிக்காலம்' என்ற புத்தகத்தை முனைவர் ய.மணிகண்டன் எழுதியிருக்கிறார். அதில் உண்மையான தகவல்களை தகுந்த ஆதாரத்துடன் விளக்கியுள்ளார். பாரதியின் இறுதிக்காலத் தோற்றம் எப்படி இருந்தது என்பதைப்பற்றி ஸி.ஆர்.ஸ்ரீநிவாஸன் ஒரு சித்திரத்தைத் தருகிறார்.

நடுத்தர உயரம், ஒற்றை நாடி, மாநிற மேனி, பிரிபிரியாகச் சுற்றிய வால்விட்ட தலைப்பாகை, அகன்ற நெற்றி, அதன் மத்தியில் காலணா அளவு குங்குமப்பொட்டு, அடர்ந்த புருவங்கள், நிமிர்ந்த நாசி, முறுக்கிய மீசை, பித்தான் இல்லாத ஷர்ட்டு, அதை மூட ஒரு அல்பகா கோட், அது கிழிந்த நிலையில் இருக்க, சாந்தம் நிறைந்த கண்களுடன் பாரதி நாற்காலியில் உட்கார்ந்திருந்தார். புதுவையில் புகுந்த பாரதி வேறு... புதுவையில் இருந்து வெளியேறிய பாரதி வேறு. உள்ளே சென்றவர் வீரர், வெளியே வந்தவர் ஞானி.

இதுதான் கடைசிக் காலத்தில் இருந்த பாரதியின் தோற்றம். பாரதியை அவரது இறுதிக்காலத்தில் சந்தித்த பலரும், 'அவரது தோற்றமும் செயல்களும் ஞானியைப்போல் இருந்தன. அவர் ஒரு ஞானக்கிறுக்கர்போல நடந்துகொண்டார்' எனக் கூறுகிறார்கள். பாரதியின் வாழ்க்கை வரலாற்றை எழுதிய வ.ரா., பாரதியை யானை வீசி எறிந்த சம்பவத்தைப் பற்றி விரிவாக எழுதியிருக்கிறார்.

பாரதியார் சென்னையில் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயிலுக்குப் பக்கத்து வீதியில் குடியிருந்தார். கோயிலுக்குப் போகும்போதெல்லாம் கையில் தேங்காய், பழம் கொண்டுபோவது அவரது வழக்கம். கோயில் மண்டபத்தில் கட்டப்பட்டிருக்கும் அர்ச்சுனன் என்கிற யானையிடம் அவருக்குத் தனி பிரியம் இருந்தது. அந்த யானைக்குப் பழங்களைத் தந்து தும்பிக்கையைத் தடவிவிடுவார். இருவருக்குள்ளும் ஓர் இணக்கம் கூடியிருந்தது.



ஒருநாள் யானைக்கு மதம் பிடித்துவிட்டது. அதை பாரதி அறிந்திருக்கவில்லை. வழக்கம்போல யானைக்குப் பழம் கொடுக்கப் போனார். பழத்தை வாங்குவதற்குப் பதிலாக யானை அவரையே தும்பிக்கையால் தூக்கிவிட்டது. நிமிட நேரத்தில் அவரைக் கீழே போட்டது. யானையின் கால்களுக்கு இடையே பாரதி விழுந்தார். கல்பாவிய தரை. தூக்கிப்போட்ட வேகத்தில் தலையில் காயம் படவே ரத்தம் கொட்டியது. இதைப் பார்த்த சிலர், குரல்கொடுக்கவே அங்கு இருந்த குவளைக்கண்ணன் ஓடிவந்தார். கூட்டத்தை விலக்கி உள்ளே பாய்ந்து பாரதியைத் தூக்கிக்கொண்டு வெளியே வந்து மண்டபத்தில் படுக்கவைத்தார். எதிர்வீட்டில் இருந்த மண்டையம் ஸ்ரீநிவாஸாச்சாரியார் விரைந்து ஒரு வண்டிக்கு ஏற்பாடு செய்து, ராயப்பேட்டை மருத்துவமனைக்குக் கொண்டுசென்றார்.

அங்கே பாரதியாருக்குச் சிகிச்சை அளிக்கப்பட்டது. மருத்துவமனையில் சேர்த்து தொடர்சிகிச்சை அளிக்கக்கூடிய அளவுக்கு அபாயகரமாக எதுவும் இல்லை என்பதால், திருவல்லிக்கேணி வீட்டுக்குக் கொண்டுவந்தார்கள். யானைக்கு மதம் பிடித்திருந்ததால் தன்னை அடையாளம் கண்டுகொள்ளவில்லை என்றும், தன்னை மிக அருகிலே பார்த்ததும்

அடையாளம் கண்டுகொண்டு கீழே போட்டு அசையாமல் நின்றது என்றும் பாரதி சொன்னார். இது நடந்தது *1921*-ம் ஆண்டு ஜூன் மாதம்.

இந்தச் சம்பவம் பற்றி, பாரதியின் மகள் சகுந்தலா பாரதியும் எழுதியிருக்கிறார். 'ஸ்ரீனிவாஸாச்சாரியார் மகள் ரெங்காள் என்பவள் எங்கள் வீட்டுக்கு ஓடிவந்து 'சகுந்தலா அப்பாவை ஆனை அடிச்சுடுத்து' என அழுதுகொண்டே கத்தினாள். நான் ரெங்காவுடன் பார்த்தசாரதி கோயிலுக்கு ஓடினேன். அதற்குள் அவரை ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோய் விட்டிருந்தார்கள். திருவல்லிக்கேணி விக்டோரியா ஹாஸ்டலில் இருந்த என் தாயாரின் இளைய சகோதரரை அழைப்பதற்காகச் சென்றேன். அதற்குள் தந்தையை வீட்டுக்குக் கொண்டுவந்திருந்தார்கள். மேல் உதட்டில் யானையின் தந்தம் குத்தியதால் ஏற்பட்ட காயம். தலையில் பலமான அடி. பெரிய தலைப்பாகை இருந்தபடியால் தலை தப்பிற்று. அவர் குணமடைந்து மீண்டும் வேலைக்குச் செல்ல பல நாட்கள் ஆகின!'

ஆனால், 'பாரதி ஆய்வாளர்கள் பலரும் சொல்வதுபோல *1921*-ம் ஆண்டு ஜூன் மாதம் இந்தச் சம்பவம் நடைபெறவில்லை. *1920*-ம் ஆண்டு டிசம்பர் மாதம் அல்லது *1921*-ம் ஆண்டு ஜனவரி மாதத்துக்கு முன்னர் நடைபெற்றிருக்க வேண்டும்' என்கிறார் முனைவர் ய.மணிகண்டன்.

யானை தூக்கி வீசிய சம்பவத்தை, தன் கற்பனை கலந்து 'கோயில் யானை' என்ற நாடகமாக பாரதியார் எழுதியிருக்கிறார், 'சுதேசமித்திர'னில் வெளியான அந்த நாடகம், தற்போது மீள்பதிப்பு கண்டுள்ளது. பாரதியாரைத் தூக்கி வீசிய யானை, *1923*-ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் இறந்துபோய்விட்டது. உடல் நலம் தேறிய பாரதி ஒரு புகைப்படம் எடுத்துக்கொண்டிருக்கிறார். முண்டாசு கட்டிய பாரதியின் புகைப்படம் சென்னை பிராட்வேயில் இருந்த ரத்னா ஸ்டுடியோவில் எடுக்கப்பட்டது. அதை பாரதிதாசனுக்கு அனுப்பிவைத்திருக்கிறார். பாரதியார் எடுத்துக்கொண்ட புகைப்படங்கள் மொத்தமே ஐந்துதான். அவை முப்பது வயதில் இருந்து முப்பத்தைந்து வயதுக்குள் எடுக்கப்பட்டவை. புதுச்சேரியில் இரண்டும், காரைக்குடியில் இரண்டும், சென்னையில் ஒன்றுமாக எடுத்திருக்கிறார்.

ஈரோடு கருங்கல்பாளையத்தில் இருந்த வக்கீல் தங்கப்பெருமாள் பிள்ளையின் அழைப்பின் பேரில், வாசகசாலையின் ஐந்தாம் ஆண்டு விழாவில் பங்கேற்று உரை நிகழ்த்துவதற்காக பாரதியார் ஜூலை மாதம் ஈரோடு சென்றார். *1921*-ம் ஆண்டு ஜூலை *31*-ம் தேதி நடைபெற்ற

கூட்டத்தில் 'மனிதனுக்கு மரணமில்லை' என்ற தலைப்பில் பேருரையாற்றினார்.

'மரணம் இல்லாமல் வாழ்வதுகுறித்த என்னுடைய கொள்கையை பெரிய மகான்கள் கூடியிருக்கிற இந்தச் சபையில் தர்க்கம்செய்யவே வந்திருக்கிறேன். எனது கொள்கையைத் தக்க ஆதாரங்களுடன் ருஜுப்படுத்தி உங்களுடைய அங்கீகாரம் பெறவே உங்கள் ஊருக்கு வந்திருக்கிறேன்' என பாரதி தனது உரையைத் தொடங்கினார். 'நாணத்தை, கவலையை, சினத்தை, பொய்யை, அச்சத்தை, வேட்கையை அழித்துவிட்டால் அப்போது சாவும் அங்கே அழிந்துபோகும்' எனச் சித்தர்கள் கூறியிருக்கிறார்கள். இதையே ஐரோப்பிய சயின்ஸ் சித்தாந்தங்களும் தெளிவுபடுத்துகின்றன. சினங்கொண்டவர் தன்னைத்தானே தீயாற் சுட்டுச் செத்திடுவாருக்கு ஒப்பாவார். கோபம் கொண்டோர் பிறர் மேற்கொண்டு கவலைப்பட்டு தாம் செய்தது எண்ணித் துயரக்கடலில் வீழ்ந்து சாவார்கள். ஆகவே, சினம் காரணமாகக் கவலையும், கவலையினால் சாவும் நேரிடுகின்றன' என விளக்கினார் பாரதி.

' 'நாடியிலே அதிர்ச்சியினால் மரணம் நிகழும்' என விஞ்ஞானி ஜகதீச சந்திரபோஸ் கூறுகிறார். ஞானானுபவத்தினாலும் இதுதான் முடிவு' என்றார் பாரதி. இப்படி மனிதனுக்கு எதனால் அழிவு நேருகிறது. அதை எவ்வாறு தடுப்பது என்பதைப் பற்றி பாரதி தெளிந்த ஞானத்துடன் உரையாற்றினார்.

பாரதியாரின் கருங்கல்பாளைய உரையை நேரில் கேட்ட ச.து.சு யோகியார் வியந்து எழுதியிருக்கிறார். 'மனிதருக்கு மரணமில்லை' என்றபடியே பாரதியார் பாட ஆரம்பித்தார். 'அடடா... அவர் பாடியதைக் கேட்க வேண்டுமே! அது என்ன மனிதனுடைய குரலா? இல்லை. இடியின் குரல்; வெடியின் குரல். 'ஓஹோஹோ' என அலையும் ஊழிக்காற்றின் உக்கிர கர்ஜனை. அர்த்த புஷ்டியுள்ள அசாதாரண வீரியத்தோடு கூடிய வேதக் கவிதையின் வியப்புக் குரல்'!

ஈரோடு நகரில் நிகழ்த்தப்பட்ட உரை, மக்களைப் பெரிதும் சிந்திக்கவைத்தது. ஆகவே, மறுநாள் ஈரோடு நகரில் உள்ள வாய்க்கால் கரையில் இன்னொரு பொதுக்கூட்டம் ஏற்பாடு செய்வதாகவும், அதிலும் பாரதியார் வந்து உரையாற்ற வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார்கள். பாரதியாரும் அதற்குச் சம்மதித்து 'இந்தியாவின் எதிர்கால நிலை' என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றினார். ஈரோடு நகரில் நடைபெற்ற இந்த இரண்டு உரைகளுக்குப் பின்னர் சென்னை திரும்பிய பாரதியார் ஆகஸ்ட்

மாதம் 4-ம் தேதி சுதேசமித்திரனில் 'எனது ஈரோடு யாத்திரை' என ஒரு கட்டுரை எழுதினார்.




செப்டம்பர் மாதம், திடீரென ஏற்பட்ட வயிற்றுப்போக்கால் பெரிதும் பாதிக்கப்பட்டார். வேலைக்குப் போக முடியவில்லை. படுக்கையில் கிடந்தார். திருவல்லிக்கேணி மாட வீதியில் குடியிருந்த ஹோமியோபதி டாக்டர் டி.ஜானகிராமன் பாரதியைப் பரிசோதனைசெய்து மருந்து தந்திருக்கிறார். அதை பாரதியார் ஏற்க மறுத்துவிட்டார் என்கிறார்கள். செப்டம்பர் 11-ம் தேதி இரவு பாரதி தன் நண்பர்களிடம் ஆஃப்கானிஸ்தான் அரசராக இருந்த அமானுல்லா கானைப் பற்றி ஒரு கட்டுரை எழுத வேண்டும் எனச் சொல்லிக்கொண்டிருந்தார். அதுவே அவரது கடைசிப் பேச்சு என நீலகண்ட பிரம்மசாரி குறிப்பிடுகிறார்.

அன்றைய முன்னிரவு முழுவதும் பாரதி மயக்கத்தில் இருந்தார். பாரதியார் இறந்தது இரவு 1:30 மணி. ஆகவே, செப்டம்பர் மாதம் 12-ம் தேதி என மரணச் சான்றிதழில் குறிக்கப்பட்டுள்ளது. ஆக... யானை மிதித்ததற்கும் பாரதியின் மரணத்துக்கும் நேரடியாக ஒரு தொடர்பும் இல்லை. அவரது மரணச் சான்றிதழில் நீடித்த வயிற்றுப்போக்கின் காரணமாக இறப்பு சம்பவித்துள்ளது என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. இனிமேலாவது நாம் அந்தப் பொய்யைக் கைவிட வேண்டும்!

பாரதியார் மிகச் சிறப்பாகப் பாடுவார் என்கிறார்கள். அவரது குரலைப் பதிவுசெய்து வைக்காமல்போனது நமது துரதிர்ஷ்டம். சென்ற தலைமுறைக்கு பாரதியோடு இருந்த உணர்ச்சிபூர்வ உறவு இந்தத் தலைமுறைக்கு இல்லை. அடுத்த தலைமுறைக்கு பாரதியார் என்பது வெறும் பிம்பமாக மட்டும் போய்விடுவாரோ என நினைக்கும்போது கவலையாகத்தான் இருக்கிறது!

- சிறகடிக்கலாம்...

## இந்திய வானம் - 13
## எஸ்.ராமகிருஷ்ணன், ஓவியங்கள்: ரமேஷ் ஆச்சார்யா

கடந்த 25 ஆண்டுகளில் இந்தியாவின் பல்வேறு நகரங்களில், சிற்றூர்களில் திரைப்படம் பார்த்திருக்கிறேன். ஒவ்வொரு திரைப்பட அரங்கமும் ஒருவிதம். நிறைய தூண்கள்கொண்ட பெரிய அரங்கு, அரண்மனை போன்ற முகப்புகொண்ட அரங்கு, நீரூற்றுகளும் அகலமான படிக்கட்டுகளும்கொண்ட அரங்கு, உயர உயரமான இருக்கைகள்கொண்ட அரங்கு, ஆற்றின் கரையோரம் அமைக்கப்பட்ட டூரிங் டாக்கீஸ், நான்கு மாடிகள்கொண்ட திரையரங்கு, தீப்பெட்டி சைஸில் உள்ள அரங்கு... என பெரியதும் சிறியதுமான திரைப்பட அரங்குகள் என்னை வியக்கவைத்திருக்கின்றன.

மல்ட்டிபிளெக்ஸ் வருகையின் பின்பு இந்தியா முழுவதும் திரையரங்குகள் ஒன்றுபோலவே இருக்கின்றன. திரையரங்குக்கு என்றே இருந்த தனியான அழகு, இருக்கைகளின் அமைப்பு, படம் போடுவதற்கு முன்பு ஒலிக்கும் பாடல், இடைவேளையில் விற்கப்படும் நொறுக்குத்தீனிகள், குளிர்பானங்கள் யாவும் மாறிவிட்டன.

பெருநகரங்களில் ஒரே வளாகத்துக்குள் பத்து பன்னிரண்டு தியேட்டர்கள் உருவாகிவிட்ட பிறகு, சினிமா தியேட்டர் பற்றிய மனப்பிம்பம் முற்றிலும் மாறிவிட்டது. பல நேரங்களில் எந்த ஊரில், எந்த தியேட்டரில் நாம் படம் பார்த்துக்கொண்டிருக்கிறோம் என்பதே தெரியாமல் போய்விடுகிறது.

பல நகரங்களில் புகழ்பெற்ற தியேட்டர்கள் இடிக்கப்பட்டுவிட்டன. ஆனால், அந்த தியேட்டர்களின் பெயர்களை காலத்தால் அழிக்க முடியவில்லை. இன்றும் அந்த அடையாளத்தைத்தான் மக்கள் பயன்படுத்துகிறார்கள்.

இந்தியா முழுவதும் அரசாங்கத்தின் நிதி உதவியால் கட்டப்பட்ட பெரிய கலை அரங்குகள் உள்ளன. கொல்கத்தாவில் உள்ள 'நந்தன்', இதற்குச் சிறந்த உதாரணம். புத்ததேவ் பட்டாச்சார்யாவால் *1980*-ம் ஆண்டு அரங்கப்பணி ஆரம்பிக்கப்பட்டு, *1985*-ம் ஆண்டில் சத்யஜித் ரேவால் தொடங்கி வைக்கப்பட்டது. கேரள அரசின் திரைப்படக் கழகம் 'கைரளி' என்ற திரைப்பட வளாகத்தை திருவனந்தபுரம், கோழிக்கோடு உள்ளிட்ட முக்கிய நகரங்களில் நடத்துகிறது.



எனது பதின்வயதில் குற்றால சீஸனுக்குச் செல்லும்போது, பூங்காவை ஒட்டிய குன்றில் இருந்த அரசாங்க தியேட்டருக்குச் சென்று படம் பார்த்திருக்கிறேன். சீஸன் நேரங்களில் மட்டுமே அது செயல்பட்டது. வெறும் 30 காசுகள் கட்டணம். ஊட்டியிலும் அப்படி அரசாங்க தியேட்டர் ஒன்று இருந்தது. குற்றாலத்தில் இருந்த தியேட்டரில் காற்றோட்டமாக இரவுக் காட்சி பார்ப்பது மிகுந்த சந்தோஷம் தரக்கூடியது. ஆனால், இன்று அரசாங்கம் நடத்தும் சினிமா தியேட்டர் என ஒன்றுகூட தமிழ்நாட்டில் இல்லை.

ஒருமுறை மேற்குவங்கத்துக்குச் சென்றிருந்த போது கௌராவில் உள்ள ’நவபாரத்’ திரையரங்குக்கு இரவுக் காட்சி காணச் சென்றிருந்தேன். வங்காள மொழிப் படம் ஓடிக்கொண்டிருந்தது. என்ன படம் எனத் தெரியாமலேயே டிக்கெட் எடுத்து உள்ளே சென்றேன். படம் தொடங்கிய சில நிமிடங்களில் அது தமிழில் வெளியான ’காதல்’ திரைப்படத்தின் ரீமேக் எனத் தெரிந்தது. பார்வையாளர்கள் ஆரவாரமாக ரசித்துப் பார்த்தார்கள்.

யோசித்துப்பார்த்தால் வியப்பாக இருக்கிறது. 50 ஆண்டுகளுக்கு முன்பு வெளியான தமிழ் சினிமாவின் வெற்றிப் படங்களில் பெரும்பான்மையானவை வங்கமொழிப் படங்களின் மறு உருவாக்கமே. இதற்காக ஸ்டுடியோக்கள் தங்கள் பிரதிநிதி ஒருவரை கொல்கத்தாவில் வீடு பார்த்து, குடியிருக்க வைத்திருந்தன. ஒவ்வொரு வங்கப் படம் வெளியாகும்போதும் உடனே அதைப் பார்த்து உரிமை வாங்கி, தமிழில் மறு உருவாக்கம் செய்திருக்கிறார்கள். இன்று நிலைமை தலைகீழ். தமிழில் வெற்றிகரமாக ஓடும் திரைப்படங்களை வங்காளத்தில் மறுஉருவாக்கம் செய்ய போட்டிபோடுகின்றனர்.

முதன்முதலாக எந்தப் படத்தைப் பார்த்தோம், எந்தப் படத்தை காதலியோடு பார்த்தோம், திருமணத்துக்குப் பிறகு மனைவியுடன் பார்த்த முதல் படம் எது, எந்தப் படத்தை அதிகத் தடவைப் பார்த்திருக்கிறோம் என ஒவ்வொருவர் மனதிலும் ஒரு பட்டியல் இருக்கிறது. திருமணத்துக்குப் பிறகு புதுமணத் தம்பதிகள் திரைப்படம் பார்க்கச் செல்வது என்பது தமிழர் பண்பாட்டின் பகுதியாக உருமாறிவிட்டிருக்கிறது.

திரையரங்குகள் குறித்த நினைவு இல்லாத மனிதர்களே இல்லை. வரிசையில் காத்திருந்து, டிக்கெட் கிடைக்காமல் ஏமாந்துபோனது, குடும்பத்துடன் படம் பார்த்துவிட்டு வந்து அதைப் பற்றி வீட்டில் மணிக்கணக்கில் பேசிச் சிரிப்பது, தீபாவளி-பொங்கலுக்கு கூட்டம் அலைமோத முதல் காட்சி பார்த்தது, படத்தின் பாட்டுப் புத்தகம் வாங்கிவந்து பாடல்களை மனப்பாடம் செய்தது, ஒலிச்சித்திரம் எப்போது வரும் எனக் காத்திருந்து ரேடியோ கேட்டது, 'பேசும்படம்', 'பொம்மை' பத்திரிகைகள் வாங்கி சினிமா செய்திகளை ஆசைஆசையாகப் படித்தது போன்றவை இன்றும் பலருக்கு அழியாத நினைவுகள்.

ஒருமுறை 'படிக்காதமேதை' படத்தின் தயாரிப்பாளர் பாலா மூவிஸ் கிருஷ்ணசாமியை கே.கே. நகரில் சந்தித்தேன். இவர் தமிழ்நாட்டில் முதன்முறையாக திறந்தவெளி சினிமா தியேட்டரை உருவாக்கியவர். இன்றுள்ள பிரார்த்தனா திரையரங்கு போன்றதன் முன்னோடி முயற்சி அது. சென்னையை அடுத்த சோமங்கலம் என்ற கிராமத்தில் இவர் திறந்தவெளித் திரையரங்கை அமைத்தார்.

வயல்வெளியின் நடுவே மிகப் பெரிய களம் போன்ற இடம். அங்கே சிறிய மர பெஞ்சுகள். ஒரு பக்கம் பெரிய திரை. இவ்வளவே அரங்கின் அமைப்பு. மிகவும் குறைவான கட்டணம். மிகக் குறைந்த காலமே இந்த

அரங்கம் செயல்பட்டிருக்கிறது. பின்பு, அரங்குக்கான வரி அதிகமாக போடப்பட்டதன் காரணமாக, அரங்கம் முடக்கப்பட்டுவிட்டது.



என் சிறுவயதில் பீடி கம்பெனிகள் தங்களின் விளம்பரத்துக்காக இலவசமாக படங்களை திரையிடுவார்கள். மாலையில் பீடி கம்பெனி வேன் ஊருக்குள் வந்து விளம்பரம் செய்யும். பின்பு களத்தில் ஒரு திரை கட்டி எம்.ஜி.ஆர், சிவாஜி படங்களை திரையிடுவார்கள். 'எங்க ஊர் ராஜா' என்ற திரைப்படத்தை மட்டும் *100* முறை போட்டிருப்பார்கள். எத்தனை முறை திரையிட்டாலும் ஊரே திரண்டுவந்து படம் பார்த்து அழுது செல்லும். ஒருமுறை 'குப்பத்துராஜா' என்ற படம் போட்டபோது பாதியில் ரீல் அறுந்துபோய்விட்டது. சரிசெய்து முதலில் இருந்து படத்தை போட்டபோது காலை*7* மணி. அப்போதும் கூட்டம் கலையவில்லை.

கோயில் விழாக்களில் நடைபெற்றுவந்த நாடகங்கள், கலைநிகழ்ச்சிகளுக்கு மாற்றாக தினமும் சினிமா போடுகிற பழக்கம் *1980*-களில் உருவானது. *16* எம்.எம் புரொஜெக்டர் மூலம் ஒவ்வொரு கோயிலிலும் ஒரு நாளைக்கு மூன்று படங்கள் வீதம் திரையிடப்பட்டன. அதில் ஒருநாள் பக்திப் படம், ஒருநாள் எம்.ஜி.ஆர் படம், ஒருநாள் காமெடிப் படம் எனப் பிரித்திருப்பார்கள்.

சினிமா அரங்குகள் எத்தனை பசுமையாக மனதில் தங்கியிருக்கிறதோ, அதற்கு நிகராகவே தியேட்டர் ஆபரேட்டர்களும் அபூர்வமான மனிதர்களாக மனதில் பதிந்துபோயிருக்கிறார்கள். ஆபரேட்டர்களுடன் நெருங்கிப் பழகினால்தான் அடுத்து என்ன படம் வெளியாகிறது எனத் தெரிந்துகொள்ள முடியும்; கூட்ட நேரங்களில் டிக்கெட் வாங்க முடியும் என்பதற்காக, சினிமா தியேட்டர் ஆபரேட்டரைச் சுற்றி வரும் பையன்கள் நிறைய இருந்தார்கள். அதில் என் நண்பன் முத்துவும் ஒருவன். அவனுக்கு தெரியாத சினிமா தியேட்டர் ஆபரேட்டர்களே கிடையாது. வீடு வரை தெரிந்துவைத்திருப்பான். எல்லா ஊர்களிலும் தியேட்டர் ஆபரேட்டரின் மனைவி, பிள்ளைகள் சினிமா பார்க்க விருப்பமற்றவர்களாக இருப்பது பொது விதி போலும்.

முத்துவின் அப்பா கறிக்கடை வைத்திருப்பவர் என்பதால், ஞாயிறுதோறும் ரகசியமாக ஆட்டு ஈரலை இலையில் சுற்றி எடுத்துக்கொண்டு போய் ஆபரேட்டர் வீட்டில் கொடுத்துவருவான். தீபாவளி, பொங்கல் நாட்களில் ஆபரேட்டர் வீட்டுக்கே வர முடியாது என்பதால், அவருக்கான சாப்பாடு, பலகாரங்கள் அனைத்தையும் தியேட்டருக்குக் கொண்டுபோய்க் கொடுக்க வேண்டும். முத்து, அப்படித்தான் தியேட்டருக்குள் நுழைவான். சினிமா ஆபரேட்டர்கள் எந்தப் படத்தைப் பற்றியும் வெளிப்படையாகப் பேசிக்கொள்ள மாட்டார்கள். அரங்கம் நிரம்பி வழியும் நாட்களில்கூட, 'வசூல் நல்லா இருக்கு' என்ற ஒற்றை வார்த்தைதான் சொல்வார்கள்.

சினிமா தியேட்டர் ஆபரேட்டர்கள் இடம் மாறுவது இல்லை. அரிதாக ஆழ்வார் என்ற ஆபரேட்டர், ஒரு தியேட்டரைவிட்டு வேறு தியேட்டர் மாறியதை மக்கள் ஏற்றுக்கொள்ள வில்லை. படத்தின் ரீல் எங்காவது அறுபடும் போது 'ஆழ்வாரு... ஒழுங்கா வேலையைப் பாருடா' எனக் கத்துவார்கள்.

முத்து, சினிமா தியேட்டர் ஆபரேட்டர்கள் மட்டுமின்றி, மேனேஜர், டிக்கெட் கொடுப்பவர், முறுக்கு விற்பவர், சைக்கிள் ஸ்டேண்ட் ஆசாமி வரை பழகிவைத்திருந்தான். அதனால், எந்தப் படத்தையும் முதல் நாளே எளிதாக அவனால் பார்த்துவிட முடிந்தது.

தியேட்டரில் முக்கியமான பிரமுகர்களுக்கு என பாஸ் வழங்குவார்கள். அந்த பாஸ், எல்லோருக்கும் எல்லா நாளும் கிடைத்துவிடாது. அப்படி பாஸ் கொடுப்பதற்கான உரிமை மேனேஜருக்கு மட்டுமே உண்டு. பாஸை சீல் போட்டுக் கொடுப்பதற்கு டிக்கெட் கொடுப்பவரைத்தான் அழைப்பார்கள். சில வேளை ஓசி பாஸ் முத்துவுக்குக் கிடைத்துவிடும். அதைப் பொறுப்பாக தனது அய்யாவிடம் தந்து அவரையும் அம்மாவையும் சினிமா பார்க்க அழைத்துப் போவான். பால்யத்தின் பெரும்பான்மை நினைவுகள் கறுப்பு-வெள்ளையாக எஞ்சியிருக்கின்றன. ஆனால் வண்ணப்படங்களாக இருப்பது, சினிமா பார்த்த நினைவுகள் மட்டுமே.

'டு ஈச் ஹிஸ் ஓன் சினிமா' *(To Each His Own Cinema)* என்ற திரைப்படத் தொகுப்பு, சினிமா தியேட்டர்களையும் சினிமா பார்க்கும் அனுபவத்தையும் கொண்டாடும்விதமாக உருவாக்கப்பட்டது. *34* குறும்படங்களின் தொகுப்பு, ஒவ்வொன்றும் மூன்று நிமிடங்கள், கேன்ஸ்

திரைப்பட விழாவின் 60-வது ஆண்டு விழாவைச் சிறப்பிக்கும்வண்ணம் உலகின் மிகச்சிறந்த இயக்குநர்கள் இணைந்து இந்தக் குறும்படத் தொகுப்பை உருவாக்கி இருக்கிறார்கள்.

இதில் சீன இயக்குநர் ஷாங் இமு இயக்கிய 'மூவி நைட்' என்ற குறும்படம் அற்புதமானது. மலைக் கிராமம் ஒன்றில் சினிமா போடுவதற்காக ஒரு குழு வருகிறார்கள். திறந்தவெளியில் திரை கட்டி, ஸ்பீக்கர் அமைத்து, படம் போட ஆயத்தப் பணிகள் நடக்கின்றன. ஓட்டைப்பல் சிறுவன் ஒருவன் தனது நண்பர்களுடன் சேர்ந்து சினிமா பார்க்கப்போகும் சந்தோஷத்தில் கத்துகிறான்; ஆடுகிறான்; திரை கட்டுவதை நெருங்கி வேடிக்கை பார்க்கிறான்.

எங்கே அமர்ந்து படம் பார்க்கவேண்டும் என பெஞ்சு கொண்டுவந்து போட்டு இடம் பிடிக்கிறான். சூரியன் மறைந்து இரவு வந்த பிறகு சினிமா போடுவார்கள் என்பதால், சிறுவர்கள் ஆசையாக இரவு வரக் காத்திருக்கிறார்கள். திரை அமைப்பு சரியாக உள்ளதா எனப் பரிசோதனை செய்யப்படுகிறது.

அப்போது சிறுவர்கள் திரையை நோக்கிப் பாயும் ஒளிக்கற்றையின் ஊடே கைவிரல்களைக் காட்டி நிழல் உருவங்களை திரையில் ஆட வைக்கிறார்கள். ஓட்டைப்பல் சிறுவன் ஒரு கோழியை ஒளிக்கற்றையின் ஊடே தூக்கி வீசுகிறான். திரையில் அதன் நிழல் தெரியும்போது மக்கள் கைதட்டிச் சிரிக்கிறார்கள். முடிவில் திரைப்படம் தொடங்குகிறது. இவ்வளவு நேரம் ஆசையாகக் காத்திருந்த சிறுவன் படம் தொடங்கிய அடுத்த நிமிடம் உறங்கிப்போய்விடுகிறான்.

இந்தக் குறும்படத்தைக் காணும்போது எங்கோ ஒரு சீனச் சிறுவனுக்கு நடந்த விஷயங்கள் யாவும் எனக்கும் நடந்திருக்கின்றன என்பது வியப்பாக இருந்தது. உலகம் முழுவதும் சினிமா பார்க்கும்போது மனிதர்கள் ஒன்றுபோலவே நடந்துகொள்கிறார்கள். இனம், மொழி, தேசம் கடந்து சினிமா, பார்வையாளர்களை ஒன்றிணைப்பதைத் துல்லியமாக உணர முடிகிறது.

இயக்குநர் மிருணாள் சென் சினிமா பற்றிய உரையொன்றில் சில முக்கிய விஷயங்களை சுட்டிக்காட்டுகிறார்.

நாங்கல்லாம்
தீப்பெட்டியில
படம் ஓட்டுனவய்ங்க !



சந்தைதான் இன்று சினிமாவை முடிவு செய்கிறது. உலகம் முழுவதும் சந்தைப்படுத்தப்படுகின்ற படங்களை மட்டுமே ஹாலிவுட் தயாரிக்கிறது. இதன் காரணமாக அறிவியல் புனைகதைகளைக்கொண்ட படங்கள், ஆக்‌ஷன் படங்கள், பிரமாண்டமான ஃபேன்டசி படங்கள் பெரும் பொருட்செலவில் உருவாக்கப்படுகின்றன. யதார்த்தமான வாழ்க்கையைக் கூறும் படங்களை உலக அளவில் சந்தைப்படுத்த முடியவில்லை. காரணம், அது பண்பாட்டுக் கூறுகளைக் கொண்டிருக்கிறது. இதன் காரணமாகவே பாப்புலர் சினிமா புகழ்பெற்று விளங்குகிறது.

சினிமாவுக்குள் பிரசாரம் இருக்கிறது; அரசியல் இருக்கிறது; கலை நுட்பங்கள் இருக்கின்றன; பண்பாட்டுச் சிக்கலை சினிமா பேசுகிறது; மத ஒற்றுமையை, சகிப்புத்தன்மையை வலியுறுத்துகிறது. பார்வையாளர்களை சந்தோஷப்படுத்துவதற்காக கீழ்த்தரமான விஷயங்களை சினிமாவில் காட்சிப்படுத்துவது ஏற்றுக்கொள்ளக் கூடியது அல்ல. பார்வையாளர்கள் சினிமாவின் வழியே சிந்திக்கவும் விழிப்பு உணர்வுகொள்ளவும் வேண்டும்.

இன்று யதார்த்தமாக ஒரு படம் எடுக்கப்பட்டால், 'ஏன் டாக்குமென்டரி போல எடுத்திருக்கிறீர்கள்?' எனக் கேட்கிறார்கள். அந்த அளவு பாப்புலர் சினிமா யதார்த்தத்தை விலக்கி வைத்திருக்கிறது. யதார்த்தமான கலைப்படைப்புகள்தான் சினிமாவை அடுத்த நிலைக்குக் கொண்டுபோகின்றன. வணிகம், சினிமாவைப் பயன்படுத்த மட்டுமே செய்கிறது. ஆகவே அது தொழில்நுட்பத்தை மட்டுமே சாதனையாகப் பேசுகிறது. சினிமா, நம் காலத்தின் வலிமையான ஊடகம். அதை எப்படிக் கையாள்வது என்பதுதான் இயக்குநரின் முதன்மையான சவால்.

மிருணாள் சென் சொன்னது நிஜம். சினிமா பார்ப்பது வெறும் பொழுதுபோக்காக இருக்கலாம். ஆனால், அதைப் புரிந்துகொள்வது ஒரு கலை. அதற்கு நாம் சினிமா ரசனையை வளர்த்துக்கொள்ள வேண்டும். சினிமாவை ஒரு பாடமாக கல்விப்புலங்களில் கற்பிக்க வேண்டும். எது நல்ல சினிமா என்பதைப் பற்றிய மதிப்பீடு சாமானிய மனிதனுக்கு ஏற்பட வேண்டும். அப்போதுதான் சினிமா அடுத்த நிலையை நோக்கி உயரும்!

- சிறகடிக்கலாம்...

## இந்திய வானம் - 14
## எஸ்.ராமகிருஷ்ணன், ஓவியங்கள்: ரமேஷ் ஆச்சார்யா

### பொய்யின் அலங்காரம்

ஆக்ராவில் உள்ள பேரரசர் அக்பரின் சமாதிக்குச் சென்றிருந்தேன். 'அக்பர் தனக்குத் தானே இந்த இடத்தைத் தேர்வுசெய்து, தனக்கான சமாதியைக் கட்டத் தொடங்கினார்' என்கிறார்கள். அவரது மறைவுக்குப் பிறகு எட்டு ஆண்டுகள் கழித்து, ஷஹாங்கீரால் 1613ம் ஆண்டு அந்தச் சமாதி கட்டி முடிக்கப்பட்டது. கம்பீரமான நுழைவாயில். எங்கும் சித்திர வேலைப்பாடுகள்கொண்ட அழகான பளிங்குக்கற்கள். உள்ளே அக்பரின் உடல் புதைக்கப்பட்டிருக்கிறது.

அங்கே நின்றபோது எனக்குத் தோன்றியது... அக்பர் தன் வாழ்நாளில் எவ்வளவு புகழுரைகளை, பாராட்டுகளைக் கேட்டிருப்பார். அவை வெறும் அலங்கரிக்கப்பட்ட பொய்கள் என அறிந்திருப்பாரா?

இன்று அந்த நினைவிடத்தில், அக்பர் என்பது ஒரு பெயர் மட்டுமே. யாரும் அவரது புகழைப் பாடவில்லை. அவரது உருவம் எப்படி இருக்கும் என்றுகூட யாருக்கும் தெரியாது. மாமன்னரே ஆனாலும் உண்மை இதுதான் என, காலம் உணரச் செய்திருக்கிறது. அந்தக் கட்டடத்தின் உள்ளே வரலாறு குரல்கொடுத்துக்கொண்டே இருக்கிறது. அது எத்தனை பேரின் செவிகளுக்குக் கேட்டிருக்கும் எனத் தெரியவில்லை. நான் அந்தக் குரலைக் கேட்டேன்.

'அதிகாரம் கைமாறும்; ஆட்சி மாறும்; பணமும் செல்வமும் வந்து போகும். ஆனால், நிலையான அறம், நீதி, உண்மை ஆகியவை மட்டுமே நிலைத்து நிற்கும்' என வரலாற்றின் குரல் சொன்னது.

சுற்றுலாப் பயணிகள், புல்வெளியில் ஓடும் மான்களையும் அலங்கார வேலைப்பாடுகளையும் புகைப்படங்கள் எடுத்துக்கொள்வதிலேயே ஆர்வம் காட்டினார்கள். வரலாறு என்பது அவர்களுக்கு வெறும் சொல் மட்டுமே. ஆனால், காலம் அந்தக் குரலின் வழியே நம்மை எச்சரிக்கிறது என்பதே நிஜம்.



நம் காலம் அலங்கரிக்கப்பட்ட பொய்களால் ஆனது. இங்கே உண்மை என்பது, பல்லியின் துண்டிக்கப்பட்ட வால்போல தனியே துடித்துக் கொண்டிருக்கிறது. அதைப் பற்றிய கவலை இல்லாமல், சமூகம் தன்போக்கில் போய்க்கொண்டே இருக்கிறது.

விதவிதமான வடிவங்களில், விதங்களில் பொய்யை நாம் அலங்கரித்து உலவவிட்டுக் கொண்டிருக்கிறோம். மிகச் சிறந்த அலங்காரத்துக்கு மிகப் பெரும் வெகுமதி கிடைக்கிறது. பொய்களை அலங்கரிப்பதைத் தொழிலாக மாற்றிவிட்டார்கள். அழகான சொற்களைக்கொண்டும், கவர்ச்சியான பிம்பங்களைக்கொண்டும், தேன் தடவிய இனிமையான குரலால் பொய்கள் சொல்லப் படுகின்றன. அவற்றைக் கேள்வியே இல்லாமல் நாம் ஏற்றுக்கொள்கிறோம்; பரப்பத் தொடங்குகிறோம்.

நம் காலத்தின் மகத்தான வணிகப் பொருள், பொய். அதைக்கொண்டு எதையும் செய்ய முடியும் என இன்றைய உலகம் நிரூபித்திருக்கிறது. 'சத்யமேவ ஜெயதே' அதாவது 'வாய்மையே வெல்லும்' என இந்தியாவின் தேசியச் சின்னத்தில் பொறிக்கப் பட்டுள்ளது. இது முண்டக உபநிடதத்தின் புகழ்பெற்ற வாக்கியமும்கூட. சாரநாத்தில் உள்ள அசோகத் தூணை அடிப்படையாகக்கொண்டு இந்திய தேசியச் சின்னம் வடிவமைக்கப்பட்டது.

புத்தனின் முதல் சொற்பொழிவின் நினைவாக பேரரசர் அசோகர் இந்தத் தூணை உருவாக்கினார். நமது தேசியச் சின்னத்தை வடிவமைத்தவர் மாதவ் சாஹ்னி. அதில் நான்கு சிங்கங்களில், மூன்று மட்டுமே தெரியுமாறு இதை வடிவமைத்துள்ளார். நான்காவது சிங்கம் பார்வையில் இருந்து மறைக்கப்பட்டுள்ளது. ஒருவேளை அந்தச் சிங்கம்தான் வாய்மையின் அடையாளமா?

ஒவ்வொரு நாளும் தொலைக்காட்சியில் நடைபெறும் அரசியல், சமூக விவாத நிகழ்ச்சிகளைக் காணும்போது அதிர்ச்சியாக இருக்கிறது. காரணம், சிலர் வேண்டும் என்றே உண்மையைத் திரித்து அப்பட்டமாகப் பொய் பேசுவதும், பொய்யான வரலாற்றுத் தகவல்களைக் கூச்சமே இல்லாமல் சொல்வதும், அர்த்தம் இல்லாமல் எதை எதையோ ஒப்பிட்டுப் பேசி, எதிர்க்கருத்து உடையவரை இழிவுபடுத்துவதையும் பார்க்கும்போது, இதுதான் அறிவார்ந்த விவாதமா எனக் குழப்பமாக இருக்கிறது.

ஊடகங்களில் உண்மையை எடுத்துச்சொல்ல முற்படும் ஒருசில விவாத அறிஞர்கள் எந்தப் பகட்டும் இல்லாமல் எளிமையாக, நேரடியாக, ஒன்றை விளக்கும்போது அது நேயர்களுக்குப் பலவீனமானதுபோல தோற்றம் தருகிறது. அலங்காரம் இல்லாத எதை நாம் அங்கீகரித் திருக்கிறோம்... உண்மையை ஏற்றுக்கொள்ள?

பபாக் அன்வாரி இயக்கிய 'இரண்டும் இரண்டும் ஐந்து' என்ற ஈரானியக் குறும்படத்தை இணையத்தில் பார்த்தேன். ஏழு நிமிடங்கள் ஓடக்கூடிய அந்தப் படம் என்னை உலுக்கிவிட்டது.

அரசின் கட்டுப்பாட்டில் உள்ள கறாரான பள்ளி ஒன்றின் வகுப்பறைக்கு, கணித ஆசிரியர் வருகிறார். கரும்பலகையில் 'இரண்டும் இரண்டும் ஐந்து' என எழுதிப்போட்டு 'இரண்டையும் இரண்டையும் கூட்டினால், ஐந்து வரும்' என்கிறார். இதைக் கேட்டு மாணவர்கள் குழம்புகிறார்கள். ஒருவன் எழுந்து, 'இரண்டையும் இரண்டையும் கூட்டினால் நான்குதானே வரும்... எப்படி ஐந்து?' எனக் கேட்கிறான்.

'அது அப்படித்தான். இரண்டையும் இரண்டையும் கூட்டினால் ஐந்துதான்' என ஆசிரியர் உறுதியான குரலில் சொல்கிறார்.

’ஆசிரியர் தவறாகச் சொல்வதை எப்படி ஏற்பது?’ எனப் புரியாமல் மாணவர்கள் தடுமாறுகிறார்கள். ஆசிரியர், கடுமையான முகத்துடன் வகுப்பில் இருந்த மற்ற மாணவர்களைப் பார்த்து, ’அது சரிதானா?’ எனக் கேட்கிறார். பலரும் குழப்பத்துடன் ’ஆமாம்’ எனத் தலையசைக்கிறார்கள்.




ஒரு மாணவன் மட்டும் விடாப்பிடியாக அது தவறு. ’விடை நான்குதான்’ என்கிறான். ஆசிரியர் ஆத்திரம் அடைகிறார். வகுப்பறையைவிட்டு வேகமாக வெளியேறுகிறார். மற்ற மாணவர்கள், ஆசிரியர் தங்களைக் கடுமையாகத் தண்டிக்கப் போகிறார் என நினைத்துப் பயப்படுகிறார்கள். ஆனால், ஆசிரியர் அந்தப் பள்ளியில் முதல் மதிப்பெண் பெறும் அறிவாளி மாணவர்கள் மூவரை அழைத்துவந்து, ’இரண்டையும் இரண்டையும் கூட்டினால் எத்தனை?’ எனக் கேட்கிறார். அவர்கள் ’ஐந்து’ என்கிறார்கள்.

இப்போது ஆசிரியர் ’நான்கு’ எனச் சொன்ன மாணவனை எழுந்து வரச்சொல்லி, கரும்பலகையில் அந்தக் கணக்கைப் போடும்படி சொல்கிறார். அவன் இப்போதும் ’இரண்டும் இரண்டும் நான்கு’ என்றே எழுதுகிறான். அறிவாளி மாணவர்களின் கைகள், அந்தப் பையனை நோக்கி துப்பாக்கிபோல உருமாறுகின்றன. அவன் சுடப்படுகிறான். கரும்பலகையில் ரத்தம் தெறிக்கிறது. முடிவில் ’இரண்டும் இரண்டும் சேர்ந்தால் ஐந்து’ என எழுதிக்கொள்ளும்படி ஆசிரியர் கட்டளையிடுகிறார். மாணவர்கள் அப்படியே

எழுதுகிறார்கள். ஆனால், ஒரு மாணவன் மட்டும் 'நான்கு' என எழுதுவதோடு படம் நிறைவுபெறுகிறது.

இந்தப் படம், கல்விமுறையை மட்டும் விமர்சிக்கவில்லை. மாறாக ஓர் உண்மையை நாம் எப்படி எதிர்கொள்கிறோம், ஒரு விஷயம் பொய் எனத் தெரிந்தும் ஏன் ஏற்றுக்கொள்கிறோம், அறிவாளிகள் எதற்காக ஒரு பொய்யை, உண்மை என நம்பவைக்கிறார்கள், உண்மையை வெளிப்படுத்தும் ஒருவன் ஏன் கொல்லப்படுகிறான், 'இரண்டும் இரண்டும் ஐந்து' என ஏன் அதிகாரம் நம்பவைக்க முயற்சிக்கிறது? - இப்படி பல கேள்விகள் கிளைவிட்டுக்கொண்டேபோகின்றன.

நாம் வீழ்ச்சியின் காலத்தில் வாழ்ந்துகொண்டி ருக்கிறோம். தனிமனித அறமும் சமூக அறமும் வீழ்ச்சியடைந்து, பொய்யும் புரட்டும் சூதும் வாதும் தங்களை அலங்கரித்து, கம்பீரமாக உலாவரத் தொடங்கிவிட்டன. காலம்காலமாகப் பின்பற்றப்பட்டு வந்த எளிய அறங்கள்கூட இன்று கேலிசெய்யப்படுகின்றன; மறுக்கப்படுகின்றன. இறந்துபோனவர்கள்கூட அவமானத்தில் இருந்து தப்ப முடிவது இல்லை.

'இரண்டும் இரண்டும் சேர்ந்தால் ஐந்து' என்கிற கருத்துருவாக்கம், ஊடகங்கள் மீதான விமர்சனமாக முன்வைக்கப்படுகிறது.

எழுத்தாளர் ஜார்ஜ் ஆர்வல் எழுதிய '1984' என்ற நாவலில் அரசு அதிகாரத்தைக் குறிக்கும்விதமாக இதைக் கேலியாக எழுதியிருக்கிறார்.

1813-ம் ஆண்டில் கவிஞர் பைரன் தனது காதலி ஆனபெலாவுக்கு எழுதிய கடிதத்தில், 'இரண்டும் இரண்டும் நான்கு' என்பது எனக்கு நன்றாகப் புரிகிறது. ஆனால், ஏதோ ஒருவிதத்தில் அது ஐந்தாக உருமாறினால், நான் மிகுந்த மகிழ்ச்சி அடைவேன்' எனக் குறிப்பிடுகிறார். அவரே 'இரண்டும் இரண்டும் சேர்ந்தால் ஐந்து' என்ற கருத்தை முதலில் முன்வைத்தவர் என்கிறார்கள்!

முந்தைய காலங்களில் ஒரு பொய் பரவும் சுற்றளவு மிகக் குறுகியது. ஆனால், தொழில்நுட்பமும் ஊடகங்களும் வளர்ச்சியடைந்துள்ள இன்றைய உலகில், ஒரு பொய்யை உலகம் முழுவதும் பரப்ப இரண்டு நிமிடங்கள் போதுமானது. கண்ணுக்குத் தெரியாத வலிமையான ஆயுதமாக

## உருவெடுத்திருக்கிறது பொய்!

என்.ஜி.ஓ ஒன்றில் தன்னார்வப் பணியாளராகச் செயல்படும் ஓர் இளம் மருத்துவரிடம் பேசிக்கொண்டிருக்கும்போது அவர் சொன்னார்... 'பொய், எவ்வளவு அபாயகரமானது என்பதை என்னைப் போன்ற மருத்துவர்கள் நன்றாக உணர்வோம். ஆனால், இன்றைய சூழலில் மருத்துவர்கள் நோயாளிகளிடம் பொய் சொல்ல நிர்பந்திக்கப்படுகிறார்கள். அது மிக மோசமானது. என் பணிக்காலத்தில் அன்றாடம் இந்த நெருக்கடியை எதிர்கொண்டேன். 'பணத்துக்காக இத்தனை பொய்களா?' என அருவருப்பாக இருந்தது.

ஒருமுறை எங்கள் மருத்துவமனைக்கு, ஒரு பெண் தனது கைக்குழந்தையுடன் வந்திருந்தார். குழந்தைக்கு சிறுநீரகத்தில் பிரச்னை. அதற்கு மருந்து கொடுத்து 'பத்து நாட்கள் பரிசோதனை செய்த பிறகு, தேவைப்பட்டால் அறுவைசிகிச்சை செய்யலாம்' என நான் பரிந்துரை எழுதியிருந்தேன்.

எனது சீஃப் டாக்டர் அதை மறுத்து, 'உடனே பெட்டில் சேர்க்கச்சொல்லி நாளையே ஆபரேஷன்செய்துவிடுங்கள். இல்லாவிட்டால் அவர்கள் வேறு மருத்துவமனைக்குப் போய்விடுவார்கள்' என்றதோடு என்னை அனுப்பி அந்தக் குழந்தையின் தாயிடம், 40 ஆயிரம் ரூபாய் அறுவைசிகிச்சைக்குப் பணம் கட்டும்படி சொல்லச் சொன்னார். கட்டாயத்தின் பேரில் அதைச் சொல்வதற்காகச் சென்றேன். வொயர் கூடை ஒன்றுடன் நின்றிருந்த அவரது ஏழ்மைநிலையைப் பார்த்தபோது, அறுவைசிகிச்சை பற்றி சொல்ல எனக்கு நாக்கு எழவில்லை. ஆனால், தனியார் மருத்துவமனையில் பணியாற்றுகிறேன். சீஃப் டாக்டரின் வார்த்தையை மறுக்க முடியாது என்பதால் தயக்கத்துடன் சொன்னேன். அந்தப் பெண் கண்கலங்கியபடியே 'என்னிடம் அவ்வளவு பணம் இல்லை. ஒரு வாரம் அவகாசம் வேண்டும்' எனக் கைகூப்பினார். நான் பதில் சொல்லாமல் வெளியேறி வந்துவிட்டேன். அந்தப் பெண்ணை சீஃப் டாக்டர் வரவழைத்துப் பேசி, அடுத்த நாளே பணம் கட்டவைத்தார். அவர் எப்படியோ கடன் வாங்கிக்கொண்டுவந்து பணம் கட்டினார். அந்த அறுவைசிகிச்சையின்போது முதன்முறையாக எனக்குக் கைகள் நடுங்கின. அன்று இரவு முழுவதும் என்னால் தூங்க முடியவில்லை. என்னோடு வேலைசெய்யும் இன்னொரு மருத்துவரோடு இதைப் பற்றி மனம்விட்டுப் பேசினேன். அவர் சொன்னார்...

’யாருக்குத்தான் கஷ்டம் இல்ல. நாம நோயை மட்டும்தான் கவனிக்கணும். நோயாளிகள் மிடில் கிளாஸா... லோயர் கிளாஸா... அவங்க எப்படிக் கடன் வாங்குறாங்க, கஷ்டப்படுறாங்கனு யோசிக்கக் கூடாது’ என்றார்.




’பணத்துக்காக பச்சைப்பொய் சொல்கிறோமே... இது தவறு இல்லையா?’ எனக் கேட்டேன்.

’சும்மா ஒண்ணும் வாங்கலையே. ஆபரேஷன் பண்ணியிருக்கோம்ல... மனசாட்சிங்கிறது யாரோ ஒரு முட்டாளின் கண்டுபிடிப்பு. பழைய செருப்பைத் தூக்கி வீசுற மாதிரி, அதை எப்பவோ தூக்கி வீசிட்டேன். நீ இன்னும் அதை வெச்சுக்கிட்டுப் புலம்பிக்கிட்டு இருக்கே.’

’பொய் சொல்றது தப்பு. அப்படித்தான் எங்க வீட்டுல சொல்லிக்குடுத்திருக்காங்க... ஆசிரியர்கூட ஸ்கூல்ல சொல்லித்தந்திருக்கார்’ என உறுதியாகச் சொன்னேன்.

’பிரச்னையே அங்கதான் ஆரம்பிக்குது. வீடு, ஸ்கூல் எங்கேயாவது பொய் இல்லாமல் இருக்கா? பொய் சொல்லாமல் இருக்கிறதுங்கிறது ஒரு ஐடியல். அப்படி யாராலும் இருக்க முடியாது. குறைவா பொய் சொல்றவன், நிறையப் பொய் சொல்றவன்னு ரெண்டு விதங்கள்தான் இருக்கு. பொய்யைப் பயன்படுத்தத் தெரிஞ்சவன் புத்திசாலி; பிழைக்கிறதுக்கு அதுதான் ஒரே வழி’ என்றார் அந்த நண்பர்.

என்னால் அவர் சொல்வதுபோல வாழ முடியாது என அந்த மருத்துவமனையில் இருந்து ரிசைன் பண்ணிவிட்டு, இப்படி ஒரு என்.ஜி.ஓ-வுல வேலைபார்க்கிறேன். குறைவான வருமானம்தான்; ஆனா, நிறைய மனநிம்மதி. பொய் சொல்லி நிறையப் பணம் சேர்த்து வாழுறது எனக்குப் பிடிக்கலை. அப்படி வசதியா நான் வாழ வேண்டியதும் இல்லை...’

அந்த இளம் மருத்துவர் இதை என்னிடம் சொன்னபோது எனக்கு நெகிழ்ந்துபோனது. இப்படி சிலர் மனதில் இன்னமும் உண்மை ஆழமாக வேரூன்றி இருப்பது சந்தோஷமாக இருந்தது.

அவரிடம் நான் சொன்னேன்...

’உங்களைத்தான் இந்த உலகம் அதிகம் கேலி செய்யும்; அவமானப்படுத்தும்; முடிந்தால், ஒடுக்கி ஓரம்கட்டப்பார்க்கும். அதைக் கண்டுகொள்ளா தீர்கள். உண்மையின் பக்கம் நிற்பது என்பது ஒரு சவால். ஒவ்வொரு முறையும் அதை எதிர்கொண்டு தான் ஜெயிக்க வேண்டும்.’

அதைக் கேட்டு அவர் சொன்னார்...

’யாரோ என்னை ஏமாற்றும்போது எனக்கு ஏற்படும் கோபமும் ஆத்திரமும்தானே மற்றவர்களுக்கும் ஏற்படும். எனக்கு நானே உண்மையாக இல்லாமல் எப்படி வாழ்வது?’

இந்த எண்ணம் ஒருவருக்கு உருவாகிவிட்டால் போதும். அவரால் பொய் சொல்லி, ஏமாற்றிப் பிழைக்க முடியாது எனத் தோன்றியது.

நோபல் பரிசுபெற்ற கவிஞர் பாப்லோ நெருடா, தனது உரை ஒன்றில் உண்மைக்கும் அரசியலுக்கும் கலைக்குமான தொடர்பு குறித்துப் பேசுகிறார்...

’இன்று எது உண்மை, எது பொய் எனப் பிரித்து அடையாளம் கண்டுபிடிக்க முடிவது இல்லை. பல நேரம் ஒன்றே உண்மையாகவும் பொய்யாகவும் இருக்கிறது. ஒரு குடிமகனாக எனது தேசத்தில் நடைபெறும் நிகழ்வுகளைக் கண்டு எது உண்மை, எது பொய் என்ற கேள்வியைக் கேட்க விரும்புகிறேன். பெரும்பான்மை அரசியல்வாதிகள் உண்மையை விரும்புவது இல்லை. அவர்கள் அதிகாரத்தைக் கைப்பற்ற அல்லது காப்பாற்றிக்கொள்ள பொய்யைப் பயன்படுத்துகிறார்கள்; மக்கள் எப்போதுமே அறியாமையில் இருக்க வேண்டும் என விரும்புகிறார்கள். அறியாமை நிலைக்கும் வரைதான் அதிகாரம் நிலைக்கும். தங்கள் சொந்த வாழ்க்கையைப் பற்றிக்கூட அறிந்துகொள்ளாத அறியாமையில்தான் பொதுமக்கள் மூழ்கிக்கிடக்கிறார்கள். எது உண்மை எனப் பகிரங்கமாகத் தெரிந்தபோதும் அதை யாரும் கண்டுகொள்வதே இல்லை. நமக்கு என ஒரு தார்மீகப் பொறுப்புஉணர்ச்சி இருப்பதாக நாம் நம்பிக்கொண்டிருக்கிறோம் இல்லையா... அது இன்று என்ன ஆனது. உண்மையில் தார்மீகப் பொறுப்புஉணர்ச்சி என்பதுதான் என்ன, அப்படி ஒன்று இன்றும் நம்மிடம் இருக்கிறதா, மனசாட்சி என்ற ஒன்றே இன்று இல்லையா... இல்லை அதுதான் இறந்துபோய்விட்டதா?

கலை எப்போதும் உண்மையின் பக்கமே நிற்கிறது. அது உண்மையின் குரலை ஒலிக்கிறது. அதனால்தான் கலைஞர்களின் குரலை அதிகாரத்துக்குப் பிடிப்பதில்லை. அது எதிர்ப்புக் குரலாக ஒலிக்கிறது' என்கிறார் நெரூடா.

உலகம் எங்கும் உண்மையை உரத்துச் சொன்னதற்காக பத்திரிகையாளர்கள், கார்ட்டூனிஸ்ட்கள், கவிஞர்கள், எழுத்தாளர்கள், சமூகப் போராளிகள்... எனப் பலர் அநியாயமாகக் கொல்லப்பட்டிருக்கிறார்கள். ஆனாலும், எந்த அதிகாரத்தாலும் உண்மையின் குரல்வளையை ஒடுக்கவே முடியாது. உண்மை வென்றே தீரும். இதுதான் அன்றும் இன்றும் வரலாறு காட்டும் உண்மை. இந்த வரலாற்று உண்மையைத் தொட்டுச் சொல்கிறது என்பதே 'இரண்டும் இரண்டும் ஐந்து' குறும்படத்தின் சிறப்பு. அந்த வகையில் இதுவும் ஒரு சிறந்த அரசியல் படமே!

- சிறகடிக்கலாம்...

## இந்திய வானம் - 15
## எஸ்.ராமகிருஷ்ணன், ஓவியங்கள்: ரமேஷ் ஆச்சார்யா

### கல்யாணக் கோபம்

ராஜஸ்தானியத் திருமணம் ஒன்றுக்குச் சென்றிருந்தேன். மணமகன், தெரிந்தவர்; மணமகள், ராஜஸ்தானிப் பெண். ஃபேஸ்புக் வழியாக உருவான காதல். இப்படி ஒரு திருமணம் ஏற்பாடு ஆனது, இரண்டு வீட்டாருக்கும் வியப்பாக இருந்தது.

பெண் வீட்டில் இருந்து, திருமணத்தை தங்களின் பாரம்பர்ய முறையில் நடத்த வேண்டும் என்ற வேண்டுகோளை மட்டும் முன்வைத்தார்கள். ஆகவே, ஜெய்ப்பூரில் திருமணம் நடைபெற்றது. கோலாகலமான விழாவாக நடைபெற்ற திருமணத்தில் ஒரு நாட்டுப்புறப் பாடல் பாடப்பட்டது. 'அந்தப் பாடலுக்கு என்ன அர்த்தம்?' எனக் கேட்டேன்...

கல்யாணப் பெண் திருமணத்துக்கு
முன்னர் விடும் கண்ணீர் வேறு
திருமணத்துக்குப் பிறகு சிந்தும் கண்ணீர் வேறு.
கணவன் வீட்டில் மகள் விடும் கண்ணீரின் சத்தம்
எவ்வளவு தூரத்தில் இருந்தாலும்
பெற்றோருக்குக் கேட்டுவிடும்.
ஆனால் அருகில் இருக்கும் கணவனின்
காதுகளுக்குத்தான் கேட்காது.

- இப்படி அந்தப் பாடல் நீண்டுபோய்க்கொண்டிருந்தது. ஆண்டாண்டு காலமாக வாழ்ந்து பெற்ற அனுபவம் பாடலாக உருப்பெற்று இருக்கிறது. எவ்வளவு படித்திருந்தாலும், எத்தனை வசதி இருந்தாலும் திருமண பந்தம் என்பது ஆணுக்கும் பெண்ணுக்கும் சரியாக அமைந்துவிடுவது அரிய விஷயமே! ஆகவேதான் இன்றும் திருமணத்தில் இந்தப் பாடல் பாடப்படுகிறது.

தொழிலில் வெற்றியாளராக உயர்ந்த எத்தனையோ பேர், சொந்த வாழ்வில் மகள் அல்லது மகனின் திருமணம் சரியாக அமையாமல்போய், தோற்றுப்போன மனிதர்களாக, துயரத்துடன் வாழ்ந்துவருவதை அறிவேன்.

ஆன்டன் செகாவின் சிறுகதை ஒன்றில் புதிதாகத் திருமணம் செய்துகொண்ட ஒருவன், தனது பால்யகால நண்பனை ரயிலில் தற்செயலாகச் சந்திக்கிறான். இருவரும் கட்டித் தழுவிக்கொள்கிறார்கள். ’படித்த பெண்ணைத்தான் திருமணம் செய்துள்ளேன். என் வாழ்க்கையே மாறிவிட்டது. மிகவும் சந்தோஷமாக இருக்கிறேன். திருமணம், இத்தனை சந்தோஷங்களையும் உறவுகளையும் ஏற்படுத்திவிடும் என நான் எண்ணியதே இல்லை’ என தன் கல்யாணத்தைப் பற்றி வியந்து வியந்து பேசுகிறான்.



பயணிகள் பலரும் அதைக் கேட்டு ரசிக்கிறார்கள். அப்போதுதான் தெரியவருகிறது... அவன் செல்லவேண்டிய ரயிலுக்குப் பதிலாக வேறு ரயிலில் ஏறிவிட்டிருக்கிறான்; அவனது புது மனைவி இன்னொரு ரயிலில் போய்க்கொண்டிருக்கிறாள் என்று. புதிதாக திருமணம் செய்துகொண்டவனின் கையில் பணம் இல்லை. அத்தனை பணமும் மனைவியிடம் இருக்கிறது. ஆகவே, அடுத்த ரயிலில் போய் மனைவியோடு சேர்ந்துகொள்ள, பயணிகளே பணம் தந்து அனுப்பிவைக்கிறார்கள்.

இன்று வாசிக்கும்போது இந்தக் கதை சாதாரணமாக, 'இதில் என்ன இருக்கிறது?' என யோசிக்கவைக்கிறது, ஆனால், *100* வருடங்களுக்கு முன்னர் இந்தக் கதை வெளியாகியிருக்கிறது. அந்தக் காலத்தில் படித்த பெண்ணைத் திருமணம் செய்துகொள்வது என்பது பெரிய விஷயம். அதைவிடவும் திருமணம் என்பது ஆண் - பெண் இருவருக்கும் பெரிய கனவு. அதுவும் வசதியான இடத்தில் திருமணம் செய்துகொண்டுவிட்டால் வாழ்க்கை செட்டில் ஆகிவிடும் என்ற ஆசை, எல்லோரிடமும் இருந்தது. அதை அடைந்தவர்கள் பெருமையாக நினைத்துக்கொண்டார்கள்.

*100* ஆண்டுகளுக்குப் பிறகும் இந்த மனநிலை மாறிவிடவில்லை. ஆனால், திருமணம் குறித்த வியப்பும் கொண்டாட்ட மனநிலையும் இன்று வடிந்துபோயிருக்கிறது. திருமணம் இன்று ஒரு நிகழ்வு. பெற்றோர்கள், உறவினர்கள் அடையும் சந்தோஷத்தில் கால் பகுதியைக்கூட மணமகனோ, மணமகளோ அடைவது இல்லை.

'புதுமணக் களை என்பது *30* நாட்களுக்கு இருக்கும்' என்பார்கள். இன்று மூன்று நாட்களுக்குக்கூட இருப்பது இல்லை. திருமணம் ஏற்படுத்தும் சந்தோஷத்தைவிடவும் பிரச்னைகளும் கோபதாபங்களும் வருத்தங்களும் அதிகமாகிவிட்டிருக்கின்றன.

சண்டை இல்லாத திருமண வீடு ஒன்றுகூட இல்லை. சண்டையிடுவதற்குக் காரணம் பெரிதும் அற்பமானதே. ஒவ்வொரு திருமணத்தின்போதும், ஏதோ ஓர் உறவு பிரிந்து போய்விடுகிறது அல்லது கசப்பான அனுபவத்தைப் பெற்றுவிடுகிறது.

என் நண்பரின் தந்தை, கடந்த *15* ஆண்டுகளாக எந்தத் திருமணத்துக்கும் போவது இல்லை. காரணம், அவரது தம்பி மகளின் திருமணத்துக்காக அவர்களுக்கு ரயிலில் டிக்கெட் போட்டபோது ஏ.சி கோச்சில் டிக்கெட் போடவில்லை; சரியான லாட்ஜில் ரூம் போடவில்லை; ஏன் கல்யாண மண்டபத்துக்குப் போய் வர கார்கூட ஏற்பாடு செய்யவில்லை என்ற வருத்தம். இந்த வருத்தத்தை திருமண நாளின்போதே கொட்டித் தீர்த்துவிட்டார்.

'பொண்டாட்டி பேச்சைக் கேட்டுக்கொண்டு என்னை அண்ணன் கோபித்துக்கொள்கிறான்' என, தம்பி தன் மனைவியிடம் புகார்செய்ய அது பெரிய பிரச்னையாகி, கல்யாண வீட்டில் சாப்பிடாமலேயே அவர்கள்

வெளியேறிவிட்டார்கள். அந்த அவமானத்தை ஆறாத வடுபோல இன்றும் வைத்துக்கொண்டிருக்கிறார்.

எந்தக் கல்யாணத்துக்கு யார் அவரை அழைத்தாலும், இந்தச் சம்பவத்தைச் சொல்லிக்காட்டுகிறார். 'என்னை இல்லாதவன் என ஒதுக்கி அவமானப்படுத்திவிட்டான். ஆனால், வசதியான அவனது மச்சினனைக் கௌரவமாக நடத்தினானே! அந்த எண்ணம் ஏன் சொந்த அண்ணனை நடத்த மனம் வரவில்லை?' எனப் புலம்பிக்கொண்டே இருக்கிறார்.

குடும்பத்தில் ஓர் உறவு அவருக்குத் துண்டிக்கப்பட்டுவிட்டது. இது இனி எளிதில் ஒட்டிக்கொள்ளாது. இந்தக் கோபம், அவமானம் எதையும் திருமணத் தம்பதிகள் கண்டுகொள்ளவே இல்லை. 'அவர்கள் தனக்கு நடந்த அவமானத்துக்கு மன்னிப்பு கேட்பார்கள்' என நண்பனின் தந்தை நினைத்துக்கொண்டிருந்தார். அது நடக்கவில்லை என்றதும் மணமக்களையும் அவர் வசைபாடத் தொடங்கிவிட்டார். இப்போது அந்த வெறுப்பு குடும்பப் பகையாக வளர்ந்து நிற்கிறது.

இப்படி ஒவ்வொருவர் திருமணத்துக்குள்ளும் யாரோ காயப்பட்டுவிடுகிறார்கள்; கசப்போடு வெளியேறிப்போகிறார்கள்; கண்ணீருடன் சண்டையிடுகிறார்கள். எவ்வளவு வசதியான வீட்டுத் திருமணத்திலும் இந்தப் பிரச்னையைத் தவிர்க்க முடியவில்லை.

இது திருமணத்தின் ஒரு பக்கம் என்றால், இதன் மறுபக்கம் திருமணம் பற்றிய கனவுகள். ஆண்களைவிடவும் பெண்கள் திருமணம் பற்றிய நிறையக் கனவுகளை, ரகசியமாகத் தங்களுக்குள் வளர்த்துக்கொண்டே வருகிறார்கள்.

எந்த மண்டபத்தில் திருமணம் நடைபெற வேண்டும், திருமணத்தின்போது என்ன விதமான ஆடை அணிந்துகொள்ள வேண்டும், ஹனிமூனுக்கு எந்த ஊருக்குப் போய் வர வேண்டும்... என எல்லாவற்றையும் ரகசியமாக மனதுக்குள் திட்டம் வகுத்துக் கொண்டிருக்கிறார்கள். அது நிறைவேறாமல் போகும்போது அடையும் ஏமாற்றம் உடனே வெளிப்படுவது இல்லை. மாறாக, திருமண வாழ்வில் எதிரொலிக்கத் தொடங்கிவிடுகிறது.

'குல்ஹிமா' என்ற தன் அத்தையைப் பற்றி, எழுத்தாளர் அம்ருதா ப்ரீதம் தனது வாழ்க்கை வரலாற்று நூலில் ஒரு நிகழ்வைக் குறிப்பிடுகிறார்.

பஞ்சாபி கிராமம் ஒன்றில் குல்ஹிமா என்கிற பெண்ணுக்குத் திருமணம் நடக்கிறது. முதலிரவுக்காக மணமகனின் வீட்டுக்கு அழைத்துப்போகிறார்கள். அங்கே கட்டிலே கிடையாது. தரையில் பாயை விரித்திருந்தார்கள். முதலிரவு என்றாலே பூச்சரங்கள் தொங்கும், கட்டில், பால், பழம் எனக் கனவுகொண்டிருந்த குல்ஹிமாவுக்கு, அந்த வெறும்பாயும் ஒரு டம்ளர் பாலும் திகைப்பை ஏற்படுத்திவிடுகின்றன.

முதலிரவில்கூட கட்டில் இல்லையே என்ற ஏக்கத்தை அவளால் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவே இல்லை. இதைப் பற்றி கணவனிடம் எப்படிப் பேசுவது எனப் புரியாமல் அவள் கோபத்துடன் தலைகவிழ்ந்து உட்கார்ந்திருக்கிறாள். கணவனோ காமத்துடன் அவளை நெருங்குகிறான். 'கட்டில்கூடவா நமக்குக் கிடையாது?' என குல்ஹிமா அழுகிறாள்,

'எதற்கு கட்டில், யார் வீட்டில் கட்டில் இருக்கிறது, இத்தனை நாட்கள் உன் வீட்டில் கட்டிலில்தான் தூங்கினாயா?' என கணவன் திட்டி சண்டையிடுகிறான். அவளும் பதிலுக்குச் சண்டையிட, கோபத்தில் அவளை அடித்துவிடுகிறான். அழுதபடியே பாயில் சுருண்டு படுத்துக்கொள்கிறாள். அப்போது அவள் மனதில், தான் பார்த்த சினிமாக்களில் வந்த முதலிரவுக் காட்சிகளில், அலங்காரமான கட்டிலில் மணமகனும் மணமகளும் கட்டிக்கொண்டு ஆடிப்பாடி உறங்குவது நினைவுக்கு வருகிறது. அதை நினைத்துக் கேவிக் கேவி அழுகிறாள்.

'முதலிரவில் தன்னைச் சந்தோஷப்படுத்தவில்லை' எனச் சொல்லி குல்ஹிமாவை அவளது கணவன் விரட்டிவிடுகிறான். கிராமத்தில் பசுமாடுகளை மேய்த்தபடியே அவள் தனியே அலைகிறாள். கணவன், ராணுவத்துக்குப் போய்விடுகிறான். 30 வருடங்களுக்குப் பிறகு ஒருநாள், தற்செயலாக அவள் கணவனை சந்தையில் சந்திக்கிறாள். அவன் மறுமணம் செய்து, மனைவியை இழந்து தனியே வாழ்ந்துகொண்டிருக்கிறான்.

அவர்கள் சந்தையில் சந்தித்துக்கொண்டபோது குல்ஹிமாவைத் தன்னோடு வந்து வாழும்படியாக அழைக்கிறான்; குல்ஹிமா மறுக்கிறாள். அப்போது அவளது கணவன் 'என் வீட்டில் இரட்டை மரக்கட்டில் இருக்கிறது. வந்துவிடு. உன்னை சந்தோஷமாக வைத்துக்கொள்கிறேன்' என அழைக்கிறான். குல்ஹிமா கண்ணீர்விட்டபடியே 'இனி எனக்கு அந்தக் கட்டில் எதற்கு?' என விலகிப்போய்விடுகிறாள்.



குல்ஹிமாவின் வாழ்க்கை, என்றோ நடந்த விஷயம் அல்ல; இன்றும் தொடரும் ஒரு விஷயம். முதலிரவு குறித்த கற்பனை கலைந்துபோய் கசப்புஉணர்ச்சி பீறிடத் தொடங்குவது இன்றும் நடைபெறுகிறது.

பிரச்னை, 'கட்டில் இல்லை' என்பது அல்ல. தனக்குள் குல்ஹிமா வளர்த்துக்கொண்டிருந்த கனவு கலைந்துபோய்விட்டது. இனி ஒருபோதும் அதைச் சாத்தியப்படுத்த முடியாது என்பதே.

வாழ்நாள் முழுவதும் திருமணம் பற்றி கனவுகண்ட இளம்பெண், தங்கள் காதலை வீட்டார் ஏற்றுக்கொள்ளாதபோது, ரகசியமாகப் பதிவுத்திருமணம் செய்துகொள்ள ஒப்புக்கொண்டுவிடுகிறாள். திருமணமும் நடந்தேறிவிடுகிறது. ஆனால், அவள் தன் வாழ்நாள் முழுவதும் பத்திரிகை அடித்து, ஊரைக் கூட்டி, சாப்பாடு போட்டு, வீடியோ எடுத்து திருமணம் நடக்கவில்லை என்பதைச் சொல்லிக்காட்டிக்கொண்டே இருக்கிறாள்.

இந்த வலியை அவளால் கடந்துபோக முடியவே இல்லை. ஒவ்வொரு முறை அவளது திருமணம் பற்றிய பேச்சு வரும்போதும், அவள் குற்றவுணர்ச்சியோடு 'தனக்கு அந்தக் கொடுப்பினை இல்லை' என நினைத்து கண்ணீர்விடுகிறாள். பிடித்த காதலனைத் திருமணம் செய்துகொண்டதைவிடவும்

கனவு கண்டபடி திருமணம் நடக்காமல்போன வருத்தம் மறையாத வேதனையாக எஞ்சிவிடுகிறது.

இன்னொரு திருமணத்தில் புது மனைவியை கணவர் வீட்டார் 'ஏன் வீட்டுக்குள் செருப்பு போட்டுக்கொண்டு நடக்கிறாள்?' எனத் திட்டியிருக்கிறார்கள். அது அவளது நெடுநாளைய பழக்கம். அந்தப் பெண்ணால் இதைத் தாங்கிக்கொள்ள முடியவில்லை. கோபித்துக்கொண்டு தாய்வீட்டுக்கு வந்துசேர்ந்துவிடுகிறாள்.

பெண் வீட்டார் இதைப் பெரிய விஷயமாக எடுத்துக்கொண்டு மாப்பிள்ளை வீட்டில் 'மாமியாரும் மாமனாரும் தன் மகளை வரதட்சணை கேட்டுக் கொடுமைப்படுத்துகிறார்கள்' என போலீஸில் புகார் கொடுத்துவிட்டார்கள்.

உடனே இந்தப் புகாரை விசாரிக்க மணமகனின் தாய் - தந்தையை போலீஸ் காவல் நிலையத்துக்கு அழைத்துப்போய்விடுகிறது. தங்களை 'வாழ்நாளில் முதல்முறையாக இப்படி போலீஸ் ஸ்டேஷனில் உட்கார வைத்துவிட்டாளே' என மணமகனின் பெற்றோர் அழுது கண்ணீர் வடிக்க, பிரச்னை முற்றிவிடுகிறது. இன்று அவர்கள் பிரிந்து வாழ்கிறார்கள்.

தன் பெற்றோரை போலீஸ் ஸ்டேஷனில் ஒப்படைத்த அந்தப் பெண்ணை, இனி வாழ்நாளில் ஒருபோதும் ஏற்றுக்கொள்ள மாட்டேன் என கணவன் உறுதியாக இருக்கிறான். பெண் வீட்டிலும் இப்படியான ஒரு திருமணம் தேவையே இல்லை என முறித்துக்கொள்ளவே விரும்புகிறார்கள். அவர்களின் திருமண வாழ்க்கை மொத்தமே 12 நாட்கள்தான். இவ்வளவுதானா திருமணம், இதற்குத்தானா இத்தனை உறவினர்கள் ஒன்றுகூடி ஆசீர்வதித்தார்கள்?

கார்லோஸ் ஹாரிஸ் என்கிற உளவியல் ஆய்வாளர், தனது உரை ஒன்றில் முறிந்த உறவுகளுக்கான காரணத்தை விளக்குகிறார்...

'குடும்ப உறவுகளின் பிரிவுக்கு முக்கியமான காரணம் 'கோபம்'. இந்தக் கோபத்தின் மூலம் எது... யோசித்தது உண்டா?

உண்மையில் நாம் கோபம்கொள்வதன் வழியே நமது இருப்பை அடையாளப்படுத்த முயற்சிக்கிறோம். கோபம் என்பது, ஒரு மனப் பழக்கம். ஒரு தந்திரம், மிகச் சாதாரணச் செயல் ஒன்றுக்கு, ஏதோ ஒரு தருணத்தில்

கோபம் அடையத் தொடங்குகிறவன், பின்னர் அதையே பழக்கம் ஆக்கிக்கொள்கிறான். இது அவன் தொடர்புடைய எல்லா செயல்களிலும் வெளிப்படத் தொடங்குகிறது. இதை, தனது இயல்பாகக் கருத ஆரம்பித்துவிடுகிறான். அதுதான் பல்வேறு பிரச்னைகளுக்கு மூலக்காரணம்.

ஒரு பிரச்னை வளர்வதற்கு முன்முடிவுகளே பிரதானக் காரணம். நாம் ஒரு செயலைத் தனித்து அணுகுவது இல்லை. நமது முன்முடிவின்படி அதை ஒரு சதியாகவோ, அவமானப்படுத்தும் வழிமுறையாகவோ கருதுகிறோம். தற்செயல் அல்லது தவறாக நடந்துவிட்ட விஷயம் என ஒன்றை நாம் நினைப்பதே இல்லை.

இதுபோலவே பேச்சுவார்த்தை முற்றியே சண்டை ஏற்படுகிறது. பேச்சை கையாளத் தெரியாமல்போனதே இதற்கான காரணம். அமைதியாக உணர்ச்சிவசப்படாமல் பேசத் தொடங்கும்போது பிரச்னை எழுவதே இல்லை.

பிறரைப் பற்றி குறை கூறுவதற்கு நாம் விரும்புகிறோம். அதை ஒரு பழக்கமாக உருமாற்றியிருக்கிறோம். அதேபோல மற்றவர் நம்மைப் பற்றி குறை கூறும்போது நாம் கோபம் அடைகிறோம். உண்மையில் குறை கூறுதல் என்பது ஒரு வகை வம்புப்பேச்சே.




அளவுக்கு அதிகமான வேலையைச் செய்வது அல்லது ஒன்றுமே செய்யாமல் இருப்பது இரண்டும் பிரச்னையை வேகமாக உருவாக்கிவிடும். உற்சாக மிகுதியில் ஒன்றைச் செய்ய ஆரம்பித்து, முடியாமல் கைவிடும்போதுதான் அவப்பெயர் உண்டாகிறது.

விட்டுக்கொடுத்தல், புரிந்துகொள்ளுதல், நன்றி பாராட்டுதல், ஏற்றுக்கொள்ளுதல், பக்குவமாக உரையாடுதல், பொறுமையுடன் காத்திருத்தல் இவை யாவும் ஒன்றுசேர்ந்ததே வாழ்க்கை. அதைப் புரிந்துகொள்ளாமல்போனதே இன்றைய சிக்கல்களுக்கான முக்கியமான காரணம்' என்கிறார் கார்லோஸ் ஹாரிஸ்.

இரண்டு தேசங்களுக்கு இடையில் உருவாகும் பிரச்னைகளைக்கூடப் பேசித் தீர்த்துக் கொண்டுவிட முடிகிறது. ஆனால், உறவுக்குள் ஏற்படும் சிக்கலை எவராலும் பேசித் தீர்த்துவிட முடிவதில்லை. முந்தைய காலங்களில் சில பெரியவர்கள் இப்படிப் பேசி ஒன்று சேர்த்துவைப்பதை தங்களின் கடமையாகக் கருதினார்கள். பெரியவர்கள் சொன்னால் இரண்டு வீட்டிலும் ஏற்றுக்கொண்டார்கள். இன்று அப்படியான பெரியவர்களும் இல்லை; ஏற்றுக்கொள்ளும் மனநிலையில் எந்த மனிதரும் இல்லை.

கல்யாணப் புகைப்படங்களில் நாம் சிரித்தபடியே போஸ்கொடுப்பது, இந்த ஒரு நிமிடத்துக்குப் பிறகு, சிரிப்பு சாத்தியம் இல்லை என்பதற்காகத்தானோ எனச் சந்தேகமாக இருக்கிறது!

- சிறகடிக்கலாம்...

## இந்திய வானம் - 16
## எஸ்.ராமகிருஷ்ணன், ஓவியங்கள்: ரமேஷ் ஆச்சார்யா

### கங்கையும் கோடம்பாக்கமும்

டிசம்பர் மாதத்தின் மாலை நேரத்தில், ஹரித்துவாரில் உள்ள லட்சுமணன் ஜுலா பாலத்தில் நின்றிருக்கிறீர்களா?

'ஆம்' என்றால் நீங்கள் அதிர்ஷ்டசாலி.

காற்றின் நூறு விரல்கள் முகத்தைக் கோதி விளையாடும்; காலடியில் பொங்கிப் பெருக்கெடுத்து ஓடும் கங்கை. தொங்கு பாலத்தில் நின்றுகொண்டு கங்கையைப் பார்ப்பது அபூர்வமான அனுபவம். பெருகியோடும் கங்கையின் குறுக்கே அந்தத் தொங்கு பாலம் கட்டப்பட்டிருக்கிறது. வலிமையான இரும்புப் பாலம். இந்தப் பாலத்தை 1930-ம் ஆண்டில் கட்டியிருக்கிறார்கள். ஒரு டிசம்பர் மாத மாலை நேரத்தில் அங்கே நின்றிருந்தேன். கங்கையைப்போல காற்றும் ஒரு பெரு நதிதான் என்பதை அன்றுதான் உணர்ந்தேன்.

தள்ளுவண்டிகளும் ஸ்கூட்டர்களும் சைக்கிள் காரர்களும் அந்தக் குறுகிய பாலத்துக்குள் அநாயசமாகக் கடந்துபோகிறார்கள். பாலத்தின் நடுவே நின்றிருந்தேன். கையில் சூலாயுதம் ஏந்திய இளந்துறவி ஒருவன் என்னைப் போலவே காற்றை அனுபவிப்பதற்காக, கண்களை மூடி நின்றிருந்தான். பரஸ்பரம் ஒருவரையொருவர் பார்த்து சிரித்துக்கொண்டோம். எதற்காக அந்தச் சிரிப்பு... காற்றை நினைத்தா?

அந்தச் சிரிப்பு எங்களுக்குள் ஒரு நெருக்கத்தை ஏற்படுத்தியது. மனிதர்களை ஒன்றிணைக்க சிறிய புன்னகை போதும். அடுத்த விநாடி மொழி தெரியாதவன்கூட சிநேகமாகிவிடுகிறான். அந்தத் துறவியின் தாடி மார்பு வரை கிடந்தது. காற்றில் அந்தத் தாடி அலைவதை நான் பார்த்துக் கொண்டிருந்தேன்.

'உலகியல் ஆசைகள் வேண்டாம்' என ஒதுங்கிய துறவிக்கும் காற்றின் இதம் தேவையாகத்தான் இருக்கிறது. கங்கையை குளிர்காலத்தில் காண்பது பேரனுபவம். வேட்டைக்குத் தப்பிய புலியைப்போல கங்கை சீறிக்கொண்டிருக்கிறது. கற்களை உருட்டி, தள்ளிக்கொண்டுபோகிறது. 'நீர் மென்மையானது' எனச் சொல்பவர்கள் அப்பாவிகள். தண்ணீர், உலகின்

வலிமையான ஆயுதம். தொலைவில் படகுகள் கங்கையின் குறுக்கே போயும் வந்தும் இருந்தன.



டிசம்பர் மாதத்தின் விடிகாலையில், கொட்டும் பனியில், அகண்ட கங்கையே காணாமல் போய்விடுகிறது. இருட்டுக்குள்ளாகவே கங்கையில் நீராடச் செல்கிறார்கள்.

ஒருமுறை கையில் விளக்கு ஒன்றை ஏந்தியபடியே ஓர் இளம்பெண் கங்கையை நோக்கி நடந்து கொண்டிருப்பதைக் கண்டேன். தேவதைக் கதைகளில் படித்த காட்சி ஒன்று, நேரில் கடந்து செல்வதைப் போல் இருந்தது. அந்தப் பெண் கைவிளக்கை கங்கையின் படித்துறையில் வைத்துவிட்டு, கங்கையை வணங்கினாள். பின்பு குளிரை மறந்து, கங்கையின் சீற்றத்தை மறந்து தண்ணீருக்குள் இறங்கினாள். விளக்கின் சுடர் காற்றின்

வேகம் தாளாமல் அசைந்துகொண்டேயிருந்தது. அந்தச் சின்னஞ்சிறு வெளிச்சத்தில் கங்கையைக் காணும்போது பரவசமாக இருந்தது.

தொங்கு பாலங்களுக்கு என்றே விசேஷமான கவர்ச்சி இருக்கிறது. அதில் நடக்கும்போது நாம் மிதப்பதுபோன்ற உணர்வை அடைகிறோம். லட்சுமணன் ஜூலாவில் நின்றுகொண்டிருந்தபோது உல்லாசப் பயணம் அழைத்துவரப்பட்ட ஆரஞ்சு வண்ண யூனிஃபார்ம் அணிந்த பள்ளிப் பிள்ளைகள் ஆரவாரத்துடன் பாலத்தில் அங்கும் இங்கும் ஓடிக்கொண்டிருந்தார்கள். ஒரு சிறுமி ஓடும் கங்கையை எட்டிப் பார்ப்பதற்காகக் குனிந்தபோது, மற்றொரு சிறுமி அவளைப் பின்னால் இருந்து இழுத்துப் பிடித்துக்கொண்டிருந்தாள். அவர்களின் உற்சாகத்துக்கு அளவே இல்லை. ஒரு சிறுமி தன் பாக்கெட்டில் வைத்திருந்த ஒரு நாணயத்தை எடுத்து பாலத்தில் இருந்து வீசி எறிந்தாள். அந்த நாணயம் காற்றில் சுழன்றுபோய் கங்கையில் விழுந்தது. அதைப் பார்த்துக்கொண்டிருந்த மற்றொரு சிறுமி உடனே தானும் ஒரு நாணயத்தை எடுத்து கங்கையில் போட்டாள். கங்கையில் வீசி எறியப்படும் நாணயங்கள் என்ன ஆகும்? அந்தச் சிறுமிகளுக்கு அப்படி நடந்துகொள்வது மிகுந்த சந்தோஷமாக இருந்தது.

எனக்கும் ஒரு நாணயத்தை அப்படி கங்கையில் வீசி எறிய வேண்டும் என ஆசையாக இருந்தது. பையில் துழாவினேன்; சில்லறைக் காசுகளே இல்லை. சில நேரங்களில் பணத்தைவிட சில்லறை முக்கியமானது என்பதை அந்தத் தருணத்தில்தான் உணர்ந்தேன். மூன்று பள்ளி ஆசிரியர்கள், அந்த மாணவர்களை அழைத்துக்கொண்டு பாலத்தைக் கடந்துபோய்க்கொண்டிருந்தார்கள். ஒருவருக்கும் பாலத்தைத் தாண்டிப்போக விருப்பம் இல்லை. முன்னால் நடப்பதும், திடீரெனப் பின்னால் ஓடிவருவதுமாக இருந்தார்கள். பாலத்தைக் கடந்துபோக யாருக்குத்தான் பிடிக்கும்?

அன்று பாலத்தைவிட்டுத் திரும்பிவரும்போது மனதில் ஞானக்கூத்தன் கவிதை வரிகள் ஓடின...

‘முன்னாளெல்லாம் பாலம்
தியானித்திருக்கும் நீருக்கு மேலே
இந்நாளெல்லாம் பாலம்...
நிலத்திலும் உண்டு அதன் முதுகெலும்பு.’

பாலம் என்றாலே தண்ணீரின் நடுவே அமைக்கப்படுவது என்பது உருமாறி, தரையிலும் பாலங்கள் உருவாக்கப்பட்டதைப் பற்றி கூறும் இந்தக் கவிதையின் முடிவில் ஞானக்கூத்தன்...

'ஜாக்கிரதையாகப் போய் வா
எங்கும் ஆட்கள் நெரிசல்
உன்னைத் தள்ளி உன்மேல்
நடக்கப்போறார் பார்த்துக்கொள்.'

என பாலம் சொல்வதுபோல முடித்திருப்பார். மனிதர் முதுகில் மனிதர் நடந்துபோவது அரூபமாக நடந்துகொண்டுதான் இருக்கிறது. 'சாதுர்யம்' என்ற பெயரில் வணிகம், அதை எளிதாக நடத்திக் கொண்டிருக்கிறது.

'வாழ்க்கையைப் பயில்வதற்கு இயற்கையை நேசித்தல் வேண்டும்' என தனது உரை ஒன்றில் எழுத்தாளர் ஜெயகாந்தன் குறிப்பிடுகிறார். 'காலம் என்பது மனிதன் மட்டும் சம்பந்தப்பட்டது அல்ல; அது பிரபஞ்சம் சம்பந்தப்பட்டது. மனிதன் சம்பந்தப் பட்டதற்கு பெயர் 'நேரம்'. சில காலங்களில் சில மனிதர்கள் அல்ல, சில நேரங்களில் சில மனிதர்கள்தான்.

இயற்கையை நேசிக்க நிறையப் பாடங்கள் சொல்லிக்கொடுத்திருப்பவர் மகாகவி பாரதி. வானத்தைப் பற்றியும் மனிதர்களைப் பற்றியும் தாவரங்களைப் பற்றியும் புழு பூச்சிகளைப் பற்றியும்கூட அவர் நிறையச் சொல்லியிருக்கிறார். அவற்றை நாம் பயில வேண்டும் வாழ்க்கையில் எவ்வளவோ அவலங்களைப் பார்க்கிறோம். நம்பிக்கையற்று, விரக்தியுற்று, வாழ்வைச் சபிக்கிற மனிதர்களை எல்லாம் பார்க்கிறோம். ஆனால், வாழ்க்கையின் மீது நம்பிக்கை ஏற்படுத்துவதுதான் இலக்கியத்தின் கொள்கை; கோட்பாடு. வாழ்வின் மகத்துவத்தை உணர்த்துவதற்கு எழுதுகோலும் இலக்கியமும் பயன்படுதல் வேண்டும்.

தொழிலாளிகளிடமும் சாதாரண மனிதர் களிடமும் ஒடுக்கப்பட்டவர்களிடமும் இந்த வாழ்க்கையின் உண்மை, உயிர்ப்பு துடித்திருப்பதை நான் பார்த்திருக்கிறேன். ஆகவே, இந்த நம்பிக்கையை எல்லோருக்கும் தருதல் வேண்டும். விரக்தியுற்ற மனிதர்களுக்கு நம்பிக்கை தர வேண்டும். வாழ்க்கையின் அவலங்களால் மனம் ஒடிந்துபோகிறவர்களுக்கு 'வாழ்க்கை இப்படியே இராது; இது மாறும்' என்ற நம்பிக்கையோடு வாழ்க்கையை நேசிக்கக் கற்றுக்கொள்ளவேண்டும்.

அதற்கு நல்ல மனம் வேண்டும். நல்ல மனத்தை நல்ல நூல்கள் தரும். எப்படி நம் உடம்புக்கு ஆரோக்கியத்துக்கு நல்ல உணவும் நல்ல மருந்தும் தேவையோ, அது மாதிரி நமது ஆத்மாவுக்கும் நமது மனத்துக்கும் ஆரோக்கியம் தருவதற்கு நல்ல நூல்கள் தேவை' என்கிறார் ஜெயகாந்தன்.

இதை நான் வாழ்ந்து அனுபவித்து அறிந்திருக் கிறேன். சென்னைக்கு வந்த நாட்களில் எங்கே தங்குவது எனத் தெரியாமல் நண்பர்களின் அறை அறையாகச் சுற்றி அலைந்திருக்கிறேன். அந்த நாட்களில் போக்கிடம் இல்லாமல் போனபோது சில நாட்கள் கோடம்பாக்கம் மேம்பாலம் அடியில் தங்கியிருக்கிறேன். அதன் அடியில் உயரமான மேடைபோல ஒன்றிருக்கும். அந்த இடத்தில் ஒரு மலையாளி தங்கியிருந்தார். அவர் பெயர் வர்கீஸ்.

ஒரு தேநீர் கடையில் மாஸ்டராக வேலை செய்துகொண்டிருந்தார். அந்தப் பாலத்து மேடை அவரது வீடாக உருமாறியிருந்தது. ஒருநாள் இரவு கோடம்பாக்கம் சாலையில் உள்ள அந்தத் தேநீர் கடையில் எங்கே போய்த் தங்குவது எனத் தெரியாமல் யோசித்துக்கொண்டிருந்தபோது வர்கீஸ் என்னை தனது இடத்துக்கு வரும்படியாக அழைத்தார்.



வாடிக்கையாக தேநீர் குடிக்க வருகிறேன் என்ற நட்புணர்வு காரணமாக இருந்திருக்கக்கூடும். 'ஏதோ ஓர் அறைக்கு அழைத்துப்போகப் போகிறார்' என நம்பி நானும் அவருடன் சென்றேன். பாலத்தின் அடியில் ஒரே இருட்டாக இருந்தது. மேடையில் ஏறுவதற்காக ஒரு கல்லைப் புரட்டிப் போட்டிருந்தார். அந்தக் கல்லில் கால் வைத்து மேடையில் ஏறிக்கொண்டபடியே அவர் இருட்டுக்குள் கையைவிட்டு, ஒரு தீப்பெட்டியை எடுத்து, குச்சியை உரசிக்காட்டினார்.

'இதுதான் நம்ம ரூம். இங்கேதான் மூணு வருஷமா தங்கியிருக்கேன். பப்ளிக் டாய்லெட் பக்கத்துல இருக்கு. டிரெஸ், பெட்டி எல்லாம் டீக்கடையில வெச்சிருக்கேன். இதுல ரெண்டு பேர் தாராளமா படுத்துக்கலாம்' என்றார்.

கல்லில் ஏறி அந்த மேடையில் உட்கார்ந்து கொண்டேன். வர்கீஸ் ஒரு பீடியைப் புகைத்தபடியே சொன்னார்...

'இதுதான் என்னோட காக்கா கூடு. ஒரு மனுஷன் தூங்குறதுக்கு இவ்வளவு இடம் போதும்தானே?'

தூசி படிந்துபோன அந்த இடத்தில் மடித்து வைத்திருந்த பெரிய போஸ்டர்களை விரித்துப் போட்டார். நாங்கள் இருவரும் அதில் படுத்துக் கொண்டோம். வர்கீஸ் கிழிந்துபோன துணி ஒன்றை எடுத்து, என்னிடம் கொடுத்துவிட்டுச் சொன்னார்...

'கால்ல கட்டிக்கோங்க. எலித் தொல்லை இருக்கு. அது காலைத்தான் கடிக்கும்.'

ஆச்சர்யமாக இருந்தது. இந்த இடத்துக்குள் படுத்து உறங்கி, அதன் கஷ்டங்களைச் சமாளிக்கக் கற்றுக்கொண்டிருக்கிறார்.

'டீக்கடையிலே படுத்துக்கலாம்தானே..?' எனக் கேட்டேன்.

'வந்த புதுசுல அங்கேதான் இருந்தேன். பிறகு இந்த இடத்தை ஒருநாள் தற்செயலாகக் கண்டுபிடிச்சேன். இங்கே அடிக்கிற காத்து அங்கே இல்லை. காத்து இல்லாம என்னாலே தூங்க முடியாது.'

அன்று இரவு நானும் அவரும் நிறைய நேரம் பேசிக்கொண்டேயிருந்தோம். விடிகாலையில் உறங்கத் தொடங்கினோம். அவர் சொன்னதுபோல குபுகுபுவெனக் காற்று பாய்ந்தோடியது. 'பாலத்தின் அடியில் படுத்துக் கிடக்கிறேன்' என்ற உணர்வே இல்லாமல் ஆழ்ந்து உறங்கினேன்.

அதன் பிறகு சிலமுறை நானே விரும்பி அவரைத் தேடி அந்த இடத்துக்கு உறங்குவதற்காகச் சென்றிருக்கிறேன். ஒருநாள் பின்னிரவில் நானும் அவரும் பேசிக்கொண்டிருந்த சப்தம் கேட்டு ரோந்து வந்த போலீஸ்காரர்கள் டார்ச்லைட் அடித்து எங்கள் இருவரையும் கீழே இறங்கி வரச் சொன்னார்கள். வர்கீஸின் முகத்தில் டார்ச்சை அடித்து, 'இங்கே என்ன செய்கிறாய்?' எனக் கேட்டார் ஒரு போலீஸ்காரர்.

'இதுதான் நான் தூங்குற இடம்' எனச் சொன்னார் வர்கீஸ்.

'எங்கே வேலை... எந்த ஊர்..?' என விசாரித் தார்கள். வர்கீஸ், தான் வேலைசெய்யும் டீக்கடையின் பெயரைச் சொன்னார். என்னை யார் என வர்கீஸிடம் கேட்டதும், 'தம்பி சார், கடையிலகூட வேலை செய்றான்' எனச் சொன்னார்.

போலீஸ் இன்ஸ்பெக்டர், 'இங்க எல்லாம் படுக்கக் கூடாது, கிளம்புங்க...' எனச் சொல்லி இருவரையும் துரத்திவிட்டார்.

எங்கே போவது எனத் தெரியவில்லை. அதே இடத்தில் நின்றுகொண்டே இருந்தோம்.

'என்னடா யோசனை, போகப்போறீங்களா, இல்லை... ஸ்டேஷனுக்கு வர்றீங்களா?' எனக் கேட்டார் இன்ஸ்பெக்டர்.

நாங்கள் இருவரும் இருட்டுக்குள்ளாகவே நடந்து, பாலத்தின் படிகள் வழியாக மேலேறினோம். பாலம் காலியாக இருந்தது. பாலத்தின் ஓரமாகவே நடந்து, லிபர்ட்டி தியேட்டர் வரை சென்றோம். மூடப்பட்ட கடைகள், ஆள் நடமாட்டம் இல்லாத சாலைகள்.

'இவ்வளவு பெரிய நகரத்துல ரெண்டு பேர் உறங்க இடம் இல்லை' எனச் சொல்லிச் சிரித்தார் வர்கீஸ்.

விடியும் வரை என்ன செய்வது... எங்கே போவது எனத் தெரியவில்லை.

இருவரும் கோடம்பாக்கம் ரயில்வே ஸ்டேஷன் ரோட்டில் நடந்துகொண்டிருந்தோம். மூடப்பட்ட கடையின் வெளியே சிலர் படுத்து உறங்கிக் கொண்டிருந்தார்கள். அப்படி ஏதாவது ஒரு கடையின் வெளியே உறங்கிவிடலாமா எனக்கூடத் தோன்றியது. ஆனால், வர்கீஸ் நடந்து கொண்டேயிருந்தார். கோடம்பாக்கம் ரயில்வே ஸ்டேஷனைக் கடந்து, தெற்கு பக்கமாக நடந்தோம்.

எதற்காக நடக்கிறோம் எனப் புரியாமலேயே நடந்தோம். குடிசைகளாக இருந்த ஓர் இடத்தில் அடிபம்பு ஒன்று கண்ணில்பட்டது.

வர்கீஸ் என்னிடம் கேட்டார்...

'குளிக்கலாமா?'

மணி அப்போது இரண்டு இருக்கும். 'இந்த இரவில் யார் குளிப்பது?' என்ற குழப்பமான மனநிலையில் 'வேண்டாம்' என்றேன்.

அவர், தான் குளிக்கப்போவதாகச் சொல்லி என்னை அடிபம்பை அடிக்கச் சொன்னார்.

அவர் அடிபம்பின் கீழே உட்கார்ந்துகொண்டார். நான் அடிக்கத் தொடங்கினேன். அடிபம்பு எழுப்பும் இரும்பின் ஓசை பலமாகக் கேட்டது. யாரோ விழித்துக்கொண்டு 'யாரு?' எனச் சப்தம் இட்டார்கள். 'சபரிமலைக்கு மாலை போடப் போறோம்...' என வர்கீஸ் உற்சாகமான குரலில் சொன்னார்.

அந்தக் குரல் அடங்கிவிட்டது. உடலை ஒடுக்கிக்கொண்டு அடிபம்பின் தண்ணீருக்குக் கீழே தலையைக் கொடுத்து பச்சைத் தண்ணீரில் வர்கீஸ் குளித்துக்கொண்டே இருந்தார். அதைப் பார்த்தபோது எனக்கும் குளிக்க வேண்டும் என்ற ஆசை உண்டானது.

'நானும் குளிக்கிறேன்' என்றேன்.

'குளிச்சா தூக்கம் போயிடும்' எனச் சொல்லி சிரித்தபடியே அவர் அடிபம்பை ஓங்கி ஓங்கி அடிக்க ஆரம்பித்தார். அவரைப்போலவே நானும்

சட்டையைக் கழற்றிவிட்டு, பேன்ட்டுடன் குளிக்க ஆரம்பித்தேன். தண்ணீர் உடம்பில் பட்டதும் ஜில்லென்று ஆகியது. குளிக்கக் குளிக்க உடம்பும் மனதும் பறப்பதுபோல் இருந்தது.




வர்கீஸ் சொன்னார்...

'இந்தச் சுகத்தை ஊரில் ஒரு பயல் அனுபவித் திருக்க மாட்டான்; நாம அதிர்ஷ்டசாலிகள்...'

சொட்டும் ஈரத்துடன் நாங்கள் இருவரும் கோடம்பாக்கம் பாலத்தை நோக்கித் திரும்ப நடந்து வந்தபோது, எங்களை அறியாமல் சிரிப்பு பொங்கியது.

வர்கீஸின் தேநீர்கடையின் முன்பாக நாங்கள் விடியும் வரை உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தோம்.

விடிகாலையில் பால் வாங்கி வருவதற்காக வர்கீஸ் கிளம்பிப்போனார். அடக்கிவைத்திருந்தஉறக்கத்தைக் கட்டுப்படுத்த முடியாமல், ஒரு நண்பனின் அறையைத் தேடிப்போனேன். அன்றைய பகலில் எனக்குக் கடுமையான காய்ச்சல். பாரசிட்டமால் மாத்திரை ஒன்றை வாங்கிப் போட்டுக்கொண்டு திருவள்ளுவர் பேருந்தைப் பிடித்து, ஊரை நோக்கிச் சென்றேன். வீட்டில் இரண்டு வார காலம் நோயுற்று கிடந்தேன். அதன் பிறகு ஆறு மாத காலம் சென்னைக்கு வரவே இல்லை.

மீண்டும் இலக்கியப் பித்துடன் சென்னைக்கு வந்து இறங்கி, அறை தேடி அலைந்தபோது வர்கீஸின் கடைக்குப் போயிருந்தேன். அவர் இல்லை. 'கோவைக்கு மாறிப்போய்விட்டார்' என்றார்கள். முகவரி அறிய முடியவில்லை. ஆனால், இன்றும் கோடம்பாக்கம் பாலத்தைக் கடக்கும்போது 'சாமானியர்களில் ஒருவனாக இந்தப் பாலத்தின் அடியில் படுத்துக்கிடந்தவன் நான்' என்ற உணர்வு எழுகிறது. அந்த உணர் வெழுச்சிதான் இன்றும் என்னை எழுத வைத்துக் கொண்டிருக்கிறது.

- சிறகடிக்கலாம்...

## இந்திய வானம் - 17
## எஸ்.ராமகிருஷ்ணன்

### சென்னையின் இருண்ட காலம்

கவிதை எழுதி ரசிக்கிற அளவுக்கு மென்மையானது மட்டுமே அல்ல மழை. சமயங்களில் அதன் உக்கிரம் மனிதர்களால் தாங்கிக்கொள்ள முடியாதது என்பதை சென்னையில் பெய்த கனமழை நிரூபித்துள்ளது.

'வடகிழக்கு பருவமழையின் தீவிரம்' என இயற்கையைக் காரணம் காட்டினாலும் சென்னை வெள்ளத்தின் முக்கியக் காரணம் ஏரி, குளங்கள், கால்வாய்கள், மழைநீர் போகிற வழி அனைத்தையும் அடைத்துவிட்டு கொள்ளை லாபம் அடைந்த ரியல் எஸ்டேட் தொழிலின் பேராசை, அதற்குத் துணை நின்ற அதிகாரிகள், அனுமதி தந்த மாநகராட்சி நிர்வாகம், துணைபோன அரசியல்வாதிகள் ஆகியோர்தான். இவர்கள் அடித்த கொள்ளைக்கு சென்னைவாசிகள் கொடுத்த விலை மிக மிக அதிகம்.

'மழையின் காரணமாக பள்ளி விடுமுறை' என சந்தோஷப்பட்ட பிள்ளைகள் அடுத்த சில நாட்களில் பயத்துடன், 'எப்போ மழை நிக்கும், நம்ம வீடு மழையில மூழ்கப்போகுதா?' எனக் கேட்டதற்கு எவரிடமும் பதில் இல்லை. என் வாழ்வில் இவ்வளவு கனமழையை ஒரு போதும் கண்டதே இல்லை. *1989*-ம் ஆண்டில் ஒருமுறை கல்கத்தாவில் இருந்து திரும்பி வந்துகொண்டிருந்தபோது ஆந்திரா புயலில் மாட்டியிருக்கிறேன். ரயில் பாதி வழியில் நிறுத்தப்பட்டது. ஓர் இரவு முழுவதும் ரயிலில் மின்சாரம் இல்லாமல் இருந்தேன். நடுக்காட்டில் ரயில் நின்றிருந்தது; உதவிக்கு யாருமே வரவில்லை; உணவு கிடைக்கவில்லை.

வானில் இருந்த ஒட்டுமொத்த மழையும் ஒன்றாக பூமிக்கு இறங்குகிறதோ எனும்படியாகக் கொட்டியது மழை. இடியுடன் கூடிய மின்னல்வெட்டு. 'ஊ, ஊ...' என ஊளையிடும் சூறைக்காற்று. 'இன்று, புயல் ஒட்டுமொத்த ரயிலையும் அடித்து இழுத்துக்கொண்டு போகப்போகிறது. வெள்ளத்தில் மிதக்கப்போகிறோம்' என மக்கள் பயந்து அலறினார்கள். யாருக்கும் என்ன செய்வது எனத் தெரியவில்லை. ஆனால், மறுநாள் காலை மழை வெறித்தது. அன்று மதியம் மீட்பு பணிகள் நடைபெற்று உதவி கிடைத்தது. எங்கெங்கோ சுற்றி அலைந்து, சென்னை வந்து சேர்வதற்குள் போதும் போதுமென்றாகிவிட்டது. அந்த புயலை என்னால் ஒருபோதும்

மறக்கவே முடியாது. ஆனால், அந்தப் புயல் தந்த அனுபவத்தைவிட நூறு மடங்கு மோசமான அனுபவமாக இருந்தது சென்னையைத் தாக்கிய கனமழை.



நவம்பர் *10*-ம் தேதி அன்று கனமழை தொடங்கியது. ஆறு மணி நேரத்துக்குள் *66* மி.மீ மழை சென்னையில் பதிவானது. அதன் தொடர்ச்சியாக நவம்பர் *16* அன்று *256* மி.மீ மழை. மெள்ள உயர்ந்து *23* மற்றும் *24*-ம் தேதிகளில் மழை உச்சத்தைத் தொட்டது. 'மூன்று மாதங்களில் பெய்ய வேண்டிய மழை, மூன்று நாட்களில் பெய்துள்ளது' என ஊடகங்கள் அறிவித்தன. 'போர்க்கால வேகத்தில் துயர்துடைப்புப் பணிகள் நடைபெறுகின்றன' என அதிகாரிகளும் ஆளும் கட்சியினரும் வாய்ஜாலம் காட்டினார்களே ஒழிய, மீட்பு பணிகள் முழுமையாக நடைபெறவில்லை.

அடுத்த சில நாட்கள் வெயில் அடித்தது. 'இயல்பு வாழ்க்கை திரும்பிவிட்டது' என மக்கள் சந்தோஷம் கொண்டார்கள். ஆனால், 'சென்னையில் மிகக் கனமழை பெய்யவுள்ளது' என நாசா எச்சரிக்கை செய்தது; பி.பி.சி செய்தி வெளியிட்டது. அதுபற்றிக் கேட்டபோது சென்னை வானிலை மையம், 'அப்படி எதுவும் இல்லை. லேசாகவோ, கனமாகவோ மழை பெய்யக்கூடும்' என்று மட்டுமே சொல்லிக்கொண்டிருந்தது.

‘சந்திராயனுக்கு ராக்கெட் விடுகிறோம்’ எனப் பெருமை பேசிக் கொண்டிருக்கும் நமக்கு அடுத்த சில நாட்களில் எங்கே, எவ்வளவு மழை பெய்யப்போகிறது என்பதைக் கண்டறியும் அதிநவீனத் தொழில் நுட்பத்தை சாத்தியப்படுத்த முடிய வில்லை. இவ்வளவுதான் நமது விஞ்ஞான சாதனை.

ஆஸ்திரேலியாவில் இரண்டு மாதங்கள் இருந்தபோது ஒவ்வொரு நாளும் எந்த இடத்தில் எப்போது மழை பெய்யும், எவ்வளவு பெய்யும் என துல்லியமாக அறிவிப்பதைக் கண்டிருக் கிறேன். ஆனால் நாம் இன்றும், ‘மேக மூட்டம் காணப்படும், மிதமான மழை பெய்யும்’ என வானிலை அறிக்கை வாசிக்கும் அளவில்தான் இருக்கிறோம். இது நமது இயலாமையின் அடையாளம்.

ஞாயிறு மழை இல்லை. வெயில் அடித்துக்கொண்டிருந்தது. ‘அவ்வளவுதான், இனி மழை பெய்யாது’ என சென்னைவாசிகள் நினைத்தார்கள். ஆனால் திங்கட்கிழமை காலை சென்னையில் மறுபடியும் தொடங்கியது மழை. அப்படியே வலுத்துப் பெய்யத் தொடங்கி செவ்வாய்க்கிழமை முழுவதும் அடர்மழை. நாள் முழுவதும் நிற்கவே இல்லை. மழையின் சப்தம் ஏதோ வெட்டவெளியில் மாட்டிக்கொண்டதைப்போல அச்சத்தை ஏற்படுத்தியது.

ஊழிக்காற்றின் பேரோசைபோல சப்தம், உக்கிரமான பெருமழை, கண்ணாடி ஜன்னலை மழை தட்டும் ஓசை பயமாக இருந்தது. படுக்கை அறை ஜன்னலில் காற்றின் வேகம் தாங்க முடியாமல் சிறிய விரிசல் உருவாகிவிடவே, உள்ளே தண்ணீர் புகத் தொடங்கியது. அடுத்த சில நிமிடங்களில் படுக்கை, தலையணை, கட்டில் யாவும் தண்ணீர். அந்த இடைவெளியை எப்படி அடைப்பது என துணியைக்கொண்டு திணித்து அடைத்தோம். அப்படியும் தண்ணீர் சீறியது. படுக்கை அறைக்குள் தண்ணீர் வந்துவிட்டதால் அள்ளி அள்ளி வெளியே ஊற்றத் தொடங்கினோம்.

பக்கத்துக் குடியிருப்பில் ஒரு வீட்டில் டாய் லெட்டில் தண்ணீர் போகாமல் வெளியே ததும்பி வீட்டுக்குள் மலம் மிதக்கத் தொடங்கியது. நகரம் எங்கும் மின்சாரம் துண்டிக்கப் பட்டது. அருகில் உள்ள கடைக்குப் போய் தேவையான பிரெட், காய்கறிகள் வாங்கிக்கொண்டு வரலாம் என குடையோடு வெளியே வந்தேன். சாலையில் மூன்றடி தண்ணீர். கடைகளில் எதுவும் இல்லை. நகரின் பல இடங்களில் தண்ணீர் சூழ்ந்த பகுதியில் இருந்து மக்கள் கூட்டம் கூட்டமாக வெளியேறிக் கொண்டிருந்தார்கள்.



‘கே.கே.நகர் வெள்ளத்தில் மிதக்கிறது; வேளச்சேரியில் படகு விட்டிருக்கிறார்கள்; துரைப்பாக்கம் மூழ்கிவிட்டது’ என மக்கள் பேசிக்கொண்டார்கள். எல்லா முகங்களும் இருண்டுபோயிருந்தன. யுத்தகாலத்தில் கிடைத்த உணவுப்பொருட்களை அடித்துப் பிடித்து வாங்குவதைப்போல மக்கள் எந்தக் கடை திறந்து இருந்தாலும் தள்ளுமுள்ளு செய்து பொருளை வாங்கினார்கள். ஒரு பிரெட் பாக்கெட்டின் விலை 75 ரூபாய்; அரை லிட்டர் பால் பாக்கெட் 150 ரூபாய்; ஒரு வாழைப்பழம் 50 ரூபாய்; ஒரு மெழுகுவத்தி 20 ரூபாய்... என கிடைத்த பொருட்களை வாங்கிக்கொண்டு திரும்பினேன். மின்சாரம் இல்லாததால் எங்கும் கொசு. மின்சாரத்தில் இயங்கும் கொசுவிரட்டிகள், கொசு பேட்டுகள் எதுவும் இயங்காது. கொசுவத்திச் சுருள்கள் மட்டுமே ஒரே வழி. இதனால் ஒரே ஒரு கொசுவத்திச் சுருள் 20 ரூபாய், 30 ரூபாய் வரை விற்கப்பட்டது.

எவரது செல்போனும் வேலை செய்யவில்லை. ரேடியோ மட்டுமே துணை. தொலைக்காட்சி செய்தியில் காட்டப்படும் சென்னை வெள்ளத்தைக் கண்டு பயந்துபோன உறவினர்கள், நண்பர்கள் தொடர்புகொள்ள முடியாமல் தத்தளித்தார்கள். யாரும் யாரையும் தொடர்புகொள்ள முடியவில்லை. மகன், மகள், உறவினர், நண்பர்களுக்கு என்ன ஆனது என வெளியூர்வாசிகளுக்கு தெரியவில்லை. இரண்டு பக்கமும் பதைபதைப்பு.

‘சாலைக்கு சென்றால் செல்போன் எடுக்கிறது’ என்றார்கள். மழைக்குள்ளாக குடையை எடுத்துக்கொண்டு சாலைக்குச் சென்றேன். செல்போன் விட்டுவிட்டு எடுத்தது. ஒரு நண்பர் ‘என் தந்தைக்கு மூச்சுத்திணறல் ஏற்பட்டு ஐ.சி.யூ.வில் அனுமதிக்கப் பட்டுள்ளார். ஆக்சிஜன் சிலிண்டர் கிடைக்கவில்லை. உதவ முடியுமா?’ எனக் கேட்டார். யாரிடம் கேட்பது, யார் போன் வேலை செய்கிறது எனப் புரியவில்லை.

சாலையில் வயதான பெண் நின்றுகொண்டு, கடைக்குப் போன தனது பேரனை காலை முதல் காணவில்லை என அழுது சப்தமிட்டுக் கொண்டிருந்தார். சிலர் குடிநீர் கேன் தேடி அலைந்துகொண்டிருந்தனர். பெரும்பான்மைக் கடைகள் மூடப்பட்டிருந்தன. ஒரு திருமண மண்டபத்தில் ஜெனரேட்டர் ஓடிக்கொண்டிருந்தது. திருமண வரவேற்புக்கான பந்தல் சரிந்து கிடந்தது. அதன் உள்ளே போக முயன்ற சாலையோரவாசிகளை அனுமதிக்க மறுத்து சண்டையிட்டுக் கொண்டிருந்தார்கள்.

சாலையில் அலை அடித்துப் போவதுபோல தண்ணீர் ஓடிக்கொண்டிருந்தது. மழை நிற்கவில்லை. சாலையில் மரங்கள் முறிந்துகிடந்தன. பைக், கார்கள் தண்ணீரில் மூழ்கிக்கிடந்தன. ரயில், விமானம், பஸ் எதுவும் ஓடவில்லை. ஆம்புலன்ஸ் ஒன்று சாலையில் ரிப்பேர் ஆகி நின்றிருந்தது. அதன் ஒட்டுநர், ‘சைதாப்பேட்டையில் பயங்கர வெள்ளம். ஒரு குழந்தையின் பிணம் மிதந்து போவதைக்கண்டேன். நிறைய வீடுகள் தண்ணீரில் மூழ்கிப்போயுள்ளன. மீட்புப் பணிகள் எதுவும் சீராக நடைபெறவில்லை. மருத்துவ உதவிகள் இல்லை. மெடிக்கல் ஸ்டோர்கள் இயங்கவில்லை. மக்கள் பெரும் அவஸ்தைப்படுகிறார்கள்’ என்றார்.

இன்னொருவர், ‘பிறந்து சில நாட்களே ஆன கைக்குழந்தையுடன் ஒரு கணவன் மனைவி எனது பக்கத்து வீட்டில் மாட்டிக்கொண்டார்கள். கனமழையைத் தாங்க முடியாமல் குழந்தைக்கு ஜன்னி வந்துவிட்டது. இந்த இரவில் எந்த மருத்துவரிடம் காட்டுவது, என்ன முதலுதவி செய்வது எனத் தெரியாமல் வாய்விட்டு அழுதார்கள். எங்கள் வீட்டுக்கு அழைத்துவந்து மெழுகுவத்தி வெளிச்சத்தில் அந்தக் குழந்தையை வைத்துக்கொண்டு உறக்கமற்று உட்கார்ந்திருந்தோம். இந்தக் கொடுமை யாருக்கும் வரக் கூடாது’’ என்றார்.

சாலையில் ஓடிக்கொண்டிருந்த வெள்ளத்தில் வாகனங்களில் மாட்டிக்கொண்டவர்கள், பேருந்து, ரயில் நிலையத்தில் போக்கிடம் இன்றித்

தவித்தவர்கள், விமானம் ரத்தாகி சிக்கிக்கொண்டவர்கள், வீட்டுக்குள் கொஞ்சங் கொஞ்சமாக தண்ணீர் புகுந்துகொண்டிருப்பதைக் கண்டு பயந்தபடியே நாற்காலியில் ஏறி உட்கார்ந்து கொண்டிருந்தவர்கள், நோயாளிகள், கல்லூரி வளாகத்தில் சிக்கிக்கொண்ட விடுதி மாணவர்கள், ஏழை எளிய மக்கள்... என ஆளுக்கு ஒருவகையான துயரத்தைச் சந்தித்தார்கள். கடலூர், திருவள்ளூர், காஞ்சிபுரம், சென்னைவாசிகளை மழை உலுக்கி எடுத்துவிட்டது.

தாம்பரத்திலும், அடையாறிலும், வேளச்சேரியிலும், பழைய மகாபலிபுரம் சாலையிலும், ஈக்காட்டுத்தாங்கலிலும் மழை வெள்ளத்தில் தண்ணீர் முதல் தளம் வரை வந்துவிட்டது. பத்தடி தண்ணீர், பதினைந்து அடி தண்ணீர்.

பல்வேறு செய்திகளைக் கேட்கக் கேட்க அடிமனதில் பயம் கொப்பளிக்கத் தொடங்கியது. என்ன ஆகப்போகிறது சென்னைக்கு, எப்படி இதைச் சமாளிப்பது, மின்சாரம் இல்லாமல் போனதுடன் அத்தனை உபகரணங்களும் செயலற்றுப்போய்விட்டன. கையில் இருந்த பணமும் சொற்பம். இதை வைத்துக்கொண்டு எப்படி சமாளிக்கப் போகிறோம், என்றைக்கு மின்சாரம் திரும்ப வரும், எப்போது உணவுப் பொருட்கள் கிடைக்கும் என அச்சமாக இருந்தது. எனக்கு இருந்த அதே அச்சம் சென்னையில் வசித்த ஒரு கோடிப் பேருக்கும் ஏற்பட்டது.



*2005*-ம் ஆண்டில் ஒரேயொரு முறை சென்னையில் கனமழை பெய்து வெள்ளம் சூழ்ந்தது. அப்போது கே.கே.நகரில் வசித்து வந்தேன். எனது வீதியில் இடுப்பளவு தண்ணீர். ஆனால் அது இரண்டு நாளில் சீராகிவிட்டது. அதைத் தவிர சென்னையில் இவ்வளவு மழை பெய்து நான் கண்டதே இல்லை.

மின்சாரம் இல்லாத இரவு, அடர்ந்த இருளைக் கரைத்◌துக்கொண்டு விடாமல் பெய்த மழை, புலம்பிக் கதறும் மக்களின் வேதனைக் குரல்கள்… இதன் பெயர்தான் நரகமா? கொசுக்கடி தாங்க முடியவில்லை. அட்டையை வைத்து விசிறிக்கொண்டு கை, கால்களில் துணியைச் சுற்றிக்கொண்டு கிடந்தோம். துளி உறக்கம் இல்லை. விடிய விடிய மழை கொட்டிக்கொண்டே இருந்தது.

நள்ளிரவில் பயத்துடன் இருட்டில் நின்றபடியே மழையை பார்த்துக்கொண்டிருந்தேன். வேட்டையாடும் மிருகத்தைப்போல மழை சுழன்று அடித்துக்கொண்டிருந்தது. தனது பாதையை அடைத்து, வீடு கட்டிக் கொண்டவர் களை பழிவாங்கத் துடிக்கிறதா மழை… ஆறு, கடலில் கலக்கும் முகத்துவாரங்களை மூடிய அநியாயத்துக்கு எச்சரிக்கை செய்கிறதா மழை? மழையைப் பார்க்கும்போது எத்தனை பேரை பலிகொள்ளக் காத்திருக்கிறதோ என பயமாக இருந்தது.

வீடு இழந்தவர்கள், முகாமில் தங்கவைக்கப்பட்டவர்கள் நிலை மிக மோசம். அழுகையும் விம்மலும் பிரார்த்தனையும் தாங்க முடியாத கோபமுமாக மக்கள் தவித்துப் போனார்கள். குழந்தைகளின் பசிக்கு என்ன செய்வது எனப் புரியாமல் பெண்கள் அழுது புலம்பினார்கள். மழையைச் சபித்தார்கள். தங்களுக்கு உதவ யாருமே கிடையாதா என மன்றாடினார்கள். விடிகாலை ஐந்து மணிக்கு மழை லேசாக தூறிக்கொண்டிருந்தது. வாசலுக்கு வந்தேன். சாலையைக் கடக்க முடியவில்லை. கடுமையான வெள்ளப்போக்கு. இருட்டுக்குள்ளாக மக்கள் பாலும் உணவும் தேடி அலைந்து கொண்டிருந்தார்கள்.

இரண்டு, மூன்று மணி நேரம் மழை வெறித்தது. வெயில்முகம் தென்பட்டது. பல இடங்களில் தன்னார்வக்குழுக்களும் இளைஞர்களும் ஆர்வமாக முன்வந்து உதவிப்பணிகளை செய்யத் தொடங்கினார்கள்; உணவு தந்தார்கள். சிலர், அடுக்குமாடி குடியிருப்பில் சிக்கிக்கொண்டவர்களை தங்கள் தோளில் தூக்கிக்கொண்டு வந்து காப்பாற்றினார்கள். நாய்க்குட்டிகளைக்கூட

அவர்கள் காப்பாற்றியது நெகிழ்ச்சியை ஏற்படுத்தியது. சென்னைவாசிகள் அவர்களுக்கு என்றும் நன்றிக்கடன்பட்டவர்கள்.

தேசிய பேரிடர் மீட்புக் குழு, ராணுவம். அதிகாரிகள் என மீட்புப் பணிகள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. ஆனால், மழையைப் பார்த்து மக்கள் அடைந்த பயம் இன்னும் விலகவில்லை. இந்தத் துயரத்தை இன்னும் நூறு ஆண்டுகள் ஆனாலும் மறக்க முடியாது.

‘இந்த நகரில் வசிப்பவர்களில் எத்தனை பேர் இந்த நகரைப் பற்றிக் கவலைப்படுகிறார்கள்? இந்த நகரில் வாழ்வதற்கான அத்தனை சுகங்களும் வேண்டும் என நினைப்பவர்கள், நகரின் பிரச்னைகளை எப்படித் தீர்ப்பது, அதற்கு என்ன வழி, யார் காரணம் என ஏன் யோசிப்பதே இல்லை?’ என ‘எஜுகேட்டர்ஸ்’ என்ற ஜெர்மானியப் படத்தில் ஒரு கதாபாத்திரம் கேள்வி கேட்கும். அந்தக் கேள்வி சென்னைக்கும் பொருந்தக்கூடியதே.

நாம் சென்னை குறித்துக் கவலைப்படவும், அதன் பிரச்னைகளுக்கான தீர்வுகளைக் கண்டறியவும் பெருமழை நம்மை எச்சரித்துள்ளது. நமது சுயலாபங்களுக்காக இயற்கையைச் சூறையாடியதற்குத் தந்த பதிலடி இது. பேரிடர் துயரத்தில் இருந்து விடுபட்டு முழுமையாக இயல்புநிலை திரும்ப பல மாதங்கள் ஆகக்கூடும். ஆனால், இதற்கான நிரந்தரத் தீர்வு என்பது அரசு மற்றும் நம் அனைவரின் கைகளிலும்தான் இருக்கிறது.

- சிறகடிக்கலாம்...

## இந்திய வானம் - 18
## எஸ்.ராமகிருஷ்ணன், ஓவியங்கள்: ரமேஷ் ஆச்சார்யா

### பயணம் எளிதில்லை

ஆயிரம் பேர் பயணம் செய்யும், செல்லும் ரயிலில்கூட ஒரு பெண் தனியே பயணம் செய்வது எளிதாக இல்லை. தொடர்ந்து பாலியல் தொல்லைகளுக்கு உள்ளாகிறார்கள்.

இரண்டு நாட்களுக்கு முன்னர் ஒரு பெண் அப்படி தனக்குத் தொல்லைகொடுத்த ஒருவரைப் பற்றி எஸ்.எம்.எஸ் மூலம் ரயில்வே காவல் துறையிடம் புகார் தெரிவித்திருக்கிறார். அடுத்த ரயில் நிலையத்தில் ஏறிய காவல் துறையினர் அந்த ஆளை விசாரித்து எச்சரிக்கை செய்துவிட்டு இறங்கிப் போய்விட்டார்கள்.

தன்னை போலீஸைவைத்து மிரட்டுகிறாள் என அந்தக் குடிகாரன் கோபம்கொண்டு அந்தப் பெண்ணை மிக மோசமாகத் திட்டியிருக்கிறான். 'தனியே வருகிறாள் என்றால், அவள் வேசைதான்' எனப் பகிரங்கமாகப் பேசியிருக்கிறான். அதைக் கேட்டு கோபம் அதிகமாகி அந்தப் பெண்ணும் சண்டையிட்டிருக்கிறார்.

அந்தப் பெண்ணுக்கு உதவி செய்ய யாரும் முன்வரவில்லை. அதற்கு மாறாக 'உனக்கு எதற்கு தேவையில்லாத பிரச்னை. வேறு ஒரு படுக்கைக்கு மாறிப் போய்விடு' என வற்புறுத்தியிருக் கிறார்கள். குடித்துவிட்டு தன்னிடம் தொல்லை தருபவனை இடம்மாற்ற ஒருவரும் முன்வரவில்லை. ஆனால், தனக்கு ஆயிரம் அறிவுரை சொல்கிறார்களே என அந்தப் பெண் நொந்துபோய்விட்டார்.

ஆனால், மனஉறுதியோடு அந்தக் குடிகாரனின் பேச்சை அப்படியே வீடியோ எடுத்து வாட்ஸ்அப்பில் மீண்டும் காவல் துறைக்கு அனுப்பியிருக்கிறார். இரண்டு ஸ்டேஷன் தாண்டி புகாரை விசாரிக்க வந்த காவல் துறையினர் அவரை ரயிலை விட்டுக் கீழே இறங்கி ஸ்டேஷனுக்கு வந்து புகார் கொடுக்கும்படி சொல்லியிருக்கிறார்கள். அப்போது மணி இரவு *12:30.* தன்னால் இறங்கி வர முடியாது என அவர் சொன்னதும் அந்த ஆளைத் திரும்பவும் எச்சரிக்கை செய்துவிட்டிருக்கிறார்கள்.

‘இவ்வளவுதான் நடவடிக்கையா?’ என அந்தப் பெண் வாதம் செய்தபோது ‘அவர் டிக்கெட் வாங்கிக்கொண்டு பயணம் செய்கிற பயணி. வேறு ஒன்றும் செய்ய முடியாது’ என காவலர்கள் அவரிடம் சண்டையிட்டிருக்கிறார்கள். அந்தப் பெண் விடவில்லை. ரயில்வே உயர் காவல் துறை அதிகாரிகளுக்கு அந்தச் செய்தியை அனுப்பி, விடியற்காலை வரை போராடியிருக்கிறார். குடிகாரன் நிம்மதியாக உறங்கிவிட்டிருக்கிறான். ஆனால் அவர், தனக்கு இழைக்கப்பட்ட இந்த அவமானத்துக்காக விடிய விடியப் போராடியிருக்கிறார்.




இந்தச் செய்தியை இணையத்தில் வாசித்த போது அடக்க முடியாத கோபம் ஏற்பட்டது.

அந்தப் பெண் என்ன தவறு செய்தார்? ரயிலில் ஒரு பெண் தனியே பயணம் செய்வது என்றால் அவள் யார்கூட வேண்டுமானாலும் படுத்துக் கொள்வாள் என்ற இழிவான சிந்தனை எப்படி உருவானது?

ரயில், பஸ், ஆட்டோ எதில் ஒரு பெண் தனியே வந்தாலும் உடனே எப்படி காமம் பீறிட்டுப் பொங்கிவிடுகிறது? கல்வி கற்பதற்கும் வேலைக்கும் அலுவலகத்துக்கும் மருத்துவக் காரணங்களுக் காகவும் பயணம்செய்கிற பெண்கள் நம் வீட்டிலும் இருக்கிறார்களே! அது ஏன் இந்தப் பொது இடங் களுக்கு வந்தவுடன் பலருக்கும் மறந்துபோய் விடுகிறது?

உண்மையில் இது ஒரு சமூகநோய். ஒவ்வொரு நாளும் பயணத்தில் இதை பெண்கள் பல்வேறு வடிவங்களில் எதிர்கொள்கிறார்கள். பயத்துடனும் அவமானத்துடனும் பயணம் செய்கிறார்கள். சகித்துக்கொள்ள முடியாமல் புகார் அளிப்பவர் ஒரு சிலரே.

ஒருமுறை டெல்லி நிஜாமுதீனில் இருந்து குஜராத் சம்பர்கிராந்தி ரயிலில் அகமதாபாத்துக்கு பயணம் செய்துகொண்டிருந்தேன். அந்த ரயில் மதியம் புறப்படக்கூடியது. மறுநாள் காலை *6* மணிக்கு அகமதாபாத் போய் சேர்ந்துவிடும்.

ஏப்ரல் மாதம் என்பதால் ரயிலில் நிறையக் கூட்டம். வட இந்தியாவில் ஏப்ரல் மாதத்தில் நிறையக் கோயில்களில் விழாக்கள் நடைபெறுவது வழக்கம். கைலாதேவி கோயில் திருவிழாவுக்குப் போகிறவர்கள் அந்த ரயிலில் இருந்தனர்.

*30* வயது உள்ள ஒரு பெண் எங்கள் கம்பார்ட் மென்ட்டில் அமர்ந்திருந்தார். தனியே பயணம் செய்கிறார் என்பது அவர் ஒடுங்கி உட்கார்ந்து கொண்டு வருவதிலேயே தெரிந்தது.

கிராமப்புற குஜராத்தி பெண்களுக்கே உரிய முக்காடு. நெற்றியில் பெரிய பொட்டு. கையில் கண்ணாடி வளையல்கள். இடது மூக்கில் ஒரு வளையம். காலை ஒடுக்கிக்கொண்டு ஜன்னலை ஒட்டி உட்கார்ந்திருந்தார். காலடியில் இரண்டு பெரிய பைகள் இருந்தன.

கண்களில் பட்டு ஓடும் நிலக் காட்சிகளையும் தூரத்து வீடுகளையும் அடிவானத்தையும் பார்த்தபடியே வந்தேன். பகலில் ரயிலில் நீண்டதூரப் பயணம் செய்வது சுகமான அனுபவம். எத்தனையோ மாறுபட்ட நிலக் காட்சிகளை, ஆறுகளை, குடியிருப்புகளை, சின்னஞ்சிறு ஊர்களைக் காணலாம்.

வேகமாக ஓடிக்கொண்டிருந்த ரயில், பாயனா என்ற ரயில் நிலையத்தில் வந்து நின்றது. எதற்காக ரயில் நிற்கிறது என ஒருவருக்கும் புரியவில்லை. அது நிறுத்தமே இல்லாத இடம். இரண்டு மணி நேரத்துக்கும் மேலாக ரயில் நின்றுகொண்டே இருந்தது. ஆளுக்கு ஆள் இறங்கி விசாரித்துக் கொண்டிருந்தார்கள்.

எங்கள் கம்பார்ட்மென்ட்டில் இருந்து ஒருவர் இறங்கிப்போய் விசாரித்துவிட்டு, ‘இடஒதுக்கீடு கோரி, குஜ்ஜார் இன மக்கள் போராட்டத்தில் ஈடுபட்டுவருகிறார்கள். இதன் ஒரு பகுதியாக ரயில் பாதையை அந்த மக்கள் திரண்டு மறித்திருக் கிறார்கள். சில இடங்களில் ரயில் தண்டவாளத்தைப் பெயர்த்துவிட்டிருக்கிறார்கள். ஆகவே, ரயில் திரும்ப ஆக்ரா போகப்போகிறது’ என்றார்.

அதுவரை யாருடனும் பேசாமல் ஜன்னலுக்கு வெளியே பார்த்துவந்த அந்தப் பெண்ணின் முகம் கலக்கம் அடைந்தது. அவள் மெல்லிய குரலில் ‘ரயில் ரட்லம் போகாதா?’ எனக் கேட்டார்.

ரயில் ஆக்ரா திரும்பப்போகிறது என்பதைப் பற்றி மட்டுமே பேசிக்கொண்டிருந்தார்கள். அவருக்கு யாரும் பதில் சொல்லவில்லை. ரயில் வந்த வழியே திரும்பவும் ஆக்ரா நோக்கிப் போகத் தொடங்கியது

‘எதற்காக ஆக்ராவுக்குத் திரும்பிப்போகிறது… ஒருவேளை ரயில் ரத்துசெய்யப்படுமா?’ என குழப்பமாக இருந்தது. அந்தப் பெண் செய்வதறி யாமல் ‘ரட்லம் போகாதா… ரட்லம் போகாதா?’ எனத் திரும்பத் திரும்பக் கேட்டுக்கொண்டே வந்தார். எவருக்கும் பதில் தெரியவில்லை.

ரயில் ஆக்ரா கன்டோன்மென்ட்டுக்கு வந்து சேர்ந்தபோது இரவாகியிருந்தது. பயணிகள் ரயில் ‘புறப்படுமா… இல்லையா…’ எனத் தெரியாமல் பிளாட்பாரத்தில் அலைந்துகொண்டிருந்தார்கள். ‘ரயில்வே அதிகாரிகளுடன் பேச்சுவார்த்தை நடந்துகொண்டிருக்கிறது’ என்றார்கள்.



அந்தப் பெண் தன்னைக் கடந்து போகிற வருகிறவர்களின் முகத்தைக் கலக்கத்துடன் பார்த்தபடியே ரயில் போகாமல் நின்றுவிட்டால் என்ன செய்வது எனப் புரியாமல் வேதனைப் பட்டுக்கொண்டிருந்தார்.

‘ரயில் அஜ்மீர் வழியாகத் திருப்பிவிடப் படுகிறது’ எனப் பேசிக்கொண்டார்கள். ‘அப்படி யானால் தான் எப்படி ஊருக்குப் போவது, திரும்ப டெல்லிக்குப் போக வேண்டுமா, இல்லை தன்னைப்போல வழியில் இறங்கவேண்டியவர் களை வேறு ரயிலில் போகச் சொல்வார்களா?’ எதுவும் அவருக்குப் புரியவில்லை. யாரிடம் கேட்பது என்றும் தெரியவில்லை. அவர் தனது இயலாமையை நினைத்து அழத் தொடங்கினார்.

அவர் அழுவதை ஒருவரும் பொருட்படுத்தவே இல்லை. ஒரு முதியவர் அவரிடம் ‘இங்கிருந்து ரயில் பிடித்து டெல்லிக்குத் திரும்பப் போய்விடு’ எனச் சொல்லிக்கொண்டிருந்தார். இந்த இரவில் தனியே எப்படிப் போவது?

திடீரென ரயில் புறப்படத் தொடங்கியது. பயணிகள் ஓடிவந்து ஏறினார்கள். ரயில் எந்த வழியாகப் போகப்போகிறது என ஒருவருக்கும் தெரியவில்லை. ரயில் வேகமாகப் பயணிக்கத் தொடங்கியது. அவர்◌ ஜன்னலுக்கு வெளியே தெரியும் இருட்டை வெறித்தபடியே வந்தார்◌. அழுகை அடங்கவே இல்லை.

ரயில் ‘குவாலியர், ஜான்சி வழியாகத் திருப்பி விடப்பட்டுள்ளது’ என்றார்கள். அப்படியானால் ‘உஜ்ஜைனியின் வழியாக ரட்லம் போய்விடும்’ எனவும்... ‘இல்லை போகாது. இது மாற்றுவழியில் நேராக கோத்ரா போய்விடும்’ என்றும் ஆளுக்கு ஒருவிதமாகப் பேசிக்கொண்டார்கள்.

ரயில் எப்போது ஊர் போய் சேரும், ஒருவேளை வேறு ஏதாவது ஊரில் போய் இறக்கிவிட்டால் என்ன செய்வது... அந்தப் பெண்ணுக்கு எதுவும் புரியவில்லை. அழுதுகொண்டே இருந்தார்.

நள்ளிரவில் ரயில் ஏதோ ஒரு ரயில் நிலையத்தில் நின்றது. ஆளுக்கு ஆள் இறங்கி ஓடி, கிடைத்த உணவுகளை வாங்கிக்கொண்டு வந்தார்கள். அவர் எதுவும் வாங்கவில்லை; சாப்பிடவும் இல்லை. அந்த முதியவர் அவருக்கு ‘தேநீர் வேண்டுமா?’ எனக் கேட்டபோதுகூட ‘தேவை யில்லை’ என மறுத்துவிட்டார்.

எப்படியாவது ரயில் தங்களை அகமதாபாத் கொண்டுபோய் சேர்த்துவிடும் என நம்பி பயணிகள் உறங்கத் தொடங்கினார்கள். அந்தப் பெண் அழுதுகொண்டிருக்கும் சத்தம் துல்லியமாகக் கேட்டது. ஒவ்வொரு நிலையத்தில் வந்து ரயில் நிற்கும்போதும் பயத்துடன் வெளியே எட்டிப்பார்த்து, எந்த ஊர் எனப் பார்ப்பார். எதுவும் தெரிந்த ஊர் இல்லை. நிச்சயம் ரயில் தன்னை ஏதோ ஓர் ஊரில் கொண்டுபோய் விட்டுவிடப்போகிறது என்ற பயமும் வேதனையும் வாட்டின.

ரயில் எங்கெங்கோ சுற்றி, காலை *7:30* மணிக்கு ரட்லத்துக்குப் போய் சேர்ந்தது. அந்தப் பெண் இரவு முழுவதும் உறங்கவே இல்லை. தனது ஊர் ரயில் நிலையத்தைக் கண்ட சந்தோஷத்தில் சேலையால் முகத்தைத் துடைத்துக்கொண்டார். ரயில் நின்றதும் வேகவேகமாக இறங்கி ஓடிய போது, இனி ஒருபோதும் ரயிலில் தனியே பயணம்செய்ய மாட்டேன் என்ற முடிவோடு அவர் போனதுபோல் இருந்தது.

எதிர்பாராத தருணங்களில் இப்படி உருவாகும் இடர்பாடுகளைப் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால், இயல்பான ஒரு நாளில் ரயிலில் பல நூறு பேர்களுக்கு மத்தியில் தனக்குப் பாதுகாப்பு இல்லை. நாயின் நாக்கு துடிப்பதுபோல தன்னை ஏதோ ஓர் ஆண் காம இச்சையுடன் வெறித்துக்கொண்டிருக்கிறான். ஆழ்ந்து உறங்கும்போதுகூட உடை லேசாக விலகியிருக் கிறதா, கால்கள் வெளியே தெரிகின்றனவா என கவனமாக இருக்கவேண்டியுள்ளது. முகம் தெரியாத ஒருவருடன் இரண்டு வார்த்தைகள் சம்பிரதாயமாகக்கூடப் பேச முடியவில்லை. அடுத்த நிமிடம் அவன் நோக்கம் மாறிவிடுகிறது என ஒரு பெண் வேதனைப்படுவது சகித்துக்கொள்ள முடியாத குற்றமாகப் படுகிறது.

ரயிலில் ஏறுவதற்கு முன்னர் ஒட்டப் பட்டிருக்கும் ரிசர்வேஷன் சார்ட்டில் தனது கம்பார்ட்மென்ட்டில் எத்தனை பெண்கள் வருகிறார்கள், அவர்களுக்கு என்ன வயது, யார் தனியாக வருகிறார்கள் என்பதை ஆர்வத்துடன் பார்ப்பது பலருக்கும் இயல்பாகி விட்டது. ஒருவேளை அவள் இளம்பெண் என்றால், அவளைப் பற்றிப் பேசப்படும் இரட்டை அர்த்தக் கேலிகள் சகித்துக்கொள்ள முடியாதவை.

எந்த இடத்தில் ஒரு பெண்ணை தனியே சந்தித்தாலும் காம உணர்ச்சியைத் தவிர வேறு எதுவுமே ஒருவன் மனதில் தோன்றாது என்றால்,

உண்மையில் மனநோயாளியாக வாழ்ந்துகொண்டிருக்கிறார்களா... இதைத் தானா கல்வி உருவாக்கித் தந்திருக்கிறது?

தனியே பயணிக்க முடியாது என ஔவை, கிழவியாக வரம்பெற்று உருமாறினாள் எனச் சொல்வார்கள். அதுதான் இதற்கான ஒரே தீர்வா? சமீபத்தில் துருக்கியில் தனியே பயணம் செய்த சராய் சியாரா என்கிற 33 வயது பெண், பாலியல் வன்புணர்வு செய்து கொல்லப் பட்டிருக்கிறாள்.




23 வயது சௌமியா எனும் அழகான பெண்ணை, ஓடும் ரயிலில் வன்புணர்ச்சிசெய்து கீழே தள்ளிக் கொன்ற சம்பவம், சில ஆண்டு களுக்கு முன்னர் நடைபெற்றது. கோழிக்கோடு அருகே ரயிலில் ஒரு ஜெர்மன் பெண்ணை, சக பயணி வன்புணர்ச்சி செய்ததாக செய்தி ஒன்றை சமீபமாகப் படித்தேன்.

எலிசா தூசெட் பாலித்தீவைச் சேர்ந்த இளம்பெண். கடந்த 10 ஆண்டுகளாகத் தனியே உலகைச் சுற்றிவருகிறாள். இவள் தனது பயண அனுபவங்கள் குறித்த ஒரு சொற்பொழிவில் தனியே பெண்கள் பயணம்செய்வதன் பிரச்னைகள் பற்றி பேசியிருக்கிறார்.

‘ ‘தனியே பயணம் செய்ய வேண்டாம். அது ஆபத்து’ எனப் பலரும் என்னை எச்சரிக்கிறார்கள். அது என் மீதான அவர்களின் அக்கறை என்றே புரிந்துகொள்கிறேன். ஆனால், அந்தப் பயத்தின் காரணமாக முடங்கிப்போவதோ, துணை தேடுவதோ என்னால் இயலாது. உலகம் மாறிக்கொண்டிருக்கிறது. அதை யாராலும் தடுக்க முடியாது.

தனியே பயணம் செய்கிற பெண்ணின் உடைதான் பிரச்னைகளுக்கு முதல் காரணம் என்கிறார்கள். அது உண்மை அல்ல. அது ஒரு சப்பையான காரணம். ஆண்களின் மனப்போக்குத்தான் உண்மையான காரணம். தன்னுடைய வீதியிலே ஒரு பெண் இரவில் தனியே நடந்துவர முடியாத சூழல்தானே உள்ளது.

நான் சிலவற்றைக் கணக்கில்கொண்டு பயணிக் கிறேன். கவர்ச்சிக்காக நான் ஒருபோதும் உடை அணிவது இல்லை. அதுபோலவே முன்பின்

அறியாதவர்கள் என்னிடம் உரிமை எடுத்துக்கொள்ள அனுமதிப்பது இல்லை. என் ஹேண்ட்பேக்கில் நான் ஒரு விசில் வைத்திருக்கிறேன். நெருக்கடியான சூழலில் அந்த விசில் என்னைக் காப்பாற்றியிருக்கிறது. பயணத்தில் யாரிடமும் எனது முகவரி மற்றும் வசிப்பிடம் பற்றி பகிர்ந்துகொள்வது இல்லை. மன உறுதியும் தைரியமும்தான் பயணத்துக்கான தேவைகள்; கால மாற்றம்தான் இந்தப் பிரச்னையின் ஒரே தீர்வு.

மாறும் உலகின் கதவுகள் பெண்களுக்கான வழியை உருவாக்கிக்கொண்டே இருக்கின்றன. இதை எப்படிப் பயன்படுத்தப்போகிறார்கள் என்பது அவர்களின் கையில்தான் இருக்கிறது. ஆனால், எச்சரிக்கைகளை நாம் புறக்கணிக்கவேண்டியது இல்லை. அவை நம் மீதான அக்கறை என எடுத்துக் கொள்ளவேண்டியது தான்.

பத்து ஆண்டுகளாக தனியே பயணித்து வருகிறேன். இதில் பல்வேறு தொல்லைகளையும் சிக்கலையும் சந்தித்திருக்கிறேன். இந்த அச்சுறுத் தலுக்காக என்னை ஒடுக்கிக்கொள்ள மாட்டேன். அந்த உறுதிதான் என்னை வழிநடத்துகிறது' என்கிறார் எலிசா தூசெட்.

பொது இடங்களில் கடைப்பிடிக்கவேண்டிய ஒழுக்கத்தைக்கூடத் திரும்பத் திரும்ப வலியுறுத்த வேண்டியிருக்கிறது என்றால், இது நம் கல்விமுறையின் தோல்வி எனச் சொல்வதைத் தவிர வேறு என்ன பதில் இருக்க முடியும்?

- சிறகடிக்கலாம்...

## இந்திய வானம் - 19

## எஸ்.ராமகிருஷ்ணன், ஓவியங்கள்: ரமேஷ் ஆச்சார்யா

### சலங்கை அணிந்த ஒட்டகம்

ஆறு மாதங்களுக்கு முன்பு, மதுரை மீனாட்சி அம்மன் கோயிலுக்குச் சென்றிருந்தபோது, அங்கே ஓர் ஒட்டகத்தைக் கண்டேன். மெலிந்துபோய் உடல் முழுவதும் சிறிய காயங்களுடன் வங்குவத்திப்போனதாகத் தனியே நின்றிருந்தது. 'கோயிலில் எதற்காக ஒட்டகம் வைத்திருக்கிறார்கள்?' எனக் கேட்டபோது, ஒருவருக்கும் பதில் தெரியவில்லை.

சில ஆண்டுகளுக்கு முன்னர் ஓர் ஒட்டகம் கோயிலில் இறந்துபோய்விட்டதாகப் பேசிக்கொண்டார்கள். ஒட்டகங்களை தனிநபர்களோ அல்லது நிறுவனமோ வளர்க்க வேண்டும் என்றால், முறையான அனுமதி பெற வேண்டும். அப்படி அனுமதி வாங்கி வளர்த்தாலும், 'எதற்காக கோயிலுக்கு ஒட்டகம்?' எனப் புரியவே இல்லை. கோயிலைவிட்டு வெளியே வந்தபோதும், வேதனைபடிந்த அந்த ஒட்டகத்தின் முகம் நினைவில் இருந்தது.

ராஜஸ்தானின் புஷ்கரில் நடைபெறும் ஒட்டகச் சந்தையைக் காண ஒருமுறை சென்றிருந்தேன். ஆண்டுதோறும் கார்த்திகை மாதப் பௌர்ணமியை ஒட்டி ஒன்பது நாட்கள் இந்த மேளா நடைபெறுகிறது. தமிழ்நாட்டில் அந்தியூரில் வருஷம்தோறும் குதிரைச் சந்தை நடைபெறுகிறது இல்லையா, அதைப்போல பல மடங்கு பெரியது இந்த மேளா.

ஆயிரக்கணக்கான ஒட்டகங்களை ஒருசேரப் பார்ப்பது வியப்பான ஓர் அனுபவம். உண்மையில் இந்த மேளா ஆடு, மாடு, குதிரை, ஒட்டகம் என விலங்குகளை விற்பனைசெய்யும் மாபெரும் சந்தை. இத்துடன் பந்தயப் போட்டிகளும் ஆடல் - பாடல் கொண்டாட்டங்களும் நடைபெறுகின்றன. சிவப்புத் தலைப்பாகை அணிந்த முகங்கள், வரிசை வரிசையாகக் கூடாரங்கள், ஒட்டகச் சாணத்தைச் சேகரிக்கும் பெண்கள், ஒட்டகங்களுக்குத் தண்ணீர்த்தொட்டிகள், வெளிநாட்டுப் பயணிகள்... என அந்த இடம் ஒரு விசித்திர உலகமாக இருந்தது. காலில் சலங்கை அணிந்த ஒட்டகங்களை அங்குதான் முதன்முறையாகக் கண்டேன். பூ வேலைப்பாடுகள் கொண்ட அலங்கார நூல்கள் அணிவிக்கப்பட்டு, ஒட்டகங்கள் வண்ணமயமாக பவனிவந்தன.



குதிரைகளுக்கு காலில் சலங்கை அணிவித்து ஆட விடுவதை, சில விழாக்களில் கண்டிருக்கிறேன். புஷ்கரில் சலங்கை அணிந்த ஒட்டகங்கள் நடந்து செல்லும்போது எழுப்பும் ஓசை ரம்மியமாக இருந்தது. நூறு ஆண்டு களுக்கும் மேலாக நடந்துவரும் சந்தை இது.

ஒட்டகத்தில் பயணம்செய்வது எளிதானது அல்ல... கப்பலில் போவதுபோல முன்னும் பின்னுமாக ஆட்டம்போடுவதால் இடுப்பு எலும்பு வலிக்க ஆரம்பித்துவிடும். அதுவும் பாலை மணலில் ஒட்டகத்தில் போவது மிகவும் சிரமம்.

ஒட்டகங்களை புஷ்கர் மேளாவில் விற்பனை செய்வதற்காகப் பல்வேறு பகுதிகளில் இருந்து விவசாயிகள் கொண்டுவருகிறார்கள். நாட்கணக்கில் பயணம்செய்து அவர்கள் புஷ்கரை வந்தடைகிறார்கள். நான்கைந்து

விவசாயிகள் ஒன்றுகூடி *10* முதல் *50* ஒட்டகங்களை ஒன்றாக விற்பனைக்குக் கொண்டுவருகிறார்கள். சந்தையில் இள ஒட்டகங்கள் கழுத்தில் வண்ண மாலைகளோ, கறுப்பு நிறக் குறியீடுகளோ செய்யப்பட்டு அடையாளம் தெரிவதற்கு எளிதாக நிறுத்தப்படுகின்றன. வாங்க விரும்புகிறவர்கள் ஒட்டகத்தின் பற்களை, தோல் நிறத்தை, கால்களைப் பரிசோதனை செய்து பார்க்கிறார்கள். 'அதைவைத்து ஒட்டகத்தின் ஆரோக்கியத்தைத் தெரிந்துகொள்ள முடியும்' என்கிறார்கள். ஓர் ஒட்டகத்தின் விலை, *3,000* ரூபாய் தொடங்கி *20* ஆயிரம் ரூபாய் வரை போகிறது. ஆடு, மாடுகளைப்போலவே பேரம்பேசி ஒட்டகங்களை வாங்குகிறார்கள்.

பார்வையற்ற ஒரு ரைக்கா விவசாயி, ஒட்டகங்களை சந்தையில் விற்பதற்காக வந்திருந்தார். 'எப்படி இவ்வளவு தூரம் பயணம்செய்து வந்தீர்கள்?' எனக் கேட்டதற்கு 'ஒட்டகங்களின் துணை இருந்தால் போதும். கண்பார்வை அவசியம் இல்லை. ஒட்டகங்களுக்கு வழி தெரியும்' என்றார்.

'எத்தனை ஆண்டுகளாக புஷ்கருக்கு வருகிறீர்கள்?' எனக் கேட்டதற்கு, 'நினைவுதெரிந்த நாளில் இருந்து வந்து போய்க்கொண்டிருக்கிறேன். முன்னர் இவ்வளவு கூட்டம் இருக்காது. இப்போது பெரிய திருவிழாபோல ஆகிவிட்டது' என்றார்.

அவர் பேசப் பேச வியப்பாக இருந்தது. 'எனக்கு பிறவியிலேயே கண்பார்வை போய்விட்டது. என் தந்தையிடம் இருந்த முப்பது ஒட்டகங்களை மேய்க்கச் செல்லும்போது நானும் செல்வேன். அதன் மூலம் ஒட்டகங்களின் நடை, சத்தம், வாசனையைக்கொண்டு என்னால் ஒட்டகங்களை எளிதாக மேய்க்க முடிந்தது. இப்போது என்னிடம் *18* ஒட்டகங்கள் இருக்கின்றன' என்றார்.

'ஒட்டகப் பால் விசேஷமானது என்கிறார்களே நிஜமா?' என என் நண்பர் அவரிடம் கேட்டதற்கு சிரித்துக்கொண்டே பதில் சொன்னார்...

'ஒட்டகப் பால் சிறந்த மருந்து. ஒட்டகம் பல்வேறுவிதமான இலை-தழைகளைத் தின்னக்கூடியது என்பதால், அதன் பாலில் மருந்துச் சத்துக்கள் இருக்கும். ஒட்டகப் பால் குடித்த ஆண், எண்பது வயதிலும் ஒரு பெண்ணைக் கர்ப்பிணி ஆக்கிவிடுவான். உடலுக்கு அவ்வளவு வலிமை தரக்கூடியது' என்றார்.

ரைக்கா இனத்தவர்கள் தலைமுறை தலைமுறையாக ஒட்டகம் வளர்ப்பவர்கள். அவர்களின் திருமணச் சீதனமே ஒட்டகங்கள்தான். கன்று ஈன்ற பசுவின் பாலைச் சீம்பாலாக இனிப்பு கலந்து உண்பதுபோல ஒட்டகப் பாலையும் இனிப்பு கலந்து படைக்கிறார்கள்.

ஒட்டகம் மூன்று வயதை அடைந்தவுடன் அதை அடையாளம் காண வேண்டும் என்பதற்காக, இரும்புக்கோலால் சூடு போட்டுவிடுகிறார்கள். சிலர் நம்பர் போடுவதும் உண்டு. இறந்துபோன ஒட்டகங்களைக் காட்டில் கொண்டுபோய் போட்டுவிடுவார்கள். அதை ரைக்கா இனத்தவர் உண்பது இல்லை. சில வேளைகளில் ஒட்டகங்களை தேள் அல்லது பாம்பு கடித்துவிட்டால், அதன் கழுத்தில் மந்திரித்த கயிறு கட்டிவிடுவது உண்டு. மழை வரப்போவது ஒட்டகங்களுக்கு முன்கூட்டியே தெரிந்துவிடும் என்பதால், அதை முன்னறிவிப்பாக விவசாயிகள் எடுத்துக்கொள்கிறார்கள்.

50 ஆண்டுகளுக்கு முன்னர் எல்லாம் பெண் ஒட்டகங்களை விற்பனைக்குக் கொண்டுவர மாட்டார்கள். இப்போது பெண் ஒட்டகங்களும் விற்கப்படுகின்றன. கால மாற்றத்தில் ஒட்டகத்தின் மதிப்பு குறைந்துவிட்டது. இப்போது ஒட்டகத்தை நம்பி யாரும் பயணிப்பது இல்லை. கனரக வாகனங்கள் வந்துவிட்டன. ஒட்டகத்தை ராஜஸ்தான் தனது மாநில விலங்காக அறிவித்திருப்பதுடன், இறைச்சிக்காக ஒட்டகத்தைக் கொல்வதையும் தடை செய்திருக்கிறது.

‘தி ஸ்டோரி ஆஃப் வீப்பிங் கேமல்’ என்ற சிறந்த ஆவணப்படம் ஒன்று உள்ளது. அதில் தாயோடு சேர முடியாத குட்டியை, ஒட்டகத்துடன் சேர்க்க யாழ் இசையைப் பயன்படுத்துகிறார்கள். இசை கேட்டு ஒட்டகம் கண்ணீர்விடுவதுடன், தனது குட்டியுடன் சேர்ந்தும்விடுகிறது.



ஒட்டகத்தில் ஏறி அரைமணி நேரம் பயணம் செய்வதே, நமக்கு எல்லாம் அலுப்பாகிவிடுகிறது. ஆனால், நான்கு ஒட்டகங்களுடன் ஒரு பெண் தனியே 1,700 மைல் பயணம் செய்திருக்கிறார். அதைப் பற்றி படித்தபோது வியப்பாக இருந்தது.

1977-ம் ஆண்டில் ரோபின் டேவிட்சன் (Robyn Davidson) என்கிற பெண், ஆஸ்திரேலியாவின் ஆலீஸ் ஸ்பிரிங் என்ற இடத்தில் இருந்து புறப்பட்டு, இந்தியப் பெருங்கடலை ஒட்டிய கடற்கரையை அடைவதற்காக, பாலைவனத்தில் நான்கு ஒட்டகங்கள், ஒரு நாயுடன் 1,700 மைல்கள் தனியே பயணம் செய்திருக்கிறார். நான்கு மாத காலப் பயணம் அது. ஒட்டகத்தில் இவ்வளவு நீண்ட தூரம் பயணம் செய்வது எளிது அல்ல. ஆனால், ரோபின் உறுதியாக இருந்தார். ஆகவே, மூன்று மாத காலம் அவர் ஒட்டகங்களைப் பழக்குவதற்காகப் பயிற்சிகளை மேற்கொண்டார். ஒட்டகங்களுக்கு எப்படி உணவு அளிப்பது, சேணம் அணிவிப்பது, மருந்து தருவது என, அவர் போராடிக் கற்றுக்கொண்டார்.

பயணம் தொடங்கிய முதல் நாள், 20 கிலோமீட்டர் தூரம் போவதற்குள் ஒட்டகங்களில் ஒன்று, கால் தசைப்பிடிப்புக் காரணமாக நடக்க முடியாமல் நின்றுபோனது. முதல் நாள் இரவு வெட்டவெளியில் நெருப்பு மூட்டி குளிர்காய்ந்தபடியே எப்படி மீதம் இருக்கிற 1,680 கிலோமீட்டர் தூரத்தைக் கடக்கப்போகிறோம் எனப் பயமாக இருந்தது. மறுநாள் காலை எழுந்து ஒட்டகங்களுக்கு மருந்து கலந்த எண்ணெய் தேய்த்துவிட்டு, மீண்டும் பயணத்தைத் தொடங்கினார். நான்கு நாட்களின் முடிவில் அவர் பூர்வகுடிமக்களின் வசிப்பிடம் ஒன்றைக் கண்டடைந்தார். அவர்கள் ரோபினை வரவேற்று, தங்கவைத்து உணவு அளித்தார்கள். ஒரு பெண் தனியே பாலையைக் கடந்துபோக முயற்சிப்பது அவர்களுக்கு ஆச்சர்யம் அளித்தது. மறுநாள் அவள் கிளம்பும்போது உணவும், போதுமான தண்ணீரும் தோல் பையில் நிரப்பி உதவிசெய்தார்கள்.

ஒரு வாரத்துக்குப் பிறகு அவர் ஒருநாள் திடீரென மழையை எதிர்கொண்டார். எங்கே ஒதுங்குவது எனத் தெரியவில்லை. ஒட்டகங்களுடன் நனைந்தபடியே அவர் இரவு தங்குவதற்காக இடம் தேடி அலைந்தார். அந்த இரவை தன்னால் மறக்கவே முடியாது எனக் குறிப்பிடுகிறார் ரோபின். பயண வழியில் நான்கில் ஓர் ஒட்டகத்துக்கு மூக்கு வீங்கி நோயுற்றது; மற்றவை சீராக நடந்தன.

வழியில் எங்கோ தொலைந்துவிடுவோமோ என்ற அச்சத்துடனேயே அவர் பயணம் மேற்கொண்டார். இரவில் ஸ்லீப்பிங் பேக்கில் படுத்து உறங்கி, கிடைத்த உணவை உண்டு, சலிப்பு இல்லாமல் தொடர்ந்து பயணம் செய்தார்.

வலியோடும் வேதனையுடனும் இரண்டு மாதங்கள் தொடர்ந்து பயணித்து, பாதி வழியைக் கடந்தபோது ஒட்டகங்கள் நடக்க முடியாமல் கால்கள் வீங்கிச் சிரமப்பட்டன. அந்த நாட்களில் காட்டு எலிகளை வேட்டையாடிச் சாப்பிட்டிருக் கிறார் ரோபின். தண்ணீர் கிடைப்பதுதான் பெரிய சவாலாக இருந்திருக்கிறது. அவரது தோல் உலர்ந்துபோனது. உதடுகள் வெடித்து ரத்தம் சொட்டின. மூக்கின் நுனி சிவந்து எரிச்சல் கண்டது. நான்கு மாத முடிவில் ஒட்டகங்களுடன் கடலைக் கண்டபோது சந்தோஷத்தில் ஆர்ப்பரித்தார். ஒட்டகங்களும் முதன்முறையாகக் கடலைக் கண்டன. அந்தச் சந்தோஷத்தில் ஓடி கடல்நீரைக் குடிக்க முயன்று தோற்றன.

‘ஒட்டகங்கள், மிகுந்த புத்திசாலிகள்; இயற்கையைப் புரிந்துகொண்டவை. அவற்றைக் கொண்டு எந்தச் சவாலையும் எதிர்கொண்டு பயணிக்க முடியும்’ என ரோபின் டேவிட்சன் ஒட்டகங்களுக்கு நன்றி கூறியிருக்கிறார்.

இந்தப் பயணத்தைச் சென்ற ஆண்டு ‘டிராக்ஸ்’ என்ற பெயரில் திரைப்படமாக உருவாக்கியுள்ளார்கள். நேஷனல் ஜியோகிராஃபி சேனலின் ஒளிப்பதிவாளர் ரிக், இதை ஒளிப்பதிவு செய்துள்ளார். ஒட்டகங்களுடன் ஒரு பெண் தனியே பயணம் செய்யும்போது எதிர்கொள்ளும் நெருக்கடிகளும், நீண்ட பயணத்தின் வழியே தன்னை அறிந்துகொள்ளும் தேடலும் சிறப்பாகப் படமாக்கப்பட்டுள்ளது.

ஒட்டகத்தைப்போலவே சிலரது வாழ்க்கையும் மற்றவர்களுக்கான சுமைதூக்கியாகவே முடிந்துவிடுகிறது. அவர்களின் கஷ்டங்களை உடன் இருப்பவர்களும் உறவினர்களும் புரிந்துகொள்வது இல்லை. ‘இவ்வளவுதான் வாழ்க்கை’ என ஒடுங்கிவிடுகிறார்கள். ஆனால், கஷ்டத்தில் உதவும் கரங்கள்தான் வாழ்க்கையின் மகத்துவத்தை அடையாளப்படுத்துகின்றன. அதற்கு உதாரணம், சென்னை வெள்ளத்தின்போது இளைஞர்கள் தன்னெழுச்சியாக மேற்கொண்ட உதவிப்பணிகள்.

பெட்ரோல் பங்கில் வேலைசெய்கிறார் பரணீதரன். 70 வயது இருக்கும். அடிக்கடி சந்திக்கிறவர் என்பதால் உரிமையுடன் ‘மழைக்கு ஊருக்குப் போனீங்களா?’ எனக் கேட்டேன்.

‘எங்க போறது, ஊர்ல யாரு இருக்கா?’ என விரக்திக் குரலில் கேட்டார்.

‘சொந்த ஊர்ல யாருமே இல்லையா?’

‘இருக்காங்க... ஆனா, போக முடியாது; போனாலும் மரியாதையா இருக்காது. தேடிப் போய் எதுக்கு அவமானப்படணும்?’

‘உங்க வீட்டுக்குள்ள வெள்ளம் வந்துருச்சா?’ எனக் கேட்டேன்.

‘வீட்டுக்குள்ளே முழங்கால் அளவு தண்ணீர் வந்துருச்சு. படகில் வந்துதான் காப்பாத்திக் கூட்டிட்டுப்போனாங்க. என் மனைவிக்கு ஞாபக இழப்பு வந்து பல வருஷம் ஆகுது. மழைக்குள்ள என்ன நடக்குதுனே அவளுக்குத் தெரியலை. நாலு நாள் அவளை வெச்சுக்கிட்டு ரொம்பக் கஷ்டப்பட்டேன்.’

‘அப்போகூட ஊருக்குப் போகணும்னு தோணலையா?’

‘போகக் கூடாதுன்னு வைராக்கியமா இருந்தேன்.’

‘அப்படி என்ன கோபம்?’

‘ஊர்மேல என்ன கோபம்? கூடப்பிறந்தவங்க, சொந்தக்காரங்க மேலதான் கோபம். சண்டைபோட்டுப் பிழைப்பு தேடி மெட்ராஸுக்கு வந்தேன். இங்க பாதிப்பேருக்கு மேல நம்மளப்போல வந்தவங்கதானே. சொந்த ஊர் கொடுக்காத எத்தனையோ விஷயங்களை, இந்த ஊர் கொடுத்திருக்கு. வெயிலோ, மழையோ என்ன நடந்தாலும் இந்த ஊரைவிட்டுப் போக மாட்டேன்.’

அவரது குரலில் இருந்த அழுத்தத்தைப் புரிந்துகொள்ள முடிந்தது. அவரே சொன்னார்... ‘கஷ்டத்துல உதவுறதுக்கு இத்தனை ஜனங்கள் இருக்கிறப்போ, எனக்கு என்ன பயம்? என் பேரன் வயசு இருக்கும், பதினாறு வயசு பையன் ஒருத்தன், என் வீட்டுக்குள்ளே புகுந்து என் பொண்டாட்டியைத்

தூக்கிட்டு வெளியே வந்து படகில் ஏத்திவிட்டான். யாரு பெத்த பிள்ளைகளோ ஓடி ஓடி உதவிசெஞ்சாங்க. இன்னொரு தம்பி நாங்க தங்கியிருந்த பள்ளிக்கு வந்து சாப்பாடு, தண்ணி பாட்டில், போர்வை எல்லாம் குடுத்துச்சு. இந்த இளவட்டப் பசங்க செய்த உதவியை நினைச்சு கண்ணீர் வந்துருச்சு. என் வாழ்க்கையில் இதை எல்லாம் இப்போதான் முதல் தடவையா பார்க்கிறேன். மழை பெஞ்சா புதுசா செடி முளைக்கும்னு சொல்வாங்க. இந்த ஊர்ல மழை பெஞ்சு நல்லவங்க நிறைய முளைச்சிருக்காங்க. அவங்க எல்லோரும் நல்லா இருக்கணும்.'

இவரைப்போல நூறாயிரம் பேர் சென்னையில் ஓடி ஓடி உதவிகள்செய்த இளைஞர்களை, தன்னார்வக் குழுக்களை வாழ்த்துகிறார்கள். மழையோ, வெள்ளமோ தமிழ்நாட்டுக்குப் புதிது அல்ல. ஆனால், இந்த இளைஞர் எழுச்சி புதிது. மகத்தான இந்த இளைஞர் சக்தியை ஒன்றிணைத்துச் செயல்படுத்தினால் தமிழ்நாட்டில் பெரிய மாற்றங்கள் நிச்சயம் நிகழும்.

அதற்கான வழிகாட்டுதலை சிந்தனை யாளர்கள், கல்வியாளர்கள், எழுத்தாளர்கள், கலைஞர்கள் எனப் பலரும் ஒன்றிணைந்து மேற்கொள்ள வேண்டும். அதுதான் இந்த நம்பிக்கை வெளிச்சத்தை அடுத்த கட்டத்துக்குக் கொண்டுசெல்லும் சிறந்த செயல்பாடு.

- சிறகடிக்கலாம்...

## இந்திய வானம் - 20

### எஸ்.ராமகிருஷ்ணன், ஓவியங்கள்: ரமேஷ் ஆச்சார்யா

### தீராத சந்தோஷம்!

கர்நாடகாவின் பந்திப்பூர் வனவிடுதியில், சில ஆண்டு களுக்கு முன்னர் மூன்று நண்பர்கள் ஒன்றுசேர்ந்து ஒருவார காலம் தங்கியிருந்தோம். பத்திரிகை, டி.வி., போன் என எதுவும் இல்லாத உலகம். காட்டுக்குள்ளாக நடந்து சுற்றிக்கொண்டு அலைந்தோம். திடீரென ஒருநாள் மதியம், சினிமா பார்க்க வேண்டும் என்ற எண்ணம் உருவானது. யோசிக்க யோசிக்க உடனே சினிமா பார்த்தே ஆக வேண்டும் என்ற உந்துதல் அதிகமானது. நண்பர்களிடம், 'படத்துக்குப் போகலாமா?' எனக் கேட்டேன்

'காலையில் இருந்தே எனக்கு சினிமா பார்க்கணும்னு தோணிக்கிட்டு இருக்கு. போவமா?' என்றான் நண்பன்.

'பக்கத்துல தியேட்டர் எங்கே இருக்குனு தெரியலை' என்றான் இன்னொரு நண்பன்.

ஏன் திடீரென மூவருக்கும் உடனே சினிமா பார்க்க வேண்டும் என்ற எண்ணம் தீவிரமானது எனப் புரியவே இல்லை. விடுதிப் பணியாளரிடம், 'அருகில் சினிமா தியேட்டர் எங்கே இருக்கிறது?' எனக் கேட்டதற்கு, 'டூரிங் தியேட்டர்கூட பக்கத்துல கிடையாது. நீங்க மைசூர் போனா, சினிமா பார்க்கலாம்' என்றார்.



சினிமா பார்ப்பதற்காக *80* கிலோமீட்டர் பயணம்செய்து போவதா என ஒருவரும் ஆட்சேபிக்கவில்லை. உடனே மைசூர் போய் வரலாம் என ஒப்புக்கொண்டார்கள். என்ன படம் பார்க்கப்போகிறோம், எந்த தியேட்டர்... எதுவுமே தெரியாது. சிகரெட் பிடிப்பவர்களுக்கு, திடீரென உடனே சிகரெட் பிடித்தே ஆக வேண்டும் என்ற உந்துதல் எழும்; குடிப்பவர்களுக்கும் அப்படியே. அதுபோலத்தான் சினிமாவும். அடுத்த ஐந்தாவது நிமிடத்தில் நாங்கள் மூவரும் தயாராகியிருந்தோம். விடுதிப் பணியாளரும் எங்களுடன் சினிமா பார்க்க வருவதாகச் சொன்னார். நால்வரும் காரில் கிளம்பியபோது மணி மாலை *4:30.*

*6* மணிக்கு மாலைக் காட்சி தொடங்கக்கூடும். அதற்குள் மைசூருக்குப் போய்ச் சேர்ந்துவிட வேண்டும் என, காரை வேகமாக ஓட்ட ஆரம்பித்தான் நண்பன். ஆனால், காட்டின் சீரற்ற பாதையில் காரில் வேகமாகச் செல்ல முடியவில்லை. சினிமாவுக்குப் போகிறோம் என்பது உற்சாகமாக இருந்தது. தியேட்டருக்குப் போய் சினிமா பார்ப்பது எத்தனை எளிதான செயல். ஆனால், இப்போது அது பெரிய சாகசம் ஆகிவிட்டது. எங்களுடன் வந்த விடுதிப் பணியாளர் தனது திருமணத்தின்போது மனைவியுடன் சினிமா பார்த்ததைக் கூறியதோடு, 'கடந்த பத்து வருடத்தில் ஒன்றிரண்டு சினிமாதான் பார்த்திருக்கிறேன்' என்றார். 'அப்புறம் ஏன் எங்கக்கூட சினிமா பார்க்கக் கிளம்பினீங்க?' என நண்பன் கேட்டதற்கு, 'திடீரென சினிமா பார்க்கணும்னு ஆசை வந்துருச்சு' என வெட்கப்பட்டார்.

'மைசூரில் சினிமா தியேட்டர்கள் எந்தப் பகுதியில் உள்ளன... எது நல்ல தியேட்டர்?' என நண்பன் கேட்டதற்கு, 'எனக்கு எதுவும் தெரியாது. அங்கே போய் கேட்டுக் கொள்ளலாம்' என்றார் விடுதிப் பணியாளர்.

'கன்னடப் படம் அல்லது இந்திப் படம்தான் ஓடும்' என நண்பன் சொன்னான். 'கன்னடப் படத்துக்கே போவோம்' என நான் சொன்னேன். நாங்கள் வழி முழுவதும் சினிமாவைப் பற்றி பேசிக்கொண்டே வந்தோம்.

எனது பள்ளி நாட்களில் தீபாவளி, பொங்கல் தினத்தில் முதல் காட்சி பார்ப்பதற்காக இப்படி ஆவேசமாக வீட்டில் இருந்து கிளம்பிப் போயிருக்கிறேன். தீபாவளி அன்று புதுப் படத்துக்கு டிக்கெட் கிடைத்து படம் பார்ப்பது எளிது அல்ல. காலை *9* மணிக்கு முதல் காட்சி என்பதால், *6* மணிக்கு எல்லாம் டிக்கெட் கவுன்டர் முன்பாகப் பெருந்திரள் கூடிவிடும். அடிதடி, தள்ளுமுள்ளு செய்து கவுன்டர் உள்ளே சென்றால், அது மிக நீண்ட

வளைவாகப் போய்க்கொண்டே இருக்கும். பாதி வரிசை நகர்வதற்குள் டிக்கெட் முடிந்துவிடும். அப்படியே அதே டிக்கெட் கவுன்டருக்குள் அடுத்த ஷோவுக்காக நின்றுகொண்டிருக்க வேண்டும். நெரிசலில் மூச்சுமுட்டும்; வியர்த்து வழியும். புது உடைகள் என்பதால், அது வேறு நசநசப்பை ஏற்படுத்தும். தியேட்டருக்குள் ஓடும் படத்தில் சில வசனங்கள், பாடல்கள் கேட்க முடிவதே ஒரே ஆறுதல்.

அடுத்த ஷோ மதியம் 12 மணிக்கு. அரை மணி நேரத்துக்கு முன்னர் டிக்கெட் கவுன்டரைத் திறப்பார்கள். முண்டியடித்து டிக்கெட் வாங்கி உள்ளே போவதற்குள், வியர்த்து சட்டை நனைந்துவிடும். பெஞ்ச் டிக்கெட்டில் இடம்பிடித்து உட்காருவதற்குள் படம் போட்டுவிடுவார்கள். ஆரவாரமும் ஆர்ப்பரிப்புமாக தியேட்டரில் சினிமா பார்ப்பது மறக்க முடியாத அனுபவம். ஒரு படம் பார்த்து முடித்துவிட்டு அடுத்த படம் பார்க்க இன்னொரு தியேட்டரை நோக்கி ஓடவேண்டும். அங்கே படம் தொடங்கி யிருக்கும். எப்படியும் இரண்டு, மூன்று படங்களைப் பார்த்து முடித்தால்தான் தீபாவளி கொண்டாடிய சந்தோஷம் இருக்கும்.



கல்லூரி நாட்களில் புதுப்படம் ரிலீஸ் ஆகும்போது முன்னதாகவே டிக்கெட் ரிசர்வ் செய்து, முதல் காட்சிக்கு நண்பர்கள் ஒன்றாகப் போய் வருவது இனிமையான அனுபவம். தியேட்டர் கேன்டீனில் விற்கப்படும் கோன் ஐஸ், முட்டைபோண்டாவுக்காகவே சினிமா பார்க்க வருபவர்கள் இருந்தார்கள். என் கல்லூரி நாட்களில் அநேகமாக எல்லா இரவிலும் தவறாமல் இரவுக் காட்சி சினிமா பார்த்திருக்கிறேன். பார்த்த படத்தைத் திரும்பத் திரும்பப் பார்க்கிறோம் என்ற சலிப்பு உருவானதே இல்லை. இரவுக் காட்சிக்குப் பிறகு ஆளற்ற வீதியில் நடந்தபடியே தேநீர் குடிப்பதற்காக அலைவது இன்னோர் அனுபவம். என்னைப் போன்ற இரவுவாசி களுக்காகவே நிச்சயம் ஒரு தேநீர் கடை திறந்திருக்கும். சூடான தேநீரை கையில் வைத்துக்கொண்டு உறங்கும் நகரத்தை, வேடிக்கை பார்த்துக்கொண்டிருப்பேன். சினிமா, நம் அனைவரின் வாழ்க்கையிலும் தவிர்க்க முடியாதது; அன்றாட உணவைப் போல மாறியிருக்கிறது.

இந்தியாவின் பல்வேறு நகரங்களில், சிறுநகரங்களில், கிராமப்புறங்களில் சினிமா பார்த்திருக்கிறேன். இன்று வரை சினிமா பார்க்கும் ஈர்ப்பு குறையவில்லை. எனக்கு டைட்டில் தொடங்கி, கடைசிக் காட்சி வரை பார்க்க வேண்டும். அதனால், ‘படம் தொடங்கு வதற்குள் மைசூர் போய் ஆக வேண்டும்’ எனச் சொல்லிக்கொண்டே இருந்தேன். காட்டை விட்டு வெளியேறி, பிரதான சாலையைத் தொடும்போது கார் டயர் வெடித்து நின்று போனது. ஸ்டெப்னியில் போதுமான காற்று இல்லை. ‘டயரைக் கழற்றி எடுத்துக்கொண்டு போய், சரிசெய்து வர வேண்டும்’ என்றான் நண்பன். எரிச்சலாக வந்தது.

‘பேசாமல் அவனைத் தனியே விட்டுவிட்டு நாம் பஸ் பிடித்து சினிமாவுக்குப் போய் வந்துவிடலாம்’ என்றான் நண்பன்.

‘இல்லை... தாமதம் ஆகும் என்றால் இரவுக் காட்சி பார்க்கலாம்’ என்றேன்.

அதுவும் நல்ல யோசனைதான் என்றபடியே, டயரை எடுத்துக்கொண்டு லாரி ஒன்றில் லிஃப்ட் கேட்டுக் கிளம்பிப்போனார்கள். காரின் மீது சாய்ந்துகொண்டு நான் பார்த்த படங்களைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்தேன்.

மதுரை ரீகல் தியேட்டரில் ஆங்கிலப் படங்களைத் தொடர்ச்சி யாகத் திரையிடுவார்கள். அங்கே புரூஸ்லீயின் ‘என்டர் தி டிராகன்’ படம் தமிழ்ப் படத்துக்கு இணையான வரவேற்புடன் ஓடியது. ‘ஷோலே’, ‘ஆராதனா’, ‘பாபி’, ‘யாதோங்கி பாரத்’ என பல முக்கியமான இந்திப் படங் களை மொழி புரியாமலே மக்கள் கொண்டாடினார்கள். ‘சங்கராபரணம்’ வெள்ளி விழா கொண்டாடியது. ஒருமுறை, ஆங்கிலத்தில் மொழிமாற்றம் செய்யப்பட்ட ஜப்பானியப் படம் ஒன்றை ரீகல் தியேட்டரில் பார்த் தேன். அதுதான் நான் பார்த்த முதல் ஜப்பானியப் படம். கொட்டும் பனியும் வயதான பெண் ஒருத்தியைத் தூக்கிக்கொண்டு மலையேறும் மகனும் நினைவில் அழியாதப் படிமங்களாக இருந்தார்கள். அந்தப் படம் ‘பேலட் ஆஃப் நாராயாமா’ என்ற புகழ்பெற்ற ஜப்பானியப் படம் என்பதை பின்னாளில் அறிந்தேன்.

சென்னைக்கு வந்தபோது சர்வதேசத் திரைப்படங்களைக் காண்பதற்காக திரைப்பட சங்கங்களில் உறுப்பினர் ஆனேன். தவிர, மாக்ஸ்முல்லர் பவன், அமெரிக்கன் எம்பசி, அலியான்சே பிரான்ஸ் போன்ற இடங்களில் காட்டப்படும் பிறமொழிப் படங்களையும் தேடித் தேடிப் பார்த்தேன். அப்போதுதான் உலகத் திரைப்பட விழாக்களுக்காக டெல்லி போவது தொடங்கியது. உலகின் மிகப் பெரிய ஐமேக்ஸ் அரங்குகளில் படம் பார்த்திருக்கிறேன். இன்னோர் உலகுக்குள் நாம் பிரவேசித்துத் திரும்புவதுபோல சிலிர்ப்பூட்டும் அனுபவம் அது.

கார் டயரைச் சரிசெய்துகொண்டு திரும்பிவந்தபோது *6:30* மணி. நாங்கள் மைசூரை அடைந்தபோது, இரவு *8* மணி. ஒரு ஹோட்டலில் டிபன் சாப்பிட்டு விட்டு எந்தப் படத்துக்குப் போகலாம் என விசாரித்து, தியேட்டரைத் தேடிச் சென்றோம். ‘*10:30* மணிக்குதான் இரவுக் காட்சி’ என்றார்கள். பழைய காலத் திரையரங்கு. அதன் முன்னர் காரை நிறுத்திவிட்டு, நடந்து தேநீர் குடிக்கப் போனோம். ஒரு கன்னடப் படம் பார்க்க எதற்காக இத்தனை சிரமங்களை எடுத்துக்கொண்டிருக்கிறோம்? ஒருவரை யொருவர் பார்த்துச் சிரித்துக்கொண்டோம்.

இரவுக் காட்சிக்குக் கூட்டமே இல்லை. லக்ஸ் சோப் விளம்பரம் ஓடியது. எத்தனையோ வருடங்களுக்குப் பிறகு லக்ஸ் சோப் விளம்பரம் பார்க்கிறேன். திடீரென பதின்ம வயதுக்குத் திரும்பிப் போய்விட்டதுபோல் இருந்தது. படம் முடிந்து வந்தபோது மூவரும் களைத்து, சோர்ந்துபோய் இருந்தோம்.




எங்களுடன் வந்த விடுதிப் பணியாளர் படம் தொடங்கிய ஐந்து நிமிடத்தில் வெளியே போனவர், படம் முடியும் வரை தியேட்டரின் வெளிவாசலில் உட்கார்ந்தே இருந்தார். அவரிடம், 'படம் பிடிக்கவில்லையா?' எனக் கேட்டேன்.

'இல்லை சார், வொய்ஃப், பிள்ளைகள் ஞாபகம் வந்துருச்சு. நாங்க எல்லாரும் சேர்ந்து சினிமா பார்த்து எத்தனையோ வருஷம் ஆச்சு. ஊர்ல அவங்க என்ன கஷ்டப்படுறாங்களோ, நான் ஊருக்கே போறது இல்லை சார். அந்த கெஸ்ட்ஹவுஸ்லயே கிடக்கேன். சினிமா பார்க்க ஆரம்பிச்சதும் ஊருக்குப் போகணும்னு தோணுச்சு. ரெண்டு நாள் நான் போயிட்டு வந்துர்றேன் சார். கொஞ்சம் பணம் வேணும்' என்றார். அவருக்கு *500* ரூபாய் கொடுத்தோம். 'எந்த ஊர்?' எனக் கேட்டதற்கு, 'ஹசன் பக்கம் சார். லாரி பிடிச்சுப் போயிருவேன்' என, அவர் இருட்டில் நடந்துபோனார்.

'இரவில் மறுபடியும் காரை ஓட்டிக்கொண்டு பந்திபூர் போவது கஷ்டம்' என்றான் நண்பன். 'இங்கேயே காரை நிறுத்திவிட்டு காருக்குள் படுத்துவிடலாம்' என்றான் இன்னொரு நண்பன்.

வாட்ச்மேனிடம் சொல்லிவிட்டு தியேட்டர் வாசலில் நிறுத்தியிருந்த காருக்குள் மூவரும் படுத்து உறங்கினோம். காலை வெயில் வந்தபோதுதான் உறக்கம் கலைந்தது. ஒரு சினிமா பார்ப்பதற்காக இவ்வளவு தூரம் வந்து, இப்படி தியேட்டர் முன்பாக உறங்கி எழுவது எங்களுக்கே வேடிக்கையாக இருந்தது. மறுபடியும் காரை பந்திப்பூர் நோக்கி ஓட்டிக்கொண்டு திரும்பியபோது, நண்பன் கன்னடப் பாடலை முணுமுணுக்கத் தொடங்கினான். நேற்று பார்த்த படத்தில் வந்த பாடல் அது.

'என்னடா பாட்டு இது?' எனக் கேட்டேன்.

'யாருக்குத் தெரியும். படம் ஒண்ணும் புரியலை. ஆனா, நல்ல பாட்டு' என்றான்.

நாங்கள் சிரித்துக்கொண்டோம். காடு எங்களை மறுபடியும் வரவேற்றது. உள்ளே நுழைந்த மறுநிமிடம் விடுதிப் பணியாளரைப் போலவே நாங்களும், குடும்பத்தைப் பற்றி நினைக்கத் தொடங்கினோம். அறையை உடனே காலி செய்துவிட்டு, சென்னையை நோக்கிப் பயணிக்கத் தொடங்கினோம். பெட்டிக்கடை ஒன்றில் காரை நிறுத்தி கிடைத்த எல்லா நியூஸ்பேப்பர்களையும் நண்பன் வாங்கிக்கொண்டான். செல்போன் அடிக்கத் தொடங்கியது. உலகின் பரபரப்பு தொற்றிக்கொண்டது. வெள்ளிக்கிழமை ரிலீஸ் ஆகப்போகிற புதுப் படத்தின் விளம்பரங்கள் வந்திருந்தன.

'ஃபிரைடே, படத்துக்குப் போவமா?' எனக் கேட்டேன்.

'நோ சான்ஸ். வேலை இருக்கும்' என, இருவரும் சொன்னார்கள். அவர்கள் இயல்புலகுக்குள் திரும்பியிருந்தார்கள்.

'வெள்ளிக்கிழமை என்ன படம் பார்ப்பது?' என நான் யோசித்துக்கொண்டே வந்தேன். சென்னைக்குள் நுழைந்தபோது பூந்தமல்லி தியேட்டர் ஒன்றில் போஸ்டரை வெறித்துப்பார்த்தபடியே இரண்டு ஸ்கூல் பையன்கள் பையுடன் நின்றுகொண்டி ருந்தார்கள். நான்தான் அந்தப் பையன் என நினைத்து சந்தோஷப்பட்டுக்கொண்டேன். செய்து முடிக்கவேண்டிய சினிமா வேலைகள், எழுதித் தரவேண்டிய கட்டுரைகள், ஒப்புக்கொண்ட கூட்டங்கள், சந்திக்க வேண்டிய நபர்கள் என செல்போன் அழைப்புகள் தொடரத் தொடங்கின.

ஊர் வந்து சேர்ந்த சில நாட்களில் காட்டில் அடைந்த அனுபவங்கள் யாவும் மறைந்துபோயின. ஆனால், மைசூர் போய் சினிமா பார்த்த அனுபவம், இன்றும் பசுமை யாக நினைவில் இருக்கிறது. நம் அனைவருக் குள்ளும் சினிமா பார்க்கப்போன மறக்க முடியாத அனுபவங்கள் மேகங்களாக மிதந்துகொண்டிருக்கின்றனதானே!

- சிறகடிக்கலாம்...

## இந்திய வானம் - 21
## எஸ்.ராமகிருஷ்ணன், ஓவியங்கள்: ரமேஷ் ஆச்சார்யா

### இட்லி ஒழிக!

ஒடிசாவில் உள்ள சில்கா ஏரியைக் காண்பதற் காகச் சென்றிருந்தேன். மிகப் பெரிய ஏரி அது. படகில் சென்றால் டால்பின்கள் துள்ளுவதைக் காணலாம். கடலைப்போல கண்கொள்ள முடியாத பரப்பளவு தண்ணீர் விரிந்துகிடக்கிறது. குளிர்காலத்தில் வெளிநாட்டுப் பறவைகள் இங்கே கூட்டம் கூட்டமாக வந்து சேர்கின்றன. சில்கா ஏரியில் சிறியதும் பெரியதுமாக நிறையத் தீவுகள் உள்ளன. ஒன்றில் பெரிய காளி கோயில் இருக்கிறது.

காலை *10* மணி அளவில் படகில் ஏறி, மதியம் வரை சுற்றிக்கொண்டே இருந்தோம். டால்பின்கள், கண்கள் முன்னே துள்ளியோடி மறைந்தன. சில்கா ஏரி கடலில் சங்கமிக்கும் சத்படா பகுதிக்குப் போய் இறங்கி, மணலில் நடந்து சுற்றினோம்.

மதியம் *2:30* மணி இருக்கும். நல்ல பசி. சில்கா கெஸ்ட் ஹவுஸில் சாப்பிடச் சென்றோம். ஆட்கள் யாருமே இல்லை. காத்திருக்கவைத்து, சாப்பிடுவதற்காக ரொட்டியும் தால் மக்கனியும் கடாய் பனீரும் தந்தார்கள். அவ்வளவு நேரம் காத்திருந்தது வீண் அல்ல என உணர்ந்தேன். வெகு ருசியான உணவு. சுடச்சுட ரொட்டிகள் தந்தபடியே இருந்தார்கள்.

'வட இந்தியர்கள் ரொட்டியை, தினமும் அலுத்துப் போகாமல் எப்படிச் சாப்பிடுகிறார்கள்?' எனச் சலித்துக் கொள்ளும் நான், அன்று விரும்பி ரொட்டி சாப்பிட்டேன்.

உடன் வந்த நண்பர் சொன்னார்...

'மணி இப்போது *3:30*. நமக்குப் பசி அதிகமாகிவிட்டது. அதுதான் ருசிக்குக் காரணம்.'

'அப்படி அல்ல. அவசரத்தில் செய்யப்படும்போது சில நேரம் உணவுக்கு ருசி கூடிவிடுகிறது. பல நேரம் ருசி இல்லாமலும் போய்விடுகிறது. இன்று நாம் அதிர்ஷ்ட சாலிகள்' என்றேன்.

வருடங்கள் கடந்தபோதும் இன்றும் அந்த ருசி நாக்கில் தங்கியிருக்கிறது. எப்போதுமே நல்ல சாப்பாடும், அதைச் செய்து தந்தவர்களும் நம் நினைவில் இருந்து மறைவதே இல்லை. ஏக்கத்துடன் அதை நினைவுகொள்வதோ, அதே ருசியை வேறு எங்கேயாவது உணரும்போது கண்ணீருடன் நினைவுகொள்வதோ தவிர்க்க முடியாதது.



உணவு, எத்தனையோ அற்புதங்களை நிகழ்த்திவிடக்கூடியது. கூடி உண்பதும், விருப்பமான உணவு எது என அறிந்து சமைத்துத் தருவதும் உறவை வலுப்படுத்தக்கூடியவை.

*'How Green Was My Valley'* என்ற ஹாலிவுட் படத்தில் உறைபனியில் சிக்கி, நடக்க முடியாமல் கிடக்கும் பெண்ணுக்காக ஊரே கூடி பிரார்த்தனைசெய்கிறார்கள். அந்தப் பெண் நலம் அடைந்துவிடுகிறாள். தங்களுக்காகப் பிரார்த்தனை செய்தவர்களுக்கு அவளது கணவன் நன்றி கூறுகிறான். தன் மனைவியையும் நன்றி கூறச் சொல் கிறான். அவளால் பேச முடியவில்லை. நெகிழ்ந்துபோய், 'உங்கள் அனைவருக்கும் இன்று என் வீட்டில்தான் சாப்பாடு' என அறிவிக்கிறாள். அன்பை வேறு எப்படிக் காட்ட முடியும் என்பதற்கு அது ஒரு சிறந்த உதாரணம்.

யோசித்துப்பார்த்தால் நம் வீட்டுச் சாப்பாடு எப்போதும் அடுத்த வீட்டுப் பிள்ளைகளுக்கு ருசியாக இருக்கிறது. நமக்கு அடுத்த வீட்டுச் சாப்பாடுதான் ருசிக்கிறது. ஆனால், 'அடுத்த வீட்டுக்குப் போய்ச் சாப்பிடக் கூடாது' என கண்டித்து, பிள்ளைகளை வளர்க்கிறோம். சில நேரம் ஆசையை அடக்க முடியாமல் அடுத்த வீட்டில் சாப்பிட்டுவிடும் பிள்ளைகள், அது தெரிந்துவிடாமல் மறைக்கிறார்கள்; பொய் சொல்கிறார்கள். ஆனால், அவர்களின் கள்ளச்சிரிப்பு உண்மையைக் காட்டிக்கொடுத்து விடுகிறது. சிறுவர்களுக்கு எவ்வளவு சாப்பிட்டாலும், பசி வயிற்றில் இருந்துகொண்டேதான் இருக்கிறது. அதை பெரியவர்களால் ஒருபோதும் புரிந்துகொள்ளவே முடியாது. சிறுவர்களின் பசியும் ருசியும் உணர்ச்சி வெளிப்பாடும் விளக்க முடியாதவை.

எட்கர் கீரத் என்கிற இஸ்ரேலிய எழுத்தாளர், 'பன்றியை உடைத்தல்' என்று ஒரு சிறுகதை எழுதியிருக்கிறார். பார்ட் சிம்சன் பொம்மை ஒன்றை வாங்குவதற்காக, பீங்கான் உண்டியலில் காசு சேர்த்து வைக்கிறான் ஒரு சிறுவன். அந்த உண்டியல் ஒரு பன்றி வடிவில் உள்ளது. அதனுள் தனக்குக் கிடைக்கும் காசுகளை எல்லாம் சிறுவன் சேகரித்துவருகிறான். ஒவ்வொரு நாளும் அந்த உண்டியலை கையில் வைத்துக்கொண்டு பன்றியோடு பேசுவான். தனது ஆசையை அதனிடம் விவரிப்பான். இப்படியாக அந்தச் சிறுவன் பன்றியை மிகவும் நேசித்தான்.

ஒருநாள் உண்டியல் நிறைந்துவிடுகிறது. அவன் ஆசைப்பட்டதுபோல கடைக்குப் போய் பொம்மை வாங்கிவிடலாம் என, உண்டியலை உடைக்க சுத்தியலை எடுக்கிறார் பையனின் தந்தை. ஆசை ஆசையாக வைத்துள்ள பன்றியை உடைத்துத்தான் நாணயங்களை வெளியே எடுக்க வேண்டும் என்பது பையனுக்கு வருத்தம் அளிக்கிறது.

அதைத் தடுப்பதற்காக 'நாளைக்கு உடைக்கலாம்...' என அப்பாவைச் சமாதானம் செய்கிறான். அன்று இரவு எல்லோரும் உறங்கிய பிறகு, அந்தப் பன்றியை தன் கையில் எடுத்துக்கொண்டு போய் ஒரு வயலில் வைத்து, 'வயலுக்குள் ஓடி ஒளிந்துகொண்டுவிடு...' எனச் சொல்லிவிட்டு ஆசையோடு அதன் மூக்கைத் தடவுகிறான்.

அதைத் தவிர, அந்தப் பன்றியைக் காப்பாற்ற அவனுக்கு வேறு வழி தெரியவில்லை என, கதை முடிகிறது.

வெறும் பீங்கான் பன்றிதான் என்றபோதும், அதை நேசிக்கிற சிறுவன், பன்றி உடைபடாமல் காப்பாற்றப்பட வேண்டும்; அதனால் தனது பொம்மை வாங்கும் ஆசை பறிபோனால்கூடப் பரவாயில்லை என நினைக்கிறான். இதுதான் சிறார்களின் மனது.

சிறுவயதில் போதுமான சாப்பாடு கிடைக்காமல் ஏங்கிப்போனவர்கள், வாழ்நாள் முழுவதும் அதை நினைவில் வைத்துக்கொண்டே இருக்கிறார்கள். புதிதாக வேலைக்குச் சேர்ந்தவுடன் சிலர் நிறையச் சாப்பிடுவதற்கு இதுவே காரணம். சாப்பாட்டைக்கொண்டு அதைச் செய்தவர் எப்படி இருப்பார் என யூகிக்கவே முடியாது. அக்கறைதான் உணவுக்கு ருசியை உருவாக்குகிறது.

இந்தியில் வெளியான 'தி லஞ்ச்பாக்ஸ்' படத்தில், மும்பையில் வசிக்கும் ஒரு பெண், டப்பாவாலாவிடம் தன் கணவனுக்கு உணவு கொடுத்து அனுப்புகிறாள். அது வேறு ஒருவனுக்குப் போய்விடுகிறது. அவன் அதை ரசித்துச் சாப்பிட்டு, பாராட்டுக் கடிதம் எழுதி அனுப்புகிறான். அதன் வழியே அவர்களுக்குள் ஓர் உறவு ஏற்படுகிறது. உணவால் ஏற்படும் அந்த உறவுக்கு என்ன பெயர்? வெறும் தோசை, தக்காளிச் சட்னியால் ஒரு திருமணம் முடிவானதைப் பற்றி நீங்கள் அறிந்திருக்க முடியாது. எனது நண்பர் சேதுராமன் தன் மகனுக்கு மணம்முடித்தது அப்படித்தான்.

இந்திரா காந்தி கொல்லப்பட்ட நாளில், திடீரென பேருந்துகள் ஆங்காங்கே நிறுத்தப்பட்டன. கடைகள் மூடப்பட்டு பதற்றமான சூழல் உருவானது. சென்னையில் இருந்து குடும்பத்துடன் தென்காசிக்கு காரில் பயணம் செய்துகொண்டிருந்த சேதுராமனின் கார், மதுரையை அடுத்த திருநகரைத் தாண்டியதும் நிறுத்தப்பட்டது. சாலையில் தொடர்ந்து பயணிக்க முடியாத நெருக்கடி.

எங்கே போவது, என்ன செய்வது எனப் புரியாமல் தடுமாறிப்போனார். அருகில் தங்குவதற்கு லாட்ஜ் எதுவும் இல்லை. மனைவி, மகள், பேரன், பேத்திகளை வைத்துக்கொண்டு இந்த இரவை எப்படிக் கடப்பது எனப் புரியாமல் காரை மெதுவாக ஓட்டிக்கொண்டு வந்து ஒரு வீட்டின் முன்பு நிறுத்திவிட்டு, 'இரவு மட்டும் தங்க இடம் கிடைக்குமா?' எனக் கேட்டார்.

அந்த வீட்டில் இருந்தவர்கள் தங்கிக்கொள்ள அனுமதி தந்தார்கள். வீடு தேடி வந்துவிட்டவர்களின் பசியை ஆற்றுவதற்காக தோசையும் மிளகாய்ப்பொடியும் தக்காளிச் சட்னியும் செய்துகொடுத்தார்கள்.

அடுத்த வீடு எனப் பார்க்காமல் ஐந்து தோசைகள் சாப்பிட்டார் சேதுராமன். அதோடு ‘சட்னி செய்தவர் யார்?’ எனக் கேட்டார்.

கல்லூரி படித்துக்கொண்டிருக்கும் மலர்விழி என அறிந்துகொண்டு அவளைப் பாராட்டினார். மறுநாள் நிலைமை சீரானதும் அந்தக் குடும்பத்துக்கு நன்றி தெரிவித்துவிட்டு, காரை எடுத்துக்கொண்டு தென்காசிக்குப் புறப்பட்டார்.

இது நடந்த அடுத்த ஆண்டு, அமெரிக்காவில் உள்ள சேதுராமனின் மகனுக்குப் பெண் பார்க்கும் போது திடீரென மலர்விழியின் நினைவுவந்தது. நேரடியாக, திருநகருக்குச் சென்றார். தன் மகனுக்கு மலர்விழியைப் பெண் கேட்டார். இரண்டு குடும்பங்களும் பேசி முடிவுசெய்து திருமணமும் நடந்துவிட்டது.

‘எப்படி அந்தப் பெண்ணைத் தேர்வு செய்தீர்கள்?’ எனப் பலரும் சேதுராமனிடம் கேட்டதற்கு அவர் சொன்ன பதில்... ‘எங்களை யாரோ எவரோனு நினைக்காமல் எங்கள் பசி அறிந்து, அந்தப் பொண்ணு தோசையும் சட்னியும் செய்து குடுத்துச்சு. அப்படிப்பட்ட மனசும் கைப்பக்குவமும்கொண்ட பொண்ணுதான் வீட்டுக்கு மருமகளா வரணும்னு ஆசைப் பட்டேன். என் மகனுக்கும் பெண்ணைப் பிடிச்சிருந்தது. அவங்க வீட்ல பேசி சம்மதிச்சாங்க. உண்மையைச் சொல்லணும்னா... அந்தத் தக்காளிச் சட்னிதான் இந்தக் கல்யாணத்துக்குக் காரணம்.’




இந்தியச் சமூகத்தில்தான் இதுவெல்லாம் சாத்தியம்.

ஒருமுறை பழைய பேப்பர் கடை ஒன்றில் பள்ளி மாணவன் ஒருவனின் நோட்டு கீழே கிடப்பதைக் கண்டேன். குனிந்து எடுத்துப் பார்த்தபோது அந்த நோட்டின் முதல் பக்கத்தில், ‘இட்லி ஒழிக!’ எனப் பெரியதாக எழுதப்பட்டிருந்தது.

அதைப் பார்த்தவுடன் சிரிப்பு வந்தது. இட்லியால் மிகவும் பாதிக்கப்பட்ட பையன் போலும்.

இட்லி பிடிக்கவில்லை என்பதைவிடவும் தினமும் நூடுல்ஸ் தரப்படுவதில்லை என்பதுதான் இந்தக் கோபத்துக்குக் காரணமா?



எதற்காக தனது பள்ளி நோட்டில் ‘இட்லி ஒழிக!’ என எழுதிவைத்திருக்கிறான் என நினைத்து, சிரித்தபடியே அந்தப் பக்கத்தை மட்டும் தனியே கிழித்து எடுத்துவைத்துக்கொண்டேன். இட்லியின் மீதான கோபம் தலைமுறைகளைத் தாண்டியும் தீரவில்லைபோலும். அந்தக் கால குடும்பங்களில் இட்லி, தோசைக்கு மாற்று கிடையாது. அதுவே விவசாயக் குடும்பங்களில் ஆடம்பரம். அபூர்வமாக அடையோ, இடியாப்பமோ, உப்புமாவோ செய்வார்கள்.

சப்பாத்தி என்பது, நோயாளிகள் உணவு என எனது கிராமத்தில் கருதப்பட்டது. ஆகவே, அபூர்வமாக சப்பாத்தி செய்வார்கள். விருந்தாளிகள் வந்தால் மட்டுமே பூரி செய்யப்படும். தீபாவளி, பொங்கல் நாட்களில் டவுசர் பையில் சோளதோசையைச் செருகிக்கொண்டும் தின்றுகொண்டும் திரியும் சிறுவர்களை நான் அறிவேன்.

பள்ளி நாட்களில் தினமும் காலையில் இட்லி சாப்பிட்டுவிட்டு, டிபன் பாக்ஸிலும் இட்லி கொண்டுவரும் பையன்கள் நான் படித்த பள்ளியில் அதிகம் இருந்தார்கள். பல நேரங்களில் அவர்கள் மற்ற மாணவர்களின் டிபன் பாக்ஸைப் பிடுங்கிச் சாப்பிட்டுவிடுவார்கள். பள்ளி நாட்களில் இட்லி சாப்பிடப் பிடிக்காத பையனாகத்தான் நானும் இருந்தேன். ஆனால், காலம் அதன்

அருமையை உணர்த்திவிட்டது. இட்லி எவ்வளவு ருசியான உணவு என்பதை இன்று உணர்ந்து சாப்பிடுகிறேன்.

இந்தியாவின் சிறந்த காலைச் சிற்றுண்டிகளில் ஒன்று இட்லி. வெளிநாடுகளில் சுற்றி அலையும் போது திடீரென இட்லி சாப்பிட்டே ஆக வேண்டும் என்ற ஆசை வந்துவிடும். அதற்காக இந்திய உணவகம் தேடி சுற்றியலைந்து, இட்லியைக் கண்டுபிடித்துச் சாப்பிட்டு முடிக்கும் போது ஊருக்கே போய் வந்த சந்தோஷம் கிடைக்கும். வயதுதான் உணவுக்கு ருசி தருகிறது போலும். பள்ளி வயதில் சாப்பிடப் பிடித்த உணவுகள் இன்று விருப்பமாக இல்லை. *20* வயதில் எதைச் சாப்பிட்டாலும் ருசியாகத்தான் இருந்தது. *30* வயதில் நல்ல உணவைத் தேடிப் போய்ச் சாப்பிட ஆசையாக இருந்தது. *40* வயதில் எதைச் சாப்பிடுவது, எதை ஒதுக்குவது என யோசிக்கவைத்தது. இப்படி வயது ஏற, ஏற 'உணவு ருசிக்கானது அல்ல; அது ஆரோக்கியத்துக்கானது' என்ற புரிதல் உருவானது. ஆனாலும் பழகிய நாக்கு எளிதில் அடங்காது தானே! ருசியைத் தேடத்தான் செய்கிறது.

இந்தியாவைப் போல இத்தனை ருசிகரமான உணவு வகைகள் வேறு எந்தத் தேசத்திலும் கிடைக்குமா தெரியவில்லை. ஒவ்வோர் இரண்டு மணி நேரப் பயண தூரத்துக்கும் உணவு மாறிவிடுகிறது. காரமும் புளிப்பும் இனிப்பும் மாறுபடு கின்றன. எத்தனைவிதமான உணவு வகைகள். சைவம், அசைவம் எதுவாக இருந்தாலும் ஒவ்வொரு மாநிலத்திலும் எவ்வளவு மாறுபட்ட உணவு வகைகள்... ருசிகள். இந்தியாவை ஒன்றிணைப்பது உணவுதான். இந்தியாவின் உணவுப் பண்பாடு, மிகவும் தொன்மை யானது; பருவ காலத்துக்கு ஏற்ப மாறக்கூடியது. நகர வாழ்வில் அதைத்தான் நாம் தொலைத் திருக்கிறோம்.

நம் பெற்றோர் நமக்குத் தந்த ஆரோக்கியமான உணவு வகைகளை, ருசியை, நம்மால் நம்முடைய பிள்ளைகளுக்குத் தர முடியவில்லை. அவர்கள் அனுபவிக்கிற ருசி, நமக்கு அந்நியமாக இருக்கிறது.

யார் எதைச் சாப்பிட வேண்டும், யாரிடம் அனுமதி கேட்க வேண்டும் என உணவு அரசியலாகிப்போன இன்றைய இந்தியாவில், 'இட்லி ஒழிக!' என ஒரு சிறுவன் எழுதியிருப்பதும் ஓர் அரசியல் செயல்பாடுதானோ என்னவோ!

- சிறகடிக்கலாம்...

## இந்திய வானம் - 22
## எஸ்.ராமகிருஷ்ணன், ஓவியங்கள்: ரமேஷ் ஆச்சார்யா

### மௌனத் துணை

ஒருமுறை நானும் எழுத்தாளர் கோணங்கியும் கோவில்பட்டியில் இருந்து சென்னைக்கு பஸ் ஏறினோம். இரவு 7 மணி இருக்கும். இரவு முழுவதும் கால்வினோ, மார்க்வெஸ், பஷீர், நகுலன், மௌனி, லா.ச.ரா., பிரமிள் என பல்வேறு இலக்கியவாதிகள் பற்றியும் புத்தகங்கள் பற்றியும் பேசிக்கொண்டே வந்தோம். வழியில் உணவகத்தில் பேருந்தை நிறுத்தியபோது தேநீர் அருந்தியபடியும் பேச்சு தொடர்ந்தது. இருவரும் உறங்கவே இல்லை.

விடிகாலையில் பஸ் தாம்பரத்தை நெருங்கிய போது முன் ஸீட்டில் இருந்தவர், என் பக்கம் திரும்பி, 'தம்பி, நீங்கள் பேசியதை எல்லாம் கேட்டுக்கொண்டுதான் வந்தேன். இலக்கியத்துல இவ்வளவு விஷயம் இருக்கா... சோறு தண்ணி இல்லாம ரெண்டு பேரும் பேசிக்கிட்டுவர்றீங்க? நீங்க ஏதோ ஒரு சிறுபத்திரிகை நடத்துறதா சொன்னீங்களே, அதுக்கு இந்தப் பணத்தை வெச்சுக்கோங்க' என 500 ரூபாயை நன்கொடையாகத் தந்தார்.

யார் அவர், எதற்காக தனது பணத்தை எடுத்து சிற்றிதழ் வெளியிடக் கொடுக்கிறார் என ஒன்றும் புரியவில்லை. ஆனால், புத்தகங்களின் முக்கியத் துவத்தை ஒருவருக்கு உணர்த்திவிட்டால், அவர் நிச்சயம் உதவிசெய்வார்; தேடிப்போய் புத்தகம் படிப்பார்; புத்தகங்களை நேசிக்கத் தொடங்கி விடுவார் என்பது நிஜம்.

புத்தகம் படிப்பது ஒரு தளம் என்றால், அதைப் பற்றி பேசுவதும், விவாதிப்பதும், மக்களிடையே எடுத்துச்சொல்வதும் அவசியமான இன்னொரு தளம். ஒரு திரைப்படம் வெளியாகும்போது குறைந்தபட்சம் ஆயிரம் பேராவது அதற்கு இணையத்தில் விமர்சனம் எழுதுகிறார்கள். ஃபேஸ்புக், ட்விட்டர் எனப் பகிர்ந்து கொள்கிறார்கள். ஆனால், சிறந்த கதை, கவிதை, நாவல்கள் பற்றி பேசுவதற்கு ஒரு சதவிகிதம் பேர்கூட முன்வருவதே இல்லை.



இத்தனை சேனல்களில் ஒன்றில்கூட புத்தகம் தொடர்பான ஒரு நிகழ்ச்சி இல்லை. சிங்கப்பூர் அரசாங்கம் புத்தக வாசிப்பை மேம்படுத்த *'Read Singapore'* என்ற நிகழ்ச்சியை நாடு முழுவதும் நடத்துகிறார்கள். அதில் புத்தக அறிமுகம், எழுத்தாளர்களுடன் சந்திப்பு, பயிலரங்குகள், கதை சொல்லும் நிகழ்ச்சி எனப் பல்வேறுவிதமான நிகழ்வுகள் நடைபெறுகின்றன. சிறார்கள், பதின்வயதைச் சேர்ந்தவர்கள், பெரியவர்கள் என தனிக்கவனம் கொடுத்து புத்தக வாசிப்பை மேம்படுத்துகிறார்கள். அதில் தமிழ் மொழி சார்ந்த நிகழ்ச்சிகளும் சிறப்பாக நடைபெறுகின்றன.

சென்னை புத்தகக் கண்காட்சி நடைபெறும் தருணத்தையொட்டி நாமும், *'Read Chennai'* என வாசிப்பு இயக்கம் ஒன்றை நடத்தலாம்தானே!

ஒருமுறை டெல்லியில் இருந்து தமிழ்நாடு எக்ஸ்பிரஸில் சென்னைக்கு வந்து கொண்டிருந்தேன். சென்னையில் இருந்து வந்திருந்த அண்ணா பல்கலைக்கழக மாணவர்கள் ஒரு கம்பார்ட்மெண்ட்டில் இருந்தார்கள். அவர்கள் திடீரென ஆளுக்கு ஒரு பையோடு எழுந்து ரயில் பெட்டிகளுக்குள் நடக்கத்

தொடங்கினார்கள். அந்தப் பையில் தமிழ், ஆங்கிலம் மற்றும் இந்திப் புத்தகங்கள் இருந்தன. 'யார் எந்தப் புத்தகத்தை வேண்டுமானாலும் படிக்க எடுத்துக்கொள்ளலாம். படித்து முடித்தவுடன், அங்கேயே வைத்துவிடவும். சென்னை வந்தவுடன் நாங்கள் சேகரித்துக் கொள்கிறோம்' என்றார்கள்.

ஆச்சர்யமாக இருந்தது. 32 மணி நேரப் பயணத்தில் பயணிகள் தாங்கள் விரும்பிய புத்தகங்களைத் தேர்வுசெய்து படித்துக்கொண்டு வந்தார்கள். சிலர் படித்த புத்தகங்களைக் கொடுத்துவிட்டு, வேறு புத்தகங்களைப் பெற்றுவந்தார்கள்.

சென்னையை நெருங்கும்போது நான் அந்த இளைஞர்களிடம் சென்று பாராட்டுத் தெரிவித்தபடியே, 'இந்த யோசனை எப்படி உருவானது?' எனக் கேட்டேன்.

'பத்திரிகையில் ஒரு கட்டுரை படிச்சோம். அதுல ஒருத்தர் இப்படி எழுதியிருந்தார். அதை நாங்க ட்ரை பண்றோம்' என்றார்கள்.

'என்ன எழுதியிருந்தார்?' எனக் கேட்டேன்.

' 'ராஜஸ்தான்ல ஒட்டகத்துல கொண்டுபோய் புக்ஸ் தர்ற மொபைல் லைப்ரரி இருக்கு. தாய்லாந்துல குக்கிராமங்களுக்கு யானையில கொண்டுபோய் புக்ஸ் கொடுக்கிறாங்க. நம்ம ஊர்ல லாங் ஜர்னி போற ட்ரெயின்ல தனியா ஒரு கம்பார்ட்மென்ட்ல ஏன் லைப்ரரி வைக்கக் கூடாது?'னு எழுதியிருந்தார், அதைத்தான் நாங்க ட்ரை பண்ணிப்பார்த்தோம்' என்றார்கள்.

'அந்தக் கட்டுரையை நான்தான் எழுதினேன்' என அவர்களிடம் சொன்னேன். சந்தோஷத்தில் சிரித்தபடியே, 'சாரி சார், உங்க பெயரை மறந்துட்டோம்' என்றார்கள். எழுத்தில் உருவான ஒரு பொறி என் கண் முன்னே செயலாக மாறியிருந்தது சந்தோஷம் அளித்தது.

உறவுகள் கைவிட்ட நிலையில் தனித்து வாழும் முதியவர்கள் பலருக்கு புத்தகங்களே ஆறுதலாக இருக்கின்றன. அவர்கள் புத்தகங்களை உயிருள்ள ஒன்றாகக் கருதுகிறார்கள்; அதனுடன் பேசுகிறார்கள்; விவாதிக்கிறார்கள்; படித்த புத்தகங்கள் பற்றி யாரிடமாவது பகிர்ந்துகொள்ளத் துடிக்கிறார்கள்.

வாக்வம் க்ளீனர் விற்க வந்த சேல்ஸ்மேனிடம் *100* ரூபாய் பணம் கொடுத்து, ஒரு முதியவர் தன்னோடு மதியம் வரை பேசிக் கொண்டிருக்கச் சொன்னதாக ஒரு தகவலை இணையத்தில் வாசித்து அதிர்ச்சியடைந்து போனேன். தனிமையும் பயமும் ஏக்கமுமாக வாழ்பவர்களுக்கு ஆறுதல் தருகின்றன புத்தகங்கள்.

நீலகண்டன் அப்படித்தான் எனக்கு அறிமுகம் ஆனார்.

'எனக்கு வயது *78*. புக்ஸ் படிக்கிறது ஒண்ணுதான் எனக்கு இருக்கிற ஒரே வேலை. டி.வி பார்க்க விருப்பம் இல்லை. எப்போவாவது ரேடியோ கேட்பேன். தினமும் காலையிலும் மாலையிலும் வாக்கிங் போவேன். ஒரு நாளைக்கு பத்து மாத்திரைகள் விழுங்குறேன். எல்லா நோயும் உடம்புல இருக்கு. வீட்ல தனியா இருக்கேன். வொய்ஃப் செத்துப்போய் அஞ்சு வருஷமாச்சு. பிள்ளைங்க ஆளுக்கு ஒரு ஊர்ல. படிச்சதைப் பத்தி யார்கூடயாவது பேசணும். அதான் உங்களுக்கு போன் பண்றேன். நீங்க தப்பா எடுத்துக்கிட மாட்டீங்களே...' எனப் பேசியபடிதான் எனக்கு நீலகண்டன் அறிமுகம் ஆனார்.

பெங்களூரில் வசிப்பதாகச் சொன்னார். சில நாட்கள் இரவு ஒரு மணி, இரண்டு மணிக்கு போன்செய்து 'தி.ஜானகிராமன் படிச்சிக்கிட்டு இருக்கேன். மனுஷன் என்னமா எழுதியிருக்கார்' என்றோ, 'பிரபஞ்சனோட சிறுகதைகள் படிச்சிக்கிட்டு இருக்கேன்' என்றோ புத்தகங்களைப் பற்றி கடகடவெனப் பேச ஆரம்பித்து விடுவார்.



ஆரம்பத்தில் எரிச்சலாக இருந்தது. பின்பு 'பாவம் மனிதர், இது ஒன்றுதான் அவருக்கு மனஆறுதல்' எனக் கொஞ்சநேரம் பேசிக்கொண்டிருப்பேன்.

திடீரென அவராக போன்செய்வதை நிறுத்திவிட்டார். என்ன ஆனது எனத் தெரியவில்லை. நான் ஒருமுறை போன் செய்த போது போன் அணைக்கப் பட்டிருந்தது. பின்பு ஒருநாள் அவராக போன்செய்து பேசினார்...

'என்ன சார்... நான் செத்துப் போயிட்டேன்னு நினைச்சிக்கிட்டீங்களா? திடீர்னு யார் கூடவும் பேச வேண்டாம்னு தோணிச்சு. போனை ஸ்விட்ச் ஆஃப் பண்ணிட்டேன். எல்லாரும் பயந்துட்டாங்க. நாம உயிரோட இருக்கிறதோட அடையாளமே போன் ரிங் ஆகுறதுதான் போல. காண்டேகர் படிச்சிருக்கீங்களா? 'கிரௌஞ்ச வதம்' நல்ல புத்தகம். அதைத் தேடுறேன்... கிடைக்க மாட்டேங்குது. புக்ஸ் எல்லாம் ஆன்லைன் ஸ்டோர் வழியாத்தான் வாங்குறேன். ஏன் சொல்லுங்க... ஆர்டர் எடுக்கிற பசங்ககூட கொஞ்ச நேரம் பேசலாம் இல்லையா? அதான்...' எனச் சொல்லிச்சிரித்தார்.

சில மாதங்களுக்கு முன்பு ஒருநாள் 'சென்னை வந்திருக்கேன். நாம சந்திக்கலாமா?' எனக் கேட்டார்.

'எங்கே தங்கியிருக்கிறீர்கள்? வந்து பார்க்கிறேன்' என்றேன்.

'நானே வந்து பார்க்கிறேன். மாலை ஐந்து மணிக்கு உங்க வீட்டுக்கு வருகிறேன்' என்றார். ஆனால் பார்க்க வரவில்லை. தொலைபேசியும் அணைக்கப்பட்டிருந்தது.

அடுத்த சில நாட்களுக்குப் பிறகு அவராக போன்செய்து, 'நேர்ல பார்த்து என்ன ஆகப் போகுது... உங்களை எதுக்கு நான் கஷ்டப்படுத்தணும்? அதான் பார்க்க வேணாம்னு டிசைட் பண்ணிட்டேன்' என்றார். என்ன மனிதர் இவர் என வியப்பாக இருந்தது.

பின்னர் ஒருநாள் திடீரென போன்செய்து 'நான் பயந்தது நடந்துருச்சு' என்றார்.

'என்ன சார் ஆனது?' எனக் கேட்டேன்,

‘நைட் பெட்ல படுத்திருந்தேன். திடீர்னு கால்ல பயங்கர வலி. நரம்பு வெட்டி வெட்டி இழுக்குது. ரெண்டு காலையும் அசைக்க முடியலை. கையாலே காலை தடவிவிட்டா வலி குறையலை. உதவிக்கு யாரைக் கூப்பிடுறதுனு தெரியலை. செத்துப்போன என் வொய்ஃப் பேரைச் சொல்லிக்கத்துறேன். அவ எப்படி வருவா? ஆனா, அந்தச் சமயம் அவளைத்தான் கூப்பிடத் தோணுது. நிச்சயம் அவ என் குரலைக் கேட்டு வருவானு நம்பினேன். அந்த நிமிஷம்தான் அவ இறந்துபோனதை முழுசா உணர்ந்தேன். கால் வலியைவிட அந்தத் துக்கம் கண்ணீரை வரவெச்சிருச்சு. சத்தமா வாய்விட்டு அழுதேன்.

காலை அசைக்கவே முடியலை. இன்னைக்கு என் கதை முடியப்போகுதுனு நினைச்சேன். பேசாம பிளாட்பாரத்துல படுத்திருந்தாகூட உதவினு கூப்பிட்டா, நாலு பேர் வருவாங்க. இந்த அப்பார்ட்மென்ட்ல யாரு வருவா? அழுகையும் கண்ணீருமா கத்திட்டிருக்கேன்.

அந்த நேரம் திடீர்னு மனசுல கு.ப.ரா-வோட ‘விடியுமா?’ கதை ஞாபகம் வருது. அதுல வர்ற குஞ்சலத்தை நினைச்சுக்கிட்டேன். அற்புதமான கதை சார். அந்தக் கதையில் வர்ற சீதாராமைய்யர் மாதிரி நானும் கடைசியில செத்துப்போயிருவேன் தோணிச்சு. மனுஷனோட மனசு ஏன் சார் இப்படிக் கிடந்து பயப்படுது? ‘விடியுமா?’ங்கிற தலைப்புக்கு எவ்வளவு அர்த்தம் இருக்குனு அன்னைக்குத் தெரிஞ்சுக்கிட்டேன்.

மறுநாள் காலையில் விடிந்து வெளிச்சம் வந்தபோது காலை லேசா அசைக்க முடிந்தது. எப்படியோ எழுந்து டாக்டருக்கு போன் பண்ணி னேன். ஆம்புலன்ஸ் வந்து ஹாஸ்பிட்டலுக்குக் கொண்டுபோனாங்க. நிறைய டெஸ்ட் எடுத்து மருந்து கொடுத்திருக்காங்க. ஹாஸ்பிட்டல்ல படிக்கிறதுக்கு புக்ஸ் கிடைக்காமப்போயிருச்சு. அது ஒண்ணுதான் கவலை. எந்த ஹாஸ் பிட்டல்லயும் நல்ல லைப்ரரி கிடையாது. டி.வி வெச்சிருக்கிறவங்க, புக்ஸ் வெச்சிருக்கணும் தானே... ஏன் தோண மாட்டேங்குது?’

நீலகண்டன் பேசிக்கொண்டே போனார். அவரது தனிமையும் வேதனையும் என்னைப் பற்றிக்கொள்ள பேச முடியாமல் தொண்டையில் வலி ஏற்பட அமைதியாக இருந்தேன்.

நீலகண்டன் சொன்னார்...

‘1960-ல் ஹிராகுட்ல வேலை பார்த்தப்போ தனியா மூனு வருஷம் இருந்திருக்கேன். பன்னிரண்டு வருஷம் தனியா கிரீஸ்ல வேலை பாத்திருக்கேன். எப்பவும் புக்ஸ்தான் துணை.

இப்போ எனக்கு ஃப்ரெண்ட்ஸ் யார் தெரியுமா? எல்லாம் செத்துப்போன ரைட்டர்ஸ்... பாரதியார், கல்கி, தி.ஜானகிராமன், கு.ப.ரா., மௌனி... இப்படிப் பலரோடயும் பேசிட்டிருக் கேன். இப்போ நான் உயிர் வாழுறதே படிக்கிறதுக்கு மட்டும்தான். எந்த புக்கை, பாதி படிச்சிக்கிட்டு இருக்கிறப்போ என் லைஃப் முடியப்போகுதுனு தெரியலை. வானலோகத்துல லைப்ரரி உண்டா, புக் படிக்கவிடுவாங்களானு தெரியலை’ எனச் சொல்லிச் சிரித்தார். அந்தச் சிரிப்பில் கசப் பேறியிருந்தது.




புத்தாண்டுக்காக அவருக்கு சில புத்தகங்கள் வாங்கி அனுப்பியிருந்தேன். இரண்டு நாட்களுக்கு முன்னர் பெங்களூரில் இருந்து ஒரு போன் வந்தது. ‘நீலகண்டன் இறந்துபோய்விட்டார். நீங்கள் அவருக்குப் புத்தகங்களைப் பரிசாக அனுப்பியதற்கு நன்றி’ என அவரது மகன் பேசினார்.

‘எப்போது?’ எனக் கேட்டேன்.

‘ஒரு வாரம் ஆகிறது.’

‘என்ன ஆனது?’ எனக் கேட்டேன்.

‘அவர் ஒரு கேன்சர் நோயாளி. பல ஆண்டு காலமாக சிகிச்சை எடுத்துக்கொண்டிருந்தார். முற்றிய நிலை, வலி வேதனையோடு பிடிவாதமாக தனியே வாழ்ந்தார். படிப்பது ஒன்று மட்டும்தான் அவருக்குப் பிடித்தமான விஷயம். கடைசியாக அவர் படித்துக்கொண்டிருந்த புத்தகம் பிரேம்சந்தின் ‘கோதான்’. மின் தகனத்தின்போது அந்தப் புத்தகத்தையும் உடன் வைத்து எரித்துவிட்டோம்’ என்றார். வருத்தமாக இருந்தது. இன்னொரு பக்கம் நீலகண்டன் கோதானின் மீதிப்பக்கங்களை வான் உலகில் இருந்து படித்துக்கொண்டிருப்பார் என்றும் தோன்றியது.

புத்தகங்கள் வாழ்வின் மீதான பெரும் நம்பிக்கையை ஏற்படுத்துகின்றன. துயரத்தில் இருந்தும், வேதனைகளில் இருந்தும் விடுபட வைக்கின்றன. அந்த மௌனத் துணையை பலரும் உணராமல் இருக்கிறார்கள் என்பதே தீராத வருத்தம்!

- சிறகடிக்கலாம்...

## என்ன செய்யப்போகிறோம்?

ஓய்வுபெற்ற அரசுப் பள்ளி தலைமை ஆசிரியர் ஒருவரைச் சந்தித்து பேசிக்கொண்டிருந்தேன். அவர் ஆதங்கத்துடன் ஒரு ஃபைலைத் தந்து, ''இதைப் பாருங்க'' என்றார். அதில் கடந்த இரண்டு ஆண்டுகளில் செய்தித்தாள்களில் வெளியாகி யிருந்த ஆசிரியர்கள் மீதான பல்வேறு குற்றச் செய்திகள் தொகுக்கப்பட்டிருந்தன.

அவற்றில் சிலவற்றை நானும் நாளிதழ்களில் படித்திருக்கிறேன். ஆனால், ஒருசேர அவற்றை வாசிக்கும்போது திடுக்கிட்டுப்போனேன்.

அவர் வருத்தமான குரலில் சொன்னார்... ''வாத்தியார்கள் இப்படி இருந்தா, நாடு எப்படி உருப்படும்? கல்வி ஏன் இவ்வளவு சீரழிஞ்சு போயிருக்கு? ஒழுக்கமா இருக்கவேண்டிய வாத்தியார் தப்பு பண்ணினா, பசங்க எப்படி நல்ல முறையில் வளருவாங்க? இதை எல்லாம் படிக்கப் படிக்க ரத்தக்கண்ணீர் வருது. கல்வி நிலையங்கள், ஆசிரியர்கள் சார்ந்த குற்றங்கள், புகார்களை விசாரிக்க காவல் துறையில் தனிப்பிரிவு அமைக்கணும்; இவங்களைக் கடுமையாத் தண்டிக்கணும்.''

''எல்லா ஆசிரியர்களும் அப்படி அல்ல. யாரோ சிலர் தவறான செயல்களில் ஈடுபடு கிறார்கள். அதற்காக ஒட்டுமொத்த ஆசிரியர் களையும் குற்றம் சொல்ல முடியாதே'' என்றேன்.

''நடக்கிற தவறுகளைக் கண்டித்து ஆசிரியர்கள் என்ன செய்திருக்காங்க? 'நமக்கு எதுக்கு வம்பு?'னு கண்டுக்கிடாம ஒதுங்கிப் போயிடுறாங்க. பேப்பர்ல வந்திருக்கிற விஷயம் வெறும் ஒரு சதவிகிதம். வெளிவராமல் ஆயிரம் பிரச்னைகள் இருக்கு. மாணவிகளிடம் ஆசிரியர்கள் தவறா நடந்துக்கிறது இப்போ பெருகிப்போச்சு. இதுல பெண் ஆசிரியர்களும் பாதிக்கப்படுறாங்க. எத்தனையோ பள்ளிகள்ல பெண் ஆசிரியர்களுக்கு, கூட வேலைபார்க்கிற ஆண் ஆசிரியர்கள் பாலியல் தொல்லை தர்றாங்க. அது எல்லாம் போலீஸ் கேஸ் ஆகிறது இல்லை'' என்றார்.

அவர் சொன்னது நிஜம். சில ஆசிரியர்கள் இதைப் பற்றி என்னிடம் வெளிப்படையாகவே பேசியிருக்கிறார்கள். இதுபோலவே சில தனியார் பள்ளி நிர்வாகிகள் ஆசிரியர்களைத் தரக் குறைவாகப் பேசுவதும், பெண் ஆசிரியர்களுக்குப் பாலியல் தொல்லை தருவதும் நடந்துவருகின்றன. அவற்றை எல்லாம் யாரும் பெரிதாகக் கண்டு கொள்வதே இல்லை என்பதும் உண்மையே.



ஓய்வுபெற்ற அரசுப் பள்ளி தலைமை ஆசிரியர் மனநெகிழ்ச்சியுடன் சொன்னார்...

''என் முதல் போஸ்ட்டிங்... அரூர் பக்கத்துல சின்னக் கிராமம். அங்கே குடியிருக்க வாடகைக்கு வீடு கிடைக்காது. கிராமத்துல யாரு வாடகைக்கு வீடு விடப்போறாங்க? நான் ஸ்கூல் வாத்தியாரா வந்திருக்கேன்னு கிராமத்துல இருந்த ஒருத்தர் தன் வீட்டைக் காலிபண்ணி எனக்குக் கொடுத்துட்டு, அவர் தன் மகள் வீட்ல போய் தங்கிக்கிட்டார்.

வாத்தியார்கள் மேல அந்த அளவுக்கு மரியாதை மக்களுக்கு இருந்தது. அந்தக் கிராமத்துல ஹோட்டல் கிடையாது. வொய்ஃப் ஊர்ல இல்லாத நாட்கள்ல ஸ்கூல் பசங்க வீட்ல இருந்து சாப்பாடு செஞ்சு தருவாங்க.

லெட்டர் எழுதித்தர்றது, கல்யாணம் பேசி முடிக்கிறது, புருஷன் பொண்டாட்டி சண்டை.... எல்லாத்துக்கும் என்கிட்ட வருவாங்க. ஒருநாள் ஓர் ஆள் குடிச்சுட்டு, ஸ்கூல் வராண்டாவில் படுத்துக்கிடந்தான். அவனைத் திட்டி துரத்திவிட்டேன். இதைப் பற்றி கேள்விப்பட்ட ஊர்க்காரங்க ஒண்ணுசேர்ந்து வந்து மன்னிப்புக் கேட்டதோடு, அந்த ஆளைத் திட்டி என்கிட்ட மன்னிப்புக் கேட்கவெச்சாங்க. அதோட சரி, விவசாயிகள் யாராவது குடிச்சிருந்தாக்கூட என் எதிர்ல வர மாட்டாங்க. ஒரு கெட்டவார்த்தை பேச மாட்டாங்க. இப்போ வாத்தியார் குடிச்சுட்டு ஸ்கூல்ல வந்து படிக்கிற பொம்பளைப் பிள்ளைங்ககிட்ட ஆபாசமா பேசினா, எங்கே போய் சொல்றது? இதுதான் பெரிய கவலையா இருக்கு. நான் பொய் சொல்லலை. இந்த நியூஸ் எல்லாம் நீங்களே படிச்சுப் பாருங்க'' என்றார்.

செய்தித்தாள்களில் வந்துள்ள இந்தச் செய்திகள், தமிழகக் கல்வியின் சீரழிந்த நிலைக்கு சாட்சியம் கூறுகின்றன.

பழநி அருகே ஒரு பள்ளியில் அதன் தலைமை ஆசிரியர் பள்ளிக்கு வந்தவுடன், மாணவிகள் சிலரை அந்த அறைக்கு வரவழைத்து கை, கால்களைப் பிடித்துவிடச் சொல்வது, உடலில் மசாஜ்செய்யச் சொல்வது, ஆபாசமாகப் பேசுவது என நடந்துள்ளார். அதைத் தாங்க முடியாத மாணவிகள் பெற்றோர்களிடம் முறையிட, பொதுமக்கள் அவரை மரத்தில் கட்டிவைத்து தர்ம அடி கொடுத்தனர். தற்போது அவர் கைதுசெய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டுள்ளார்.

சேலம் மாவட்டத்தில் உள்ள ஊராட்சி ஒன்றியத் தொடக்கப் பள்ளியில் 4-ம் வகுப்பு மாணவிக்கு பாலியல் தொல்லை கொடுத்த ஆசிரியர் கைதுசெய்யப்பட்டுள்ளார். திண்டுக்கல்லில், பள்ளி மாணவியிடம் தேர்வு அறையில் சில்மிஷம் செய்த ஆசிரியர் சஸ்பெண்ட் செய்யப்பட்டுள்ளார்.

திருச்சியில் தனியார் பள்ளியின் தமிழ் ஆசிரியர் ஒருவர், 6-ம் வகுப்பு மாணவியிடம் கழிவறையில் சில்மிஷம் செய்தார் என்பதற்காக காவல் துறையால் கைது செய்யப்பட்டுள்ளார்.

சென்னை, அரும்பாக்கத்தில் பிரபலமான தனியார் பள்ளியில் உடற்பயிற்சி ஆசிரியர், 3-ம் வகுப்பு மாணவியிடம் யோகா சொல்லித் தருவதாகக் கூறி வன்புணர்ச்சி செய்ய முயன்றிருக்கிறார். 'இதை வெளியே சொன்னால் கொன்றுவிடுவேன்' என அந்த மாணவியை மிரட்டியதால், அவளுக்கு உடல்நலக் குறைவு ஏற்பட்டுள்ளது. அவர் மீது புகார் அளிக்கப்படவே ஆசிரியரை காவல் துறை கைதுசெய்துள்ளது.

இதுபோலவே சேலம் மாவட்டம் ஓமலூரை அடுத்த ஒரு பள்ளியில், அதன் தலைமை ஆசிரியர் பள்ளிக் குழந்தைகளை தனது அறைக்கு அழைத்து வந்து, லேப்டாப்பில் ஆபாசப் படம் காட்டியிருக்கிறார். இதனால் பாதிக்கப்பட்ட மாணவிகள் பெற்றோர்களிடம் புகார் கூற, திரண்டு வந்து தலைமை ஆசிரியரை சரமாரியாகத் தாக்கி காவல் துறையிடம் ஒப்படைத்திருக்கிறார்கள்.

பாளையங்கோட்டை அருகே ஒரு தனியார் பள்ளியில், தலைமை ஆசிரியர் குடித்துவிட்டு பள்ளிக்கு வந்து, போதையில் மாணவிகளிடம் டிரெஸ் அணியாமல் நடனமாடும்படி அசிங்கமாக நடந்திருக்கிறார். அவரை பொதுமக்கள் சரமாரியாக அடித்து, உதைத்து காவல் துறையிடம் ஒப்படைத்துள்ளார்கள்.

கடலூர் மாவட்டம்... ஒரு தனியார் பள்ளி முதல்வர் 10-ம் வகுப்பு படிக்கும் ஒரு மாணவியிடம் சில்மிஷத்தில் ஈடுபட்டதால், அவரை காவல் துறை கைதுசெய்துள்ளது.

திருப்பூர் மாவட்டத்தில் உள்ள ஓர் அரசு உயர்நிலைப் பள்ளி தலைமை ஆசிரியர், 10-ம் வகுப்பு மாணவிகளுக்கு சிறப்பு வகுப்பு நடத்துவதாகக் கூறி பாலியல் தொல்லை தந்து வந்தார். இதில் பாதிக்கப்பட்ட ஒரு மாணவி தற்கொலை செய்துகொள்ள முயன்றதால், அவர் மீது புகார் தெரிவிக்கப்பட்டு கைது செய்யப்பட்டுள்ளார்.

திருவண்ணாமலை மாவட்டத்தில் உள்ள ஒரு மேல்நிலைப் பள்ளியில், முதுநிலை கணித ஆசிரியர் வகுப்பில் மாணவிகளிடம் இரட்டை அர்த்த வார்த்தைகளால் ஆபாசமாகப் பேசி வருவதை அறிந்த பெற்றோர்கள், அவரை அடித்து, உதைத்து, செருப்பு மாலை அணிவித்துள்ளனர்.

இந்தச் செய்திகளைப் படித்த பிறகும் நாம் ஏன் சொரணையற்றுப்போய் இருக்கிறோம்?

இந்தச் செய்திகள், சில உண்மைகளை நமக்கு முன்வைக்கின்றன. மாணவிகளுக்கு பாலியல் தொல்லை தந்த ஆசிரியர்களில் பலரும் 40, 50 வயதைச் சேர்ந்தவர்கள். இந்தக் குற்றங்கள் அனைத்தும் பள்ளி வளாகத்திலேயே நடந்திருக்கின்றன. இதை அறிந்து பொதுமக்கள் அடித்து, உதைத்தது அந்தந்த ஊர்களிலும் நடந்திருக்கின்றன.

பாலியல் குற்றத்துக்காகக் கைதுசெய்யப்பட்ட ஆசிரியர்களில் எத்தனை பேர் தண்டிக்கப் பட்டார்கள், என்ன தண்டனை கொடுக்கப் பட்டது, அவர்களின் குடும்பத்தினர் இந்தச் செயலை எப்படி எதிர்கொண்டார்கள், இதுபோன்ற சம்பவங்கள் நடைபெறாமல் இருக்க என்னவிதமான நடவடிக்கைகள் எடுக்கப் பட்டுள்ளன, ஆசிரியரைத் தற்காலிகப் பணி நீக்கம்செய்வது மட்டும்தான் தண்டனையா?

கல்வியில் புரையோடிப்போன இந்த வக்கிரங்கள் தொடர்ந்து கொண்டேதான் இருக்குமா?

யோசிக்க யோசிக்க ரத்தம் கொதித்துப்போனது. ஓய்வுபெற்ற தலைமை ஆசிரியர் சொன்னார்...

“ஆசிரியர் இப்படி நடந்துகொள்வது ஒரு பக்கம் என்றால், இதன் மறுபக்கத்தையும் நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும். ஒரு பள்ளியில் குடித்துவிட்டு வந்த மாணவனைக் கண்டித்த ஆசிரியரை, மாணவன் வகுப்பறையிலே தாக்கியிருக்கிறான். அதைக் கண்டித்த தலைமை ஆசிரியரை, மாணவனின் உறவினர்கள் ஒன்று சேர்ந்து தாக்கியிருக்கிறார்கள்.

கோவையில் ஒரு பள்ளியில் மாணவி வகுப்பறையில் செல்போன் வைத்திருக்க, அதைப் பறித்த ஆசிரியரை, மாணவியின் அண்ணன் அடித்து, கையை உடைத்திருக்கிறான். இன்னும் சில இடங்களில் ஆசிரியர்களின் சாதியைச் சொல்லி மாணவர்கள் திட்டுவதும், பெண் ஆசிரியர்களை மிக மோசமாக மாணவர்கள் நடத்துவதும் தொடர்ந்துவருகின்றன.

குடியும் செல்போன்களும் கல்விச்சூழலில் பெரிய பிரச்னைகளை உண்டாக்கியிருக்கின்றன. இதன் மோசமான விளைவுகளே குற்றத்துக்கான முக்கியக் காரணங்கள். ஆசிரியர் - மாணவர் என இரண்டு பக்கங்களிலும் கோளாறுகள் அதிகரித்துவருகின்றன. இதை கல்வித் துறை கண்டுகொள்வதே

இல்லை. 100 சதவிகிதத் தேர்ச்சி மட்டுமே அவர்களுக்குப் போதுமானதாக இருக்கிறது.

ஓய்வுபெற்ற அந்தத் தலைமை ஆசிரியரின் வருத்தம், ஒரு தனிநபரின் கவலை அல்ல; கல்வியில் ஏற்பட்டுள்ள சீரழிவுகளைக் கண்ட பலரது கவலையும் அதுவே. இதைப் பற்றி ஆசிரியர்களாகப் பணியாற்றும் எனது வாசகர்கள், நண்பர்களிடம் விவாதித்தேன்.

அவர்கள் சொன்னது மேலும் அதிர்ச்சி அளிப்பதாக இருந்தது.

செம்மரம் வெட்டுவதற்காக ஆந்திராவுக்கு கூலிகளாகப் போய் செத்த தமிழர்களைத்தான் உலகம் அறியும். அவர்களைவிடவும் அடிமைகளாக ஆந்திராவிலும் பீகாரிலும் அசாமிலும் தமிழ்நாட்டைச் சேர்ந்த பலர் ஆசிரியர்களாகப் பணியாற்றிவருகிறார்கள்.

ஆந்திராவில் உள்ள தனியார் பள்ளிகளில் ஆசிரியராக வேலைசெய்வது என்பது கொத்தடிமை பணிபோல. சர்ட்டிஃபிகேட்களை பிடுங்கிவைத்துக்கொண்டு 'மூன்று வருஷம் கட்டாயம் வேலைசெய்ய வேண்டும்' என எழுதி வாங்கிக்கொள்கிறார்கள். இதை மீறும் ஆசிரியர்கள் மீது பொய்யாகப் புகார் கொடுத்து, போலீஸில் மாட்டிவிடுகிறார்கள். ஒரு வருஷம் சம்பளம் இல்லாமல் வேலைசெய்தால், பள்ளியைவிட்டு விலகிப்போக அனுமதிப்பார்கள்.

தமிழ்நாட்டில் உள்ள தனியார் பள்ளிகளில் பணிச்சுமை அதிகம், போதுமான வருமானம் இல்லை என வேறு மாநிலங்களுக்கு வேலைக்குச் செல்லும் ஆசிரியர்கள், அங்கு நடக்கும் கொடுமைகளைக் கண்டு 'ஆளைவிட்டால் போதும்' என இப்படி ஓடிவருகிறார்கள்.

இதைவிட அதிர்ச்சி, இன்னோர் ஆசிரியர் சொன்ன தகவல்...

''எங்கள் பள்ளியில் எட்டாம் வகுப்பு மாணவியை, வகுப்பு ஆசிரியர் காதல் கடிதம் கொடுத்து மயக்கி கூட்டிக்கொண்டு ஓடிவிட்டார். இவ்வளவுக்கும் அந்த ஆசிரியரின் மகளும் அதே எட்டாம் வகுப்பில் படிக்கிறாள். அந்த மாணவியின் பெற்றோர் பள்ளிக்கு வந்து தகராறு செய்தார்கள்.

போலீஸில் புகார் கொடுக்கப்பட்டது. நான்கு மாதங்களுக்குப் பிறகு போலீஸ் டீம் ஆசிரியரைக் கைதுசெய்தார்கள். அப்போது அந்த மாணவி தான் ஆசிரியரை உயிருக்கு உயிராக லவ் பண்ணுவதாகச் சொல்லி அழுதிருக்கிறாள். அவள் இப்போது கர்ப்பிணி. இதுதான் லவ்வா... எட்டாம் வகுப்பு படிக்கும் பெண்ணுக்கு என்ன தெரியும்? இப்படி நடந்துகொள்ள ஒரு வாத்தியாருக்கு எப்படி மனது வந்தது?''

கல்விச் சீர்கேடுகளைப் பற்றி கேட்கக் கேட்க மனம் கொந்தளிக்கிறது.

மிகுந்த அர்ப்பணிப்புடன் தன் வாழ்நாளை கல்விக்காகவே செலவிட்ட எத்தனையோ ஆசிரியர்களை நான் அறிவேன். இன்றும் அதுபோன்ற நல்லாசிரியர்கள் இருக்கவே செய்கிறார்கள். ஆனால், புல்லுருவிகள் போன்ற மோசமான ஆசிரியர்களின் எண்ணிக்கை பெருகிக்கொண்டே வருவது வேதனை அளிக்கிறது.

டேராடூனில் உள்ள 'ஷார்ப் பார்வையற்றோர் கல்வி வளாக'த்துக்கு ஒருமுறை சென்றிருந்தேன். இந்தியாவில் பார்வையற்றவர்களுக்காகத் தொடங்கப்பட்ட முதல் பள்ளி அதுவே. இங்கிலாந்தைச் சேர்ந்த ஆனி ஷார்ப், அந்தப் பள்ளியை 1887-ம் ஆண்டு அமிர்தசரஸில் தொடங்கியிருக்கிறார். அங்கு இருந்து இமயத்தின் அடிவாரத்தில் உள்ள டேராடூனுக்கு 1903-ம் ஆண்டு பள்ளி இடம் மாற்றப்பட்டிருக்கிறது. 100 வருடங்களுக்கும் மேலாக அந்தப் பள்ளி டேராடூனில் சிறப்பாகச் செயல்பட்டுவருகிறது.

இந்தியாவின் பல்வேறு இடங்களில் இருந்து பார்வையற்றவர்கள் அங்கே வந்து படிக்கிறார்கள். பிரெய்ல் முறையில் கற்றுத்தருகிறார்கள். தூய்மையான வளாகம், பல்வேறு கைத்தொழில்கள் கற்றுத்தரப் படுகின்றன; தேவையான மருத்துவ உதவிகளும் தரப்படுகின்றன. உற்சாகமான மாணவர்களையும் அங்கு பணியாற்றும் ஆசிரியர்களின் அர்ப் பணிப்பையும் கண்டபோது நெகிழ்ந்துபோனேன்.

ஒரு பக்கம் இப்படி கைமாறு இல்லாத உதவியாக பலரையும் வாழவைத்துக்கொண்டிருக்கிறது கல்வி. இன்னொரு பக்கம், கல்விச்சூழல் குற்றச் சம்பவங்களால் விஷமாகிக்கொண்டு வருகிறது.

குடியும் ஆபாசப் படங்களும் பாலியல் தொல்லைகளும் தற்கொலையும் கல்விச் சூழலில் வளர்ந்துவருவது உடனடியாகத் தடுத்து நிறுத்தப்பட வேண்டிய விஷயம்.

கல்விச் சூழலில் மாற்றம் கொண்டுவராவிட்டால் எதிர்காலம் மிக மோசமான விளைவுகளைச் சந்திக்கவேண்டியிருக்கும் என்பதே உண்மை!

- சிறகடிக்கலாம்...

## இந்திய வானம் - 24
## எஸ்.ராமகிருஷ்ணன், ஓவியங்கள்: ரமேஷ் ஆச்சார்யா

### அதிகம் பேசாதே

இசை நிகழ்ச்சி ஒன்றுக்குச் சென்றிருந்தேன். பாதிக் கச்சேரியில் யாரோ ஒருவரின் செல்போன் அலறியது. 'அழகென்ற சொல்லுக்கு முருகா...' என்ற ரிங்டோன். கூட்டமே எரிச்சலுடன் திரும்பி, போனை அணைத்துவைக்கச் சொன்னார்கள். பதற்றமான அந்தப் பெரியவர் போனை அணைக்க முயன்றார். அவரால் முடியவில்லை. ''சைலன்ட்ல போடுங்க'' என முன் வரிசையில் இருந்து ஒருவர் கோபமாகக் கத்தினார்.

அதற்கு அந்தப் பெரியவர், ''போனை எப்படி சைலன்ட்ல போடுறதுனு எனக்குத் தெரியாது'' என்றார். யாரோ அவரது போனைப் பிடுங்கி அணைத்தார்.

இப்படி கச்சேரி, சினிமா தியேட்டர், கோயில், இலக்கியக் கூட்டம், மருத்துவமனை என எங்கும் 'மற்றவர் களுக்குத் தொல்லை தருகிறோம்' என்ற துளி பிரக்ஞையும் இல்லாமல் செல்போனில் உரக்கப் பேசிக் கொண்டிருப்பவர்கள் பெருகி விட்டார்கள்.

கச்சேரியில் அந்தப் பெரியவர் நடந்துகொண்டது தற்செயல். அவர் சொன்னது முக்கியமான பிரச்னை. போனை எப்படி சைலன்ட்டில் போடுவது, எப்படி எஸ்.எம்.எஸ் அனுப்புவது, எப்படி ஒரு பெயரைப் பதிவுசெய்வது போன்றவை தெரியாமல் பலரும் தடுமாறுகிறார்கள்.

முதியவர்களில் சிலர், அறியாமல் கை தவறி ஏதோ ஒரு பட்டனை அழுத்துவதற்குப் பதிலாக வேறு சில எண்களை அழுத்திவிட்டால் அவ்வளவுதான். 'கைபேசிக்கான தொகை இருப்பு குறைந்துவிடுகிறது...' போன்ற காரணங்களைக் காட்டி அவர்களை வீட்டில் இருப்பவர்கள் கேலி செய்வதும், திட்டுவதும், கோபம் அடைவதும் தொடர்ந்து நடந்துகொண்டுதான் இருக்கின்றன.

ஒருமுறை கே.கே நகரில் உள்ள பூங்காவில் ஒரு முதியவரைப் பார்த்தேன். அவர் தனது செல்போனைத் தொலைத்துவிட்டு, பதற்றத் துடன் ஒவ்வோர் இடமாகத் தேடிக்கொண்டு இருந்தார். நடந்துபோகிற

ஒவ்வொருவரிடமும் 'போனைக் காணவில்லை' எனப் புலம்பிக் கொண்டிருந்தார். என்னிடமும் ஆதங்கத்துடன் ''போனைக் காணோம்'' என்றார்.



''என்ன போன், எப்படி இருக்கும்?'' எனக் கேட்டதற்கு, ''செல்போன்'' எனச் சொல்ல முடிந்ததே தவிர, அது எந்த நிறுவனத்தின் தயாரிப்பு, என்ன மாடல் போன்ற எந்தத் தகவலும் அவருக்குத் தெரியவில்லை. ''கறுப்பு கலர்' 'என்று மட்டும் சொல்லிக்கொண்டிருந்தார். அவரது செல்போன் நம்பரைக் கேட்டு, அதற்கு போன் செய்தால் 'அணைத்துவைக்கப் பட்டிருப்பதாக' மறுமுனை சொன்னது.

''உங்க போனை அணைத்து வைத்திருந்தீர்களா?'' எனக் கேட்டேன்.

''செல்போன் தானே ஆஃப் ஆகிருச்சு. அதை எப்படி ஆன் செய்றதுனு தெரியலை. 'சார்ஜ் போட்டா திரும்பவும் ஆன் ஆகிரும்'னு சொன்னாங்க. ஆனா, சார்ஜ் போட்டா ஆன் ஆகலை. என்ன செய்றதுனு தெரியாம சட்டைப்பையில் போட்டுவெச்சிருந்தேன். எப்படிக் காணாமப்போச்சுனு தெரியலை'' எனப் புலம்பினார்.

அவரது கைகள் நடுங்கிக்கொண்டிருந்தன. தேடித் தேடி அலுத்துப்போன அவர், சிமென்ட் பெஞ்சில் உட்கார்ந்துகொண்டு மரத்தையே வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தார். பூங்காவின் காவலாளி, அவருடன் பேசிக் கொண்டிருந்தார்.

அவரிடம் பெரியவர் தழுதழுத்த குரலில் ''என் மகனுக்குத் தெரிஞ்சா திட்டுவான். எனக்கு எதுக்கு இந்தச் சனியன்... 'வேண்டாம்'னு சொன்னா கேட்கிறானா? எனக்கு இந்த செல்போன் எல்லாம் சரிவரலை. தொந்தரவுதான்'' என்றார்.

பூங்கா காவலாளி, தனது செல்போனை எடுத்துக்காட்டி அவருக்கு ஏதோ விளக்கிக் கொண்டிருந்தார். போனைத் தொலைத்தவர், அதைக் கேட்டதாகவே தெரியவில்லை. அவர் நினைத்து நினைத்து வருந்திக்கொண்டிருந்தார்.

இது யாரோ ஒரு பெரியவரின் பிரச்னை இல்லை. எல்லா வீடுகளிலும் வயதானவர்கள் புதிய தொழில்நுட்பக் கருவிகளைக் கண்டு பயப்படுகிறார்கள்; கட்டாயத்தின் பேரில் அதைப் பயன்படுத்துகிறார்கள். ஒருசிலரே அதை எளிதாகக் கற்றுக்கொண்டு உற்சாகமாகப் பயன்படுத்துகிறார்கள்; புதிய அனுபவங்களை அடைகிறார்கள்.

புதிதாக ஃபேஸ்புக் அக்கவுன்ட் தொடங்கிய முதியவர்களில் சிலர் அடையும் சந்தோஷம் இத்தகையதே. அதுபோலவே ஸ்கைப், வாட்ஸ்அப், ட்விட்டர் எனப் பெருகிவரும் தொலைத்தொடர்பு வசதிகளை உபயோகப்படுத்திக்கொண்டு மகிழ்ச்சி அடைபவர்களும் உள்ளனர்.

ஆனால், தான் உபயோகப்படுத்தும் செல்போனில் என்ன இருக்கிறது, அதை எப்படிக் கையாள வேண்டும், எப்படிப் பாதுகாப்பது, திடீரென அது ஏன் வேலை செய்யாமல்போகிறது போன்றவை, முதியவர்கள் பலருக்கும் சிக்கலான பிரச்னைகளாகவே இருக்கின்றன.

போனை உபயோகிக்கத் தெரியாத பிரச்னையைவிடவும் செல்போனைத் தவறாகப் பயன்படுத்தும் பிரச்னைதான் பெரும் தலைவலியாக உள்ளது.

சென்னையில் நடைபெற்ற சர்வதேசத் திரைப்பட விழாவின்போது ஓர் அரங்கில் படம் ஓடிக்கொண்டிருந்தது. ஓர் இளைஞர் செல்போனில் சத்தமாகப்

பேசிக்கொண்டிருந்தார். அதைத் தாங்க முடியாத பார்வையாளர்கள், போனை அணைக்கும்படி கத்தினார்கள்.

அதைக் கேட்டதும் செல்போனில் பேசிக் கொண்டிருந்த இளைஞர், மிக ஆபாசமான வார்த்தைகளில் திட்டியபடியே, ''அப்படித் தான்டா பேசுவேன். நானும் காசு கொடுத்துதான் படம் பார்க்க வந்திருக்கேன்'' என்றார்.

உடனே ஒருவர் எழுந்து, ''அறிவு இல்லையா உனக்கு? எத்தனை பேர் படம் பார்க்கிறாங்க... வெளியே போய் பேசுடா'' என்றார்.

அப்படிச் சொன்னவருக்கு, 60 வயது இருக்கும். இதைக் கேட்டவுடன் செல்போன் பேசிக்கொண்டிருந்த இளைஞர் ஆத்திரத்துடன் அவரை அடிக்கப்போய், கண்டபடி திட்டினான். இருவருக்கும் பலத்த வாக்குவாதம் நடந்தது.

'செல்போன்களை அணைத்துவையுங்கள்' என்ற அறிவிப்பை ஒவ்வொரு நிகழ்ச்சியின்போதும் அறிவிக் கிறார்கள். அதை ஏன் யாரும் ஒரு பொருட்டாகக் கருதுவதே இல்லை; அப்படி என்ன முக்கியமான விஷயத்தைப் பேசுகிறார்கள்... அடுத்தவரை தொந்தரவு செய்கிறோம் என்பதைப் பற்றி, ஏன் துளிகூடக் கவலைப்படுவது இல்லை? அன்றாடம் திரையரங்கு களில் யாரோ எரிச்சல் அடைந்து செல்போனை அணைத்துவைக்கும்படி சண்டையிட்டு, உச்சஸ்தாயியில் பேசிக்கொண்டேதான் இருக்கிறார்கள்.

விகாஸ் சர்மா என்கிற இந்தி எழுத்தாளர், ஒரு சிறுகதையை எழுதியிருக்கிறார். அதன் பெயர் 'அதிகம் பேசாதே'.

மும்பையில் வசிக்கும் ஷியாம், கிராமத்தில் தனியே வசிக்கும் தனது அம்மாவோடு பேசுவதற்காகப் புதிதாக செல்போன் ஒன்றை வாங்கித் தருகிறான். அம்மாவுக்கு அதை எப்படி உபயோகப்படுத்துவது எனக் கற்றுத்தருகிறான். அம்மாவும் மகன் ஆசையோடு வாங்கிக்கொடுத்த செல்போனை சந்தோஷத்துடன் வைத்துக்கொள்கிறாள்.

மும்பையில் இருந்து ஷியாம் தினமும் மாலை நேரத்தில் அம்மாவுக்கு போன்செய்கிறான். அம்மாவும் போனை எடுத்துப் பேசுகிறாள். ஐந்து நிமிடங்கள் அல்லது பத்து நிமிடங்கள் இருவரும் பேசிக் கொள்கிறார்கள்.

இரண்டு மாதங்கள் இது தவறாமல் நடந்துவருகிறது. பிறகு ஒருநாள், அவன் போன் செய்தால், போனை எடுத்துப் பேச மறுக்கிறார் அம்மா. சில வேளைகளில் போனை எடுப்பார். ஆனால், ஒருசில வார்த்தைகளில் முடித்துவிடுகிறார். ஷியாமுக்கு, அம்மா ஏன் இப்படி இருக்கிறார் எனப் புரியவில்லை.

போனில் பேசும்போதுகூட தன் உடல்நலம் பற்றியோ, குழந்தைகள் பற்றியோ அம்மா எதுவும் விசாரிப்பது இல்லை என்பது அவனுக்கு எரிச்சலாக இருக்கிறது. 'அம்மாவுக்கு என்ன கோபம், ஏன் இப்படி நடந்துகொள்கிறார்?' என ஷியாம் வேதனைப்படுகிறான்.

கோடை விடுமுறைக்கு, தனது மனைவி பிள்ளை களை அழைத்துக்கொண்டு ஊருக்கு வந்தான். அம்மா, அவர்களை சந்தோஷத்துடன் வரவேற்று உபசரிக் கிறாள். அவளிடம் 'ஏம்மா போனில் பேசுவதைக் குறைத்துக்கொண்டுவிட்டாய்... என்ன பிரச்னை?' எனக் கேட்கிறான் ஷியாம்.

அதற்கு அவள் 'நீ என்னைப் பிரிந்து நகருக்குப் போன பிறகு, 'உன் குரலைக் கேட்க மாட்டோமா, நீ ஊருக்கு வர மாட்டாயா...' என ஏங்கிக்கொண்டே இருப்பேன். தினமும் மனதுக்குள்ளாக உன் பிரிவை நினைத்துக்கொண்டு நீயும் உன் மனைவி குழந்தைகளும் நன்றாக இருக்க வேண்டும் என பிரார்த்தனை செய்துகொண்டிருப்பேன். சில சமயம், எனக்கு நானே பேசிக்கொண்டி ருப்பேன். எப்போதாவது நீ ஊருக்கு வந்தால், நீயும் நானும் விடிய விடிய கடந்துபோன நாட்களைப் பற்றி பேசிக்கொண்டிருப்போம்.



ஆனால், இந்த செல்போன் வந்த பிறகு தினமும் உன் குரலைக் கேட்கிறேன். நீயும் எதை எதையோ சொல்கிறாய். உன்னிடம் பேசுவதற்கு எனக்கு ஒரு விஷயமும் இல்லை. இங்கே அப்படி ஒன்றும் நடப்பதும் இல்லை. அதைவிடவும் அதிகம் பேசுவது அன்பை முறித்துவிடும். எவ்வளவுதான் நெருக்கமாக இருந் தாலும் தொடர்ந்து பேசிக்கொண்டே இருந்தால் எரிச்சலாகத்தான் இருக்கும்.

உறவை வளர்க்க, அமைதியும் பிரிவும் அவசியம் தேவை. ஐந்து விரல்களும் ஒட்டிக்கொண்டே இருந்தால், கை எதற்கும் பிரயோஜனப்படாது. விரல்களுக்குள் இடைவெளி இருப்பதுபோல மனிதர்களுக்குள்ளும் இடைவெளி வேண்டும்.

அதை உணராமல் சதா பேசிக்கொண்டே இருந்தால், எரிச்சலும் கோபமும்தான் மிச்சம் ஆகும். அந்தக் காலத்தில், உன் அப்பா ராணுவத்தில் இருந்தார். ஆறு மாதங்களுக்கு ஒரு கடிதம் வரும். எனக்குப் படிக்கத் தெரியாது. யாரிடமாவது கொடுத்துப் படிக்கச் சொல்வேன், ஒரே கடிதத்தை ஆறு மாதங்கள் வரை வைத்து வைத்து படித்துக் கொண்டிருப்பேன். ஏக்கமாகவும் மனவேதனை யாகவும் இருந்தாலும், அதுதான் எங்களுக்குள் இருந்த உறவை உறுதியாக்கியது.

இன்று பலரும் வாய் இருக்கிறதே என எதை வேண்டுமானாலும் பேசிக்கொண்டே இருக்கி றார்கள். அது தவறு. நாம் சொல்லை வீணடிக்கக் கூடாது. இந்த செல்போன் எனக்கு வேண்டாம். நான் உன்னைப் பற்றி நானாக நினைத்துக்கொண்டு காத்திருக்கவே விரும்புகிறேன். இதை நீயே வைத்துக்கொள்' என அவனிடமே தந்துவிடுகிறாள்.

இந்தக் கதையை வாசித்தபோது, ஷியாமின் அம்மா சொன்னது உண்மை என்பது புரிந்தது. நாம் விரும்பும்போது ஒருவருக்கொருவர் பேசிக் கொள்வது வேறு; தொடர்ந்து பேசிக்கொண்டே இருப்பது வேறு. நல்ல நண்பர்கள்கூட தொடர்ந்து பேசிக்கொண்டே இருப்பதால், ஏதாவது ஒரு நேரத்தில் கசப்படைந்துவிடுகிறார்கள். பிரிவை, அமைதியை, இடைவெளியை இந்தத் தலைமுறை உணரவே இல்லை. செல்போனில் இரவு முழுவதும் தொடரும் பேச்சு இல்லா உரையாடல்கள் ஏதோ ஒரு தருணத்தில் வெறுப்பை, எரிச்சலை உருவாக்கிவிடுகின்றன. அதனால் உறவு முறிந்து போகிறது. ஏமாற்றமும் மனக்குழப்பமும் உருவாகின்றன. செல்போனை வீசி எறிந்து உடைத்த

எத்தனையோ இளைஞர்களை நான் அறிவேன். ஒரு முதியவர்கூட அப்படி நடந்திருப்பாரா என்பது சந்தேகமே!

நண்பர்களுடன் சேர்ந்து சுற்றுவதிலும் அரட்டை அடிப்பதிலும் எவ்வளவு சந்தோஷம் கிடைக்குமோ, அதற்கு இணையான சந்தோஷம் விருப்பத்துடன் தனித்து இருப்பதிலும் கிடைக்கும். அதற்கு, தனிமைக்கு நாம் பழக வேண்டும்.

புறக்கணிக்கப்பட்டு தனிமையில் இருப்பது என்பது வேறு; விருப்பத்துடன் தனிமையில் இருப்பது என்பது வேறு.

நாம் விருப்பத்துடன் தனித்திருக்கப் பழக வேண்டும். அது ஒரு சுவை. பறக்கும்போது மட்டுமே பறவைகள் கூட்டமாகச் செல்கின்றன. பிறகு, ஒவ்வொரு பறவையும் அதனதன் வழியே தனியேதான் இரை தேடுகின்றன. விரும்பிய மரத்தைத் தேர்வுசெய்து, வசிப்பிடத்தை உருவாக்கிக் கொள்கின்றன. தனிமைகொள்ளுதல் என்பது, நம்மை நாம் அறிந்துகொள்ளும் வழி.

'ரோமன் ஹாலிடே', 'மை ஃபேர் லேடி' போன்ற படங்களில் நடித்த ஆட்ரி ஹெபர்ன், புகழ்பெற்ற ஹாலிவுட் நடிகை. *1950-ம்* ஆண்டுகளில் யுனிசெஃப் நிறுவனத்தில் நடைபெற்ற பல்வேறு நற்பணிகளில் பங்குகொண்டவர். அவர் தனது அனுபவத்தில் இருந்து சில அறிவுரைகளைக் கூறியிருக்கிறார். அதை வாசித்தபோது வியந்து போனேன்.




'கண்கள் அழகாக இருக்க வேண்டுமா? உங்களைச் சுற்றி உள்ளவர்களின் நல்ல தன்மைகளைக் காணுங்கள். மெல்லிய உடல் வேண்டுமா? உங்களின் உணவை, பசித்தவர்களுடன் பகிர்ந்து உண்ணுங்கள். எப்போதும் சந்தோஷத்தையும் சிரிப்பையும் உடன் வைத்திருங்கள். சிரிப்புதான் ஆரோக்கியத்தின் முதற்படி. ஒப்பனை செய்துகொள்வதால் உங்கள் முகம் மட்டும்தான் அழகாக இருக்கும். ஆனால், மனம் அழுக்காக இருந்துகொண்டு முகம் அழகாக ஒளிர்வது தவறு அல்லவா?

அழகான கூந்தல் வேண்டும் என்றால், உங்களின் கூந்தலை, ஒரு குழந்தை தனது பிஞ்சு விரல்களால் தினமும் ஒருமுறை கோதிவிடட்டும்.

எவரையும் துச்சமாக நினைக்காதீர்கள்; பொருட்களைவிட அவசியம் பாதுகாக்கப்பட வேண்டியவர்கள் மனிதர்கள்.

உங்களுக்கு இரண்டு கைகள் இருக்கின்றன. அதில் ஒன்று உங்களுக்கு, மற்றொன்று பிறருக்கு என்பதை நீங்கள் உணர வேண்டும்' - ஆட்ரி ஹெபர்ன் சொன்னது இன்றைக்கும் பொருந்தக் கூடிய வழிகாட்டுதலே. தகவல்தொடர்பு சாதனங் களால் நமது வாழ்க்கை மேம்பட்டிருக்கிறது. ஆனால், அதைக் கொண்டு உறவுகளைக் கெடுப் பதுடன் சமூகக் குற்றங்களையும் நாம் உருவாக்கு கிறோம் என்பது நாம் அறிந்தே மேற்கொள்ளும் தவறு. இதை உணர்ந்துகொண்டு, கவனத்துடன் களைந்து எறியவேண்டியது நமது கடமை.

- சிறகடிக்கலாம்...

## இந்திய வானம் - 25
## எஸ்.ராமகிருஷ்ணன், ஓவியங்கள்: ரமேஷ் ஆச்சார்யா

### காதல் என்பது எதுவரை?

வாழ்க்கை மிகவும் வியப்பானது. சிலரது துயரங்கள் ஒருபோதும் தீர்க்கமுடியாதவை. ஆயிரம் பேர் ஆறுதல் சொன்னாலும் அமைதிகொள்ள முடியாத வேதனைகளும் இருக்கத்தானே செய்கின்றன.

பூரணா இறந்தபோது அவளுக்கு வயது 24. காதல், பூரணாவுக்கு அளவு இல்லாத சந்தோஷத்தையும் சகித்துக்கொள்ள முடியாத வேதனையையும் ஒன்றாகத் தந்தது. கண்ணீரும் காதலும் பிரிக்க முடியாதவை.

ஒரு காதல் எப்படித் தொடங்குகிறது? இதுவரை அதைக் கணிக்க முடிந்தவர் எவரும் இல்லை. யார் யாரை எப்போது காதலிக்கத் தொடங்கு வார்கள், காதல் அவர்களை என்ன செய்யும், காதலித்தவர்கள் ஒன்று சேர்வார்களா... பிரிந்துவிடுவார்களா, திருமணத்தோடு காதல் முடிந்து விடுமா... இல்லை பேரன்-பேத்திகள் பெற்று வாழும்நாள் முழுக்க காதலும் நீடிக்குமா..? இந்தக் கேள்விகள் எதற்கும் யாராலும் பதில் தந்துவிட முடியாது.

நாஜிக்களின் யூதப் படுகொலை முகாமில் 70 வயதான ஒரு பெண், தான் எப்போது கொல்லப்படுவோம் எனத் தெரியாத பயமும் நடுக்கமும் கொண்டிருந்தாள். அவள் ஒவ்வோர் இரவும் மெழுகுவத்தி வெளிச்சத்தில் ஒரு காகிதத்தைப் பிரித்து, மௌனமாகப் படித்து கண்ணீர்விடுவாள். அப்படி என்ன படிக்கிறாள், அந்தக் காகிதத்தில் என்ன எழுதப்பட்டிருக்கிறது என ஒருவருக்கும் தெரியாது. ஒருநாள், விஷவாயு செலுத்திக் கொல்லப்படும் பட்டியலில் அவள் பெயரும் இருந்தது. அவளை நிர்வாணமாக்கி, குளிக்கவைத்து விஷவாயு செலுத்தப்படும் இடத்துக்கு அழைத்துப்போனார்கள். அப்போதும் அவள் உள்ளங்கையில் அந்தக் காகிதத்தைச் சுருட்டி வைத்திருந்தாள்.

விஷவாயு செலுத்தப்பட்டு, அவள் இறந்து உடல் விறைத்துக் கிடந்தபோது, அவள் கையில் இருந்த கடிதத்தை ஒரு ராணுவவீரன் பிடுங்கி படித்துப்பார்த்தான்.

அது அந்தப் பெண்ணுக்கு எழுதப்பட்ட காதல் கடிதம். ஆம்... காதலன் அவளுக்கு அளித்த முதல் கடிதம். அந்தக் கடிதத்தைப் படித்த ராணுவ வீரனுக்கு அழுகையைக் கட்டுப்படுத்த முடியவில்லை.

சாகும் நிமிடம் வரை ஒரு பெண் தனது காதல் கடிதத்தைப் படித்துக் கொண்டே இருந்திருக்கிறாள். அது ஒரு நிறைவேறாத காதல். தான் இளமையில் காதலிக்கப்பட்டிருக்கிறோம்; தனக்காக ஒருவன் எதையும் செய்யத் தயாராக இருந்திருக்கிறான்; நாம் புரிந்துகொள்ளாமல் அதைப் புறக்கணித்துவிட்டோம் என அந்த முதியவள் சாகும் நாள் வரை அழுதிருக்கிறாள். காதல் என்பது வாலிபத்தோடு தீர்ந்துவிடுவது இல்லைதானா?



ஆயிரமாயிரம் காதல் கதைகள், நிகழ்வுகள் காதலைக் கொண்டாடுகின்றன. அதற்கு இணையாகவோ, அதிகமாகவோ காதலால் வீழ்ந்தவர்களும் ஏமாற்றப்பட்டவர்களும் காதலித்துத் திருமணம் செய்துகொண்டு மணமுறிவு பெற்றவர்களின் கதைகளும் இருக்கத்தான் செய்கின்றன.

காதலிக்கும் ஆசை பதின்வயதில் தொடங்கிவிடுகிறது; எந்த வயதில் முடிவடைகிறது... காதலுக்கு வயதுக்கும் தொடர்பு இல்லைதானா? காற்றைப்போலத்தான் காதலும் நுழையாத இடமே இல்லை. பூரணாவுக்கும் அப்படித்தான் காதல் தொடங்கியது. டேபிள் டென்னிஸ் விளையாட்டுப் போட்டிக்காக தனது கோச் உடன் சென்னை வந்திருந்தாள். அப்போது அவளுக்கு வயது 18. தனக்குத் தெரிந்த பேராசிரியர் செபாஸ்டியன் வீட்டில் தங்கலாம் என கோச் சொன்னதை பூரணா ஏற்றுக்கொண்டாள். அது அண்ணா நகரில் இருந்த பெரிய வீடு. பேராசிரியரும் அவரது மனைவியும் மட்டும் இருந்தார்கள். அவரது பையன் கான்பூர் ஐ.ஐ.டி-யில் படித்துக்கொண்டிருந்தான். பேராசிரியர் தனது மகன் ஸ்டீபன் அறையை பூரணா உபயோகித்துக் கொள்ளலாம் என மாடிக்குப் போகச்சொன்னார்.

மாடி அறையின் சுவரில் பாப் மார்லேயின் பெரிய போஸ்டர் ஒட்டப்பட்டிருந்தது. மேஜையில் பெரிய மியூஸிக் சிஸ்டம், கம்ப்யூட்டர் இருந்தன. சுழலும் புத்தக அலமாரி, அழகான படுக்கை, கண்ணாடி அலமாரி முழுவதும் வெற்றிக் கோப்பைகள்; பரிசுப்பொருட்கள். அங்கு இருந்த ஒவ்வொரு பொருளாக எடுத்துப் பார்த்து வியந்து கொண்டிருந்தாள் பூரணா.

நூற்றுக்கணக்கான மியூஸிக் சி.டி-க்களைப் பார்த்துவிட்டு, 'இவ்வளவு தீவிரமாக மியூஸிக் கேட்பவனா?!' என ஆச்சர்யம் அடைந்தாள். அந்த அறையில் ஸ்டீபனின் புகைப்படம் ஒன்றுகூட இல்லை. ஸ்டீபன் எப்படி இருப்பான் எனக் காண ஆசையாக இருந்தது. மேசையில், பரிசுக் கோப்பைகளில் அவனது புகைப்படம் எங்காவது உள்ளதா எனத் தேடி சலித்துப்போனாள். எதிலும் அவனது புகைப்படம் இல்லை.

தன் அறையில் இப்படி ஒரு பெண் வந்து தங்கியிருப்பாள் என ஸ்டீபன் ஒருநாளும் நினைத் திருக்க மாட்டான் என நினைத்தபோது பூரணாவுக்குச் சிரிப்பாக வந்தது.

இரவு அவனது படுக்கையில் உறங்கி, அவனது துண்டில் தலைதுவட்டி, அவனது கண்ணாடியில் முகம்பார்த்து விளையாட்டுப் போட்டிக்காகக் கிளம்பிச் சென்றாள்.

போவதற்கு முன்பாக ஒரு ஸ்கெட்ச் பேனாவை எடுத்து, அறையில் தொங்கிக்கொண்டிருந்த காலண்டரில் 'நைஸ் ரூம், ஐ லைக் இட்' என

எழுதிவிட்டு, கீழே ‘பூரணா’ என கையெழுத்துப் போட்டுவிட்டுப் போய்விட்டாள்.

ஆறு மாதங்களுக்குப் பிறகு விடுமுறைக்காக சென்னை வந்த ஸ்டீபன், ஒருநாள் தற்செயலாக காலண்டரைப் புரட்டிக்கொண்டிருந்தபோது, ஆரஞ்சு நிற ஸ்கெட்ச் பென்னால் எழுதப்பட்ட பாராட்டையும் பெண் பெயரையும் பார்த்தபோது வியப்பாக இருந்தது.

‘யார் பூரணா, அவள் எப்படி தன் அறைக்கு வந்து தங்கினாள், இதைப் பற்றி அம்மாவிடம் எப்படிக் கேட்பது?’ - அவனுக்குள் ஆசை உருவானது. அவன் டிபன் சாப்பிடும் நேரம் ‘யாரும்மா பூரணா?’ எனக் கேட்டான்.

ஸ்டீபன் அம்மாவுக்கு ‘பூரணா யார்?’ எனத் தெரியவில்லை. இரண்டு நாட்களுக்குப் பிறகு அப்பாவோடு டென்னிஸ் விளையாடப் போனபோது ‘உங்க ஃப்ரெண்ட் யாராவது வந்து என் ரூம்ல தங்கியிருந்தாங்களா?’ என எதுவும் தெரியாதவன் போலக்கேட்டான்.



‘அந்தப் பொண்ணு பெங்களூரு செயின்ட் ஜோசப் காலேஜ்ல படிக்கிறா. டேபிள் டென்னிஸ் சேம்பியன். என் ஃப்ரெண்ட் அழைச்சிக்கிட்டு வந்திருந்தா. அவதான் உன் ரூம்ல தங்கியிருந்தா. ஏதாவது பொருளைக் காணோமா?’ எனக் கேட்டார் அப்பா.

‘அப்படி ஒன்றும் இல்லை...’ எனச் சமாளித்த படியே பூரணாவைப் பற்றி கனவு காணத் தொடங்கினான் ஸ்டீபன்.

அடுத்த நாளே அவளைக் காண்பதற்காக ஸ்டீபன் பெங்களூரு கிளம்பிப்போனான். அவளிடம் போய் என்ன பேசுவது, ‘என் அறையில் வந்து தங்கியதற்கு நன்றி’ எனச் சொல்வதா, இல்லை ‘உங்கள் பாராட்டுக் குரிய ஸ்டீபன் நான்தான்’ என அறிமுகம் செய்து கொள்வதா... அவனுக்குக் குழப்பமாக இருந்தது.

கல்லூரியில் போய் விசாரித்து, அவளை எளிதாக அடையாளம் கண்டுவிட்டான். அவன் மனதில் நினைத்ததைவிடவும் பூரணா உயரம் அதிகம்; அழகாக இருந்தாள். அவள் கடந்துபோவதை மௌனமாகப் பார்த்துக்கொண்டே இருந்து விட்டு, ஒரு வார்த்தைகூட அவளிடம் பேசாமல் சென்னைக்குத் திரும்பிவிட்டான்.

விடுமுறை முடிந்து கான்பூர் போகவேண்டிய நாள் வந்தது. அதற்குள் இன்னொரு முறை அவளைப் பார்த்துவர வேண்டும் என அவசரமாக பெங்களூரு சென்றான். இந்த முறை அவளிடம் எப்படியாவது பேசிவிட வேண்டும். ஏதாவது அவளுக்குக் கொடுக்க வேண்டும் என ஒரு புத்தகம் வாங்கி வைத்துக்கொண்டான்.

அன்றைக்கு அவள் கல்லூரிக்கே வரவில்லை. அவளது முகவரி தேடிக் கண்டுபிடித்து, அவள் அப்பார்ட்மென்ட்டுக்கே போய்விட்டான். ஆனால், வீட்டுக் கதவைத் தட்டி அவளை அழைத்துப் பேச மனம் வரவில்லை. ‘நம் அதிர்ஷ்டம் அவ்வளவு தான்’ என அந்தப் புத்தகத்தோடு சென்னை திரும்பி, மறுநாள் கான்பூர் போய்விட்டான்.

கான்பூருக்குப் போன பிறகும் அவனால் பூரணாவின் நினைவில் இருந்து விடுபட முடியவில்லை. திடீரென ஒருநாள் கிளம்பி பெங்களூ ருக்குச் சென்றான். இந்த முறை தயக்கத்தைத் தாண்டி அவளிடம் பேசிவிட்டான். அவளால் நம்பவே முடியவில்லை, ‘இவன்தான் ஸ்டீபனா... இவன்

அறையில்தான் தங்கியிருந்தோமா, இப்போது எதற்காக தன்னைத் தேடி வந்திருக்கிறான்?'

அவர்கள் ஒரு காபி ஷாப்பில் அமர்ந்து பேசத் தொடங்கினார்கள். அவளுக்கு நன்றி தெரிவிக்க வந்ததாகச் சொன்னான் ஸ்டீபன். அவளும் 'உங்கள் அறை மிக நன்றாக உள்ளது. நிறைய மியூஸிக் கேட்பீர்கள்போல் இருக்கிறது' எனப் பாராட்டிப் பேசினாள். அப்போது அவளிடம் 'உன்னைப் பார்க்க இதற்கு முன்னர் இரண்டு முறை வந்திருக்கிறேன்' எனச் சொல்லிக்கொள்ளவில்லை.

அவளிடம் தனது தொலைபேசி எண்ணைத் தந்துவிட்டு, அன்று மாலை பெங்களூரைவிட்டுப் புறப்பட்டபோது மனம் மகிழ்ச்சியால் ததும்பியது. விமானத்தில் காதல் பாடல்களாகவே கேட்டுக் கொண்டு வந்தான்.

ஆனால், அவன் நினைத்ததுபோல அவள் போனில் அழைக்கவில்லை; அவன் அழைத்தபோது பதில் அளிக்கவில்லை. ஒருமுறை அவளுக்குக் கோபமாக மெசேஜ் அனுப்பியபோது அவள், 'என்னைத் தொந்தரவு செய்ய வேண்டாம்' என பதில் அனுப்பினாள். வேதனை அடைந்த ஸ்டீபன், அதன் பிறகு அவளைத் தொடர்புகொள்ளவே இல்லை.

ஆறு மாதங்களுக்குப் பிறகு ஒருநாள் இரவு திடீரென அவளிடம் இருந்து போன் வந்தது. எதற்காக தன்னை அழைக்கிறாள் என வியந்தபடி பேசினான். 'பிறந்த நாள் வாழ்த்துகள்' என்றாள்.

'உனக்கு எப்படித் தெரியும்?' எனக் கேட்டான்.

'உன் அறைக்கு வந்தபோது அங்கே இருந்த ஒரு பரிசுப்பொருளில் உனது பிறந்த தேதி இருந்தது. அதை மனதிலே வைத்திருந்தேன்.'

' 'தொந்தரவு செய்யாதே' எனச் சொன்ன நீ, எதற்காக என் பிறந்த நாளை மனதில் வைத்திருக்கிறாய்?' எனக் கேட்டான்.

'நேரில் வா சொல்கிறேன்' என்றாள் பூரணா.

அப்படித்தான் அவர்கள் காதல் தொடங்கியது. கான்பூரில் இருந்து அடிக்கடி ஸ்டீபன் பெங்களூரு வந்தான். விளையாட்டுப் போட்டி எனப் பொய்

சொல்லி, பூரணா கான்பூர் சென்றாள். இருவரும், சந்தோஷமாகக் காதலைக் கொண்டாடினார்கள்; உடல் இன்பத்தை அனுபவித்தார்கள். நிறையப் புகைப்படங்கள், பரிசுப்பொருட்கள், பயணங்கள், மறக்கமுடியாத நிகழ்வுகள்...

படித்து முடிக்கும் வரை இருவரும் காதலித்தார்கள். பூரணாவின் வீட்டுக்கு விஷயம் தெரியவந்தது. அவர்கள் நேரடியாக ஸ்டீபன் வீட்டுக்குப் போய் சண்டைபோட்டார்கள். ஸ்டீபன் அவளைத் திருமணம் செய்துகொள்வதாக ஒப்புக்கொண்டான். ஆனால் 'இரண்டு வருடங்கள் அமெரிக்காவில் வேலை செய்துவிட்டு வந்து, திருமணம் செய்து கொள்கிறேன்' என்றான்.

அதை, பூரணா வீட்டில் ஒப்புக்கொள்ளவில்லை.

'என்னால் இப்போது உடனே திருமணம் செய்து கொள்ள முடியாது' என ஸ்டீபன் கடுமையாகச் சொல்லிவிட்டான். இது பூரணாவுக்கும் ஸ்டீபனுக்கும் இடையில் பிரச்னை ஆனது. ஒரு வருஷம் காத்திருப்பதாகச் சொன்னாள் பூரணா. ஸ்டீபன் கிளம்பி அமெரிக்கா போய்விட்டான். இடையில் அவளுடன் போனில்கூடப் பேசவில்லை.

ஓர் ஆண்டு முடிந்த பிறகும் ஸ்டீபன் குடும்பத்தில் இருந்து பதில் வரவே இல்லை. அவர்களைத் தேடி பூரணா சென்னைக்கு வந்தாள். அந்த வீட்டை வாடகைக்கு விட்டுவிட்டு அவர்களும் அமெரிக்கா போய்விட்ட செய்தி கேள்விப்பட்டதும் நொறுங்கிப்போனாள். தன்னை திட்டமிட்டு ஏமாற்றிவிட்டார்கள் என நினைத்து அவள் தந்தையிடம் முறையிடவே, போலீஸில் புகார் கொடுத்துவிட்டார்கள்.

அடுத்த ஆறு மாதங்களுக்கு பிறகு ஸ்டீபன் பெற்றோர் சென்னை திரும்பினார்கள். ஊர் வந்து சேர்ந்தவுடன் அவர்களை விசாரணைக்காக அழைத்துப்போனது போலீஸ். இதை அறிந்த ஸ்டீபன், அவசரமாக சென்னை வந்து சேர்ந்தான்.

'என் மீது போலீஸில் புகார் கொடுத்த பூரணாவைத் திருமணம் செய்துகொள்ள முடியாது' எனக் கத்தி சண்டையிட்டான்.

முடிவில் பேசி சமாதானம் செய்து பூரணாவுக்கும் ஸ்டீபனுக்கும் திருமணம் நடந்தது. இரண்டு வாரங்கள் ஹனிமூன் போய்வந்தான். பெங்களூ

ருக்கே வேலையை மாற்றிக்கொண்டு வந்து விடுவதாகச் சொல்லி அமெரிக்கா சென்றான். அதுபோலவே பெங்களூருக்குத் திரும்பிவந்து வேலைபார்க்கத் தொடங்கினான். ஆனால், அவனது சுபாவம் முற்றிலும் மாறியிருந்தது.

அவளை அடித்து உதைத்து, சூடுவைத்து எவ்வளவு கஷ்டப்படுத்த முடியுமோ அவ்வளவு கஷ்டப் படுத்தினான். அவளும் ஸ்டீபனின் அலுவலகக் காகிதங்களைக் கிழித்து எரித்து, உணவை அவன் மீது வீசி அடித்து, மோசமாகத் திட்டி சண்டை யிட்டு ஆர்ப்பாட்டம் செய்தாள். மணவாழ்க்கை நரகம் ஆனது.

இனி ஸ்டீபனுடன் வாழ முடியாது என அவள் பிரிந்துபோக முயன்றபோது, தன் வாழ்க்கையைக் கெடுத்துவிட்டு எங்கே ஓடுகிறாய் என சண்டையிட்டு அவள் கையை உடைத்துவிட்டான். மருத்துவ சிகிச்சை எடுத்துக்கொண்டு இரண்டு மாதங்கள் ஓய்வில் இருந்தாள். அப்போது ஒருநாள் அதிகம் குடித்துவிட்டு வந்து அவளுடன் வன்புணர்ச்சியில் ஈடுபட்டான் ஸ்டீபன். அதில் அவள் கர்ப்பம் ஆனாள். அந்தக் குழந்தை தனக்கு வேண்டாம் கலைத்துவிடப்போகிறேன் என பூரணா சண்டைபோட்டாள். அதில் மீண்டும் அவர்களுக்குள் வாக்குவாதம் ஏற்பட்டது. 'உயிரோடு இருந்தால்தானே நீ சொல்வதை நான் கேட்க வேண்டும்' என, முடிவாக ஒருநாள் அவள் தூக்கிட்டு தற்கொலை செய்து இறந்துவிட்டாள். அப்போது அவள் வயது 24.




வேகவேகமாக சந்தோஷங்களை அனுபவித்து, வேகவேகமாக வாழ்க்கையை முடித்துக்கொண்டு விட்டாள் பூரணா. இப்போது ஸ்டீபன் மீண்டும் அமெரிக்கா போய்விட்டான்.

ஒருவேளை அவர்கள் காதலிக்காமல் போயிருந்தால் இப்படி எல்லாம் நடந்திருக்காதோ, இல்லை... அவர்கள் செய்தது காதல் இல்லையா? காதலிக்கும் போது இல்லாத ஈகோவும் வேறுபாடுகளும் திருமணத்துக்குப் பின்னர் ஏன் உருவாகின்றன? பரஸ்பரப் புரிதல் இல்லாமல் இருவர் காதலிக்க முடியுமா என்ன... இதுபோன்ற கேள்விகள் எல்லாம் வயதானவர்களின் வெற்றுப் புலம்பல்களா?

காதலை அங்கீகரிக்காத சென்ற தலைமுறைப் பெற்றோர்கள் பயந்ததுபோலவேதான், காதலை அங்கீரிக்கும் இந்தத் தலைமுறைப் பெற்றோர்களும் காதலைக் கண்டு பயப்படுகிறார்கள். இருவருக்கும் உள்ள ஒரே கேள்வி ‘எதிர்காலம் என்னவாகும்?’ என்பதே. இதற்கான விடை யாருக்கும் தெரியாது.

காதல், எதிர்காலம் பற்றி கவலைப்படுவது இல்லை; பயம்கொள்வது இல்லை. காதலின் பலமும் அதுதான்... பலவீனமும் அதுதான்.

- சிறகடிக்கலாம்...

## இந்திய வானம் - 26
## எஸ்.ராமகிருஷ்ணன், ஓவியம்: ரமேஷ் ஆச்சார்யா

மத்தியப்பிரதேசத்தில் உள்ள பழைமையான நகரம் விதிஷா. அங்கே ஒரு வெள்ளைக்காரரர், மண்பாண்டங்கள் விற்றுக்கொண்டிருப்பதைக் கண்டேன். ஆச்சர்யமாக இருந்தது.

உள்ளூர் ஆட்களுடன் ஒருவராக உட்கார்ந்து, தான் செய்த மண்குவளைகள், பானைகளை விற்றுக்கொண்டிருந்தார். அவரிடம் பேசியபோது, தனது பெயர் அட்ரியன் என்றும், சில ஆண்டுகளுக்கு முன்னர் ஹங்கேரியில் இருந்து இந்தியாவுக்கு ஒரு பயணியாக வந்ததாகவும், இங்கே குயவர்களின் கலைத்திறனைக் கண்டு வியந்து, தானும் பானை செய்யக் கற்றுக்கொண்டு, இந்த எளிமையான வாழ்க்கையை வாழ்ந்துவருவதாகவும் சொன்னார்.

இப்படி இந்தியர் எவரும் ஏதாவது நாட்டுக்குப் பயணம் போய், அங்கே பானை செய்ய கற்றுக்கொண்டு தங்கிவிடுவார்களா என்ன? இந்த மனது எப்படி வருகிறது என யோசனையாக இருந்தது. அட்ரியன் செய்த மண்குவளைகளில் ஒன்றை வாங்கினேன். விலை 10 ரூபாய். ஒரு நாளில் அதிகபட்சம் அவர் 200 ரூபாய் சம்பாதிக்கக்கூடும். ‘இந்தச் சம்பாத்தியம் போதுமா?’ எனக் கேட்டேன்.



‘இப்படி வாழ்வதில் மகிழ்ச்சியாக இருக்கிறேன். கிடைக்கும் பணம் போதுமானது’ என்றார் பணமும் பொருளும் ஆடம்பரமான வாழ்க்கையும்தான் மகிழ்ச்சியின் அடையாளங்கள் எனப் பலரும் நினைக்கும் இன்றையச் சூழலில், அதை வேண்டாம் என ஒதுக்கிவிட்டு, இப்படி எளிய வாழ்க்கையை மேற்கொண்டு, அதில் முழுமையான சந்தோஷத்தை அனுபவித்துவருவது சிறப்பானதாகத் தோன்றியது.

அட்ரியனைப் போல எத்தனையோ பேர் ‘வாழ்வில் எது சந்தோஷம்?’ என்பதைத் தாங்களே கண்டுபிடித்திருக்கிறார்கள்; அதை ஏற்றுக்கொண்டு நிறைவான வாழ்க்கையும் வாழ்கிறார்கள். ஆனால், கை நிறைய சம்பாதித்தும் வாழ்வில் சந்தோஷமே இல்லை என்பதற்காக குடி, ஆட்டம், பாட்டம் என தன்னைக் கரைத்துக்கொண்டு, அதில் தற்காலிக மகிழ்ச்சி மட்டுமே கிடைக்கிறது எனப் புலம்பும் பலரும் நம்மோடுதான் இருக்கிறார்கள்.

வசதியான வீடு, புதிய கார், கை நிறைய பணம், உயர்ந்த பதவி, விருப்பமான உணவுகள், ஆடம்பர வாழ்க்கை இவைதான் சந்தோஷத்தின் அடையாளங்களாக முன்வைக்கப்படுகின்றன. இவை, விலை கொடுத்துப் பெறும் சந்தோஷங்கள். ஆனால், வாழ்வில் விலையில்லாத சந்தோஷங்கள் நிறைய இருக்கின்றன. சூரியனும் நிலவும் மலைச்சிகரங்களும் புல்வெளிகளும் அருவிகளும் ஆறுகளும் கடலும் வானும் ஒளிரும் நட்சத்திரங்களும் பறவைக் கூட்டங்களும் எல்லோருக்கும் மகிழ்ச்சி தருகின்றன. இவை விலையில்லாத சந்தோஷங்கள். இதன் அருமையை நாம் முழுமையாக உணர்வதே இல்லை.

‘மங்கோலிய அரசன் ஒருவன் படையெடுத்துப் போனபோது, ஓர் இடத்தில் பறவை ஒன்றின் இனிமையான பாடலைக் கேட்டான். அந்தப் பாடல் அளித்த சந்தோஷத்தில் தனக்கு அந்தப் பாடல் வேண்டும் என்பதற்காக பறவையைப் பிடித்துவரும்படி கட்டளையிட்டான். அந்தப் பறவை ஒரு மரத்தில் இருந்த காரணத்தால், அந்த மரத்தைக் கைப்பற்ற ஆணை பிறப்பித்தான். பறவை அங்கு இருந்து பறக்கவே, அதைப் பிடிப்பதற்காக இடையில் உள்ள ஊர்களைக் கைப்பற்றினான்.

அப்படியும் பறவை அவனைவிட்டுத் தப்பிப் பறந்துபோனது. அதைப் பிடிப்பதற்காக அது பறந்த ஒட்டுமொத்த ராஜ்ஜியத்தையும் அவன் கைப்பற்றினான். அப்போதும் அந்தப் பறவை அவன் கைவசப்படவில்லை. ஆனால், ஒரு நாடு அவன் வசமானது. அதை, தன் நாட்டுடன் இணைத்துக்கொண்டான். பறவையைத் தேடிச் சென்ற அவன், கடைசி வரை

தன் வீடு திரும்பவே இல்லை' என ஏ.கே.ராமானுஜன் ஒரு கவிதை எழுதியிருக்கிறார்.

பறவையின் பாடலைத் தேடிச் செல்லும் ஒருவன், அதை அடைவதற்காக எவ்வளவு அழிவுகளை உண்டுபண்ணுகிறான் என்பது நம் வாழ்வின் குறியீடாகவே உள்ளது. நமது சந்தோஷத்துக்காக யார் யாரோ கஷ்டப் படுகிறார்கள்; இம்சிக்கப்படுகிறார்கள். அதை நாம் கண்டுகொள்வதே இல்லை.

பிரான்சுவா லெலார்டு என்கிற பிரெஞ்சு உளவியல் அறிஞர், 'மகிழ்ச்சி என்றால் என்ன?' எனத் தேடிச்செல்லும் ஒருவரைப் பற்றி நாவல் எழுதியிருக்கிறார். 20 லட்சம் பிரதிகள் விற்று சாதனைபுரிந்த அந்த நாவலின் பெயர் 'ஹெக்டர் அண்ட் தி செர்ச் ஃபார் ஹேப்பினெஸ்'. இந்த நாவல், திரைப்படமாகவும் வெளியாகியிருக்கிறது.

ஹெக்டர் என்கிற ஓர் உளவியல் மருத்துவருக்கு, ஒருநாள் 'உண்மையான மகிழ்ச்சி என்பது எது... அதை எப்படி அறிந்துகொள்வது?' என்ற சந்தேகம் உருவாகிறது. மகிழ்ச்சியைத் தேடி பயணிக்கத் தொடங்குகிறார். அதை, தான் கண்டறிந்துவிட்டால் தன்னிடம் மனநல சிகிச்சைக்கு வரும் நோயாளிகளுக்கு அதைக்கொண்டு உதவிசெய்ய முடியும் என நினைக்கிறார்.

தனது காதலி கிளாராவையும் தன்னோடு அழைத்துப்போக ஆசைப்படுகிறார். அவள் அலுவலக நெருக்கடி காரணமாக உடன் வர மறுக்கிறாள். ஹெக்டர் தனியே கிளம்புகிறார்.

அவரது பயணத்தின் முதல் புள்ளி, சீனா. இதற்காக விமானப் பயணம் மேற்கொள்ளும்போது அதிர்ஷ்டவசமாக அவருக்கு பிசினஸ் கிளாஸ் டிக்கெட்டில் பயணம்செய்ய வாய்ப்பு கிடைக் கிறது. சொகுசான இருக்கை, சுவையான ஷாம்பெயின், விதவிதமான உணவு வகைகள் என பயணத்தில் சகல வசதிகளையும் அனுபவிக்கும் ஹெக்டருக்கு 'மகிழ்ச்சி என்பது, எதிர்பாராமல் கிடைக்கும் ஒன்று' என்ற எண்ணம் உருவாகிறது. அதை, தனது குறிப்பேட்டில் குறித்துக்கொள்கிறார்.

சீனாவுக்குச் சென்ற அவர், தன் நண்பனுடன் சிறந்த உணவகம் சென்று விலை உயர்ந்த உணவை ரசித்துச் சாப்பிடுகிறார். அப்போது 'அதிகமான

பணமும் வசதியும் கிடைப்பதுதான் மகிழ்ச்சி' என்ற ஓர் எண்ணம் உருவாகிறது. அதையும் குறித்துக்கொள்கிறார்.

சீனாவில் இருந்த நாட்களில் ஒரு பெண்ணுடன் பழகுகிறார். அப்போது 'ஒரே நேரத்தில் நிறையப் பெண்களுடன் பழகுவதுதான் மகிழ்ச்சி' என்ற நினைப்பு உருவாகிறது. சில நாட்களுக்குப் பிறகு, அவளின் கடந்த காலத்தைத் தெரிந்துகொள்ளும்போது மனவருத்தம் அடைகிறார். அப்போது 'ஒருவரைப் பற்றி முழுமையாகத் தெரிந்துகொள்ளாமல் இருப்பதே சந்தோஷம்' என அவருக்குத் தோன்றுகிறது. அதையும் தனது குறிப்பேட்டில் எழுதிக்கொள்கிறார்.

திபெத்திய மடாலயம் ஒன்றுக்குச் செல்கிறார் ஹெக்டர். அங்கே துறவிகள் அமைதியாக, எளிமையாக, சந்தோஷமாக வாழ்வதைக் காண்கிறார். 'எது எப்படி மகிழ்ச்சியை உருவாக்குகிறது?' என ஆராயும்போது, அந்தத் தருணங்களில் அவர்கள் இயற்கையோடு இணைந்து வாழ்கிறார்கள் என்பதைக் கண்டறிகிறார்.

ஹெக்டர் தன்னுடைய பயணத்தில் எதிர்ப்படும் மனிதர்களிடம் 'அவர்கள் மகிழ்ச்சியாக இருக்கிறார்களா... மகிழ்ச்சி என்பது என்ன?' எனத் தொடர்ந்து விசாரிக்கிறார். அவர்களின் பதில்களையும் தொகுத்துக்கொள்கிறார்.



இப்படியாக அவரது பயணத்தின் ஊடே அவர் சந்திக்கும் மனிதர்களும் அனுபவங்களும் 'எது மகிழ்ச்சி?' என்பதைப் பற்றிய வரையறைகளை உருவாக்குகின்றன. அதில் இருந்து எது மகிழ்ச்சி என்பதைப் பட்டியலிடத் தொடங்குகிறார்.

'அதில் சொந்த வீடு, சிறந்த நண்பர்கள், விரும்பிய வேலை இவைதான் மகிழ்ச்சி' எனப் பலரும் நினைக்கிறார்கள். 'நாம் எதுவாக இருக்கிறோமோ, அதற்காகப் பாராட்டப்படுவதே சிறந்த மகிழ்ச்சி' என ஒரு சிலர் நினைக்கிறார்கள்.

'மற்றவர்களுக்கு உதவி செய்வதே உண்மையான மகிழ்ச்சி' எனச் சிலரும், 'மகிழ்ச்சி என்பது ஒரு கண்ணோட்டம். எந்த ஒன்றையும் நாம் எப்படி எடுத்துக்கொள்கிறோம் என்பதில் இருந்தே மகிழ்ச்சி பிறக்கிறது' என இன்னும் சிலரும், 'சும்மா இருப்பதே மகிழ்ச்சி' என துறவிகளும், 'அடுத்தவரைப் புரிந்துகொண்டு ஆதரவாக நடந்துகொள்வதே மகிழ்ச்சி' என்று மேலும் சிலரும் நினைக்கிறார்கள்.

சந்தோஷமோ வேதனையோ இரண்டையும் பெண்கள் முழுமையாக உணர்கிறார்கள்; அனுபவிக்கிறார்கள். ஆண்கள், சந்தோஷத்தை உணரும்விதத்தில் வேதனையை உணர்வதே இல்லை. தனது வேதனையைத் தாங்கிக்கொள்ளத் தெரியாதவர்கள் ஆண்கள்.

'மகிழ்ச்சி என்பது எது?' என யாராலும் வரையறை செய்ய இயலாது. ஆனால், நம்மால் மகிழ்ச்சியை உருவாக்க முடியும்; பகிர்ந்து தர முடியும்; அடுத்தவரை மகிழ்ச்சிப்படுத்த முடியும். அதற்கு நாம் தயாராக இருக்க வேண்டும்' என்பதை ஹெக்டர் உணர்ந்துகொள்கிறார். ஒரு மகிழ்ச்சி, ஆயிரம் வருத்தங்களை விலகி ஓடச்செய்துவிடும் என்கிறது சீனப் பழமொழி.

ஹெக்டரைப் போலவே நாம் ஒவ்வொரு வரும் மகிழ்ச்சியின் பட்டியல் ஒன்றை வைத்திருக்கிறோம். அதில் சில பொதுவானவை; பல நாமே உருவாக்கிக்கொண்டவை. சந்தோஷத்தைத் தேடும் பலரும், எதிர்காலத்தில்தான் அது கிடைக்கக்கூடும் என நம்புகிறார்கள். இன்றைய வாழ்வு சந்தோஷமானது அல்ல. இதன் நெருக்கடிகளில் சந்தோஷங்கள் காணாமல்போய்விடுகின்றன எனப் புலம்புகிறார்கள்.

குழந்தைகள், கடலைப் பார்த்து சந்தோஷப்படுவதைவிடவும் கடற்கரை மணலைக் கண்டு அதிகம் சந்தோஷம்கொள்கிறார்கள். அது அவர்களின் மன இயல்பு.

‘எது சந்தோஷம் தரும்?’ என்பதைப்போலவே ‘எவை எல்லாம் சந்தோஷம் தராதவை?’ என்ற பட்டியலையும் நாம் வைத்திருக்கிறோம். உண்மையில் இரண்டும் எதிர் எதிரானவை அல்ல. நமக்கு எது மகிழ்ச்சி தரவில்லையோ, அது வேறு ஒருவருக்கு மகிழ்ச்சி அளிக்கக்கூடியது.

ஜப்பானின் புகழ்பெற்ற ஜென் கவிஞர் ரியோகான், ஒருமுறை நண்பர் வீட்டுக்குச் சென்றிருந்தார். புகழ்பெற்ற கவிஞர் தன் வீடு தேடி வந்திருக்கிறாரே என விதவிதமான உணவு வகைகளைச் சமைத்துவைத்தார்கள். அவர் உடுத்திக்கொள்ள பட்டாடைகளைப் பரிசாகத் தந்தார்கள். அவருக்குப் பட்டாடையோ, ருசியான உணவோ எதுவும் பிடிக்கவில்லை. இவரை எப்படிச் சந்தோஷப்படுத்துவது என அவர்களுக்குப் புரியவில்லை.

அவர்கள் வீட்டின் பின்புறம் சிறிய நீரோடை ஒன்று ஓடிக்கொண்டிருந்தது. அதைக் காட்டுவதற்காக ரியோகானை அழைத்துப் போனார்கள். அந்த ஓடையை, ரியோகான் ஒரு சிறுவனைப்போல தாவிக்குதித்துக் கடந்தார். அப்போது அவரது முகத்தில் சந்தோஷம் பீறிட்டது. அடுத்த சில நிமிடங்களுக்கு அவர் இந்தப் பக்கம் அந்தப் பக்கம் என மாறி மாறித் தாவிக்குதித்து விளையாடினார். எல்லையில்லாத மகிழ்ச்சி அடைந்தவரைப்போல சொன்னார்... ‘எத்தனை வருடங்களுக்குப் பிறகு இப்படி ஒரு நீரோடையைத் தாவிக் குதிக்கிறேன். இதைவிட சந்தோஷம் வேறு என்ன இருக்கிறது?’

விருந்து அளித்த நண்பருக்கு, ரியோகானைப் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆனால், சந்தோஷத்தில் அரியது, நாம் பால்ய வயதில் அடைந்த மகிழ்ச்சியை மறுபடியும் அடைவது. அதைத்தான் ரியோகான் செய்திருக்கிறார்.

எந்தவிதமான சிரமமும் இன்றி, தனக்கான பாதையை அமைத்துக்கொண்டு ஓடுகிறது நீரோடை. அதுபோலவே இயற்கையின் புதிர் தன்மையின் ஊடே மனித மனம் தனக்கான வழியை, தானே கண்டறிந்துகொள்கிறது என்பதுதான் ரியோகானின் எண்ணம்.

ஒரு மரம் பூப்பதைக் கண்டு, மற்றொரு மரம் பொறாமைகொள்வது இல்லை. அதுதான் இயற்கையின் உன்னதம். இயற்கையில் யாவும் அதனதன் இயல்பிலேயே இருக்கின்றன. ஒவ்வொன்றையும் பிரித்து, வகைப்படுத்தி 'பயன்பாடு' என்ற கூடைக்குள் அடைக்க நினைக்கும் மனித மனமே இயற்கையைக் கூறுபோடுகிறது. மனிதனுக்குத்தான் பூவுக்கும் மணம் தேவைப்படுகிறது. மற்றபடி மணம் இருக்கிற மலர்களைப்போல, மணம் இல்லாமல் இருப்பதும் பூவின் இயல்பே. நாம் மணமற்ற மலர் என்பதை உபயோகமற்ற ஒன்று என நினைத்து விலக்கிவிடுகிறோம். அது நமது அறியாமை.

மகிழ்ச்சியை உணரும்போது நாம் நம்மை அறியத் தொடங்குகிறோம். அப்போது இயற்கையும் நாமும் வேறு அல்ல என்பதை உணர்கிறோம். மகிழ்ச்சி ஒரு திறவுகோல். அதைக் கொண்டு மனிதர்கள் பரஸ்பரம் ஒருவரை ஒருவர் அறிந்துகொள்கிறார்கள்; இணைந்து வாழ்கிறார்கள்.

சந்தோஷத்தை அனுபவிக்கும் மனிதன், 'அது முடியப்போகிறதே!' எனக் கவலைகொள்ளத் தொடங்குகிறான். 'இன்னொரு முறை அதே சந்தோஷம் கிடைக்காதா?!' என ஏங்க ஆரம்பிக்கிறான். கிடைக்காதபோது ஏமாற்றம் அடைகிறான். மகிழ்ச்சிகொள்வதற்கு எத்தனையோ வழிகள், விதங்கள் இருக்கின்றன. அதில் கலையும் இலக்கியமும் முதன்மையான வழிகள். அவை தலைமுறை தலைமுறைகளாக மனிதர்களைச் சந்தோஷப்படுத்திக் கொண்டிருக்கின்றன.

ஜப்பானிய கவிதை ஒன்று இப்படிக் கூறுகிறது...

வசந்த காலம் பூக்கிறது
அறுவடைக் கால நிலவு ஒளிர்கிறது
கோடையிலோ ஏகாந்தமான காற்று
பனிக்காலமெங்கும் வெண்பனி
வேண்டாத எண்ணங்கள் மனதில் அடையாத வரை
எல்லா காலமும் சிறப்பானதே!



இந்தியாவின் குறுக்கும் நெடுக்குமான எனது பயணத்திலும் இதையே நான் அறிந்து கொண்டிருக்கிறேன். இந்தக் கவிதையில் எல்லா காலமும் சிறப்பானதே என்பதுடன் கூடுதலாக நான் ஒரு வரி சேர்த்துக்கொள்ள விரும்புகிறேன்.

வேண்டாத எண்ணங்கள் மனதில் அடையாத வரை
எல்லா காலமும் சிறப்பானதே
எல்லா மனிதர்களும் மகிழ்ச்சியானவர்களே!

...நிறைந்தது...

